உ

மருதவாணசுவாமி துணை.

மந்திரார்ச்சன மான்மியமென்னும்

# மருதவனபுராணம்.

இஃது

கொட்டையூர்

மஹாவித்வான்

சிவக்கொழுந்து தேசிகரியற்றியது.

திருவிடைமருதூர்

கந்தசாமி தேசிகரவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

திருப்பணிப்பேட்டை

இரு கோவிந்தசாமிப் பிள்ளை முதலிய

அன்பின்வரும் சைவாபிமானிகளின் பொருளுதவியைக்கொண்டு

திருமா திருவிடைமருதூர்

வெலையூர் ...... மஹோத்ஸவம்

திருவிசலூர் ...

திருப்பணிப்பேட்டை ...... யாரும்

மயிலூர் ...... அவர்களால்

கோமல் கொத்தங்குடி ஸ்ரீ...ம்

மயிலூர் "பவர் அச்சுயந்திரசாலையில்"

வெலையூர் பதிப்பிக்கப்பட்டது.

பொன்னூர் 1896.

கும்பகோணம்

# சிறப்புப்பாயிரம்.

பொருந்நிலையா யூழியினமுறைதைச் சென்புலவர்க்கிந்திமொல் போலி
ங் கெய்தித், திருமருவு மிடைமருதின் வடசொரூறு மானியி
த்தைத் தென்சொ லாக்கிக், கருதுபுவி தனிப்புலவர் செவிக்க
முதா மெனப்பருகிக் களிக்க மேலா, மருதினைசங் கிதியினாய்
கேற்றினன் சிவக்கொழுந்து வள்ளன் மாதோ.

## இந்த நூல் அச்சிடுவதற்குப் பொருளுதவிசெய்த கனவான்களின் பெயர்.

| ஊர் பெயர். | | கனவான்களின் பெயர். |
|---|---|---|
| திருவிடைமருதூர் | ...... | சாமிநாததேசிகர்...... ௹ 15. |
| அம்மாபேட்டை | ...... | கந்தசாமி செட்டியார் ௹ 10. |
| திருமாந்துறை | ...... | சபாபதி பிள்ளை ... ... ௹ 10. |
| யெலேயூர் | ...... | முத்தைய பிள்ளை...... ௹ 15. |
| திருவிசலூர் | ...... | சாமிநாத பிள்ளை... ... ௹ 15. |
| திருப்பணிப்பேட்டை | ...... | கோவிந்தராஜ பிள்ளை. ௹ 15. |
| ஷை யூர் | ...... | சுப்பிரமணிய பிள்ளை.. ௹ 10. |
| கோமல் கொத்தங்குடி | ...... | ச. கோவிந்த பிள்ளை... ௹ 10. |
| ஷை யூர் | ...... | கணபதியாபிள்ளை...... ௹ 5. |
| யெலேயூர் | ...... | சோமசுந்தரம் பிள்ளை.. ௹ 15. |
| பொன்னூர் | ...... | சிங்காரம் பிள்ளை...... ௹ 15. |
| கும்பகோணம் புஸ்தகக்கடை | ...... | கோவிந்தசாமி நாயுடு... ௹ 5. |



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மருதவனப்புராணம்.

## பாயிரம்.

## கடவுள் வாழ்த்து.

### ஆண்டவிநாயகர்.

உலகமுணர்க் கிடுகருணை யதனொடுநெஞ் சகமதினி லுவகை யெய்தி
யலகில்புக ழுறுகவிதை நிழலதின்மெய் யன்பர்குல மதனைக் காக்கக்
குலவுமுப நிடதவரி யணைமீது பாசெழிற்செங் கோல்கைக் கொண்டாங்
கிலகுமிடை மருதாண்ட விநாயகனை யெப்பொழுது மிறைஞ்சி வாழ்வா
[ம். (௧)

### வாழ்த்து.

வேறு.

பூவுல கிதனு ளெங்கும் புகழுறு சுருதி வேள்வி
மேவுமா கமநன் னூல்கள் விளங்குக வளங்க ணீடு
பாவுக மதிக்கோர் மூன்று பயின்மழை பொழிக நாளுங்
காவிரி வருக வாரி காவலன் செங்கோல் வாழ்க. (௨)

### நூற்பயன்.

வேறு.

போற்றலுறு மருதவனப் புராணமென்னப்
புகலிதனைப் படிப்பவர்கள் கேட்போரியாரு
மாற்றரிய வினையினொடு பகையைவென்று
மன்னுநெடுஞ் செல்வமொடு மகவுமெய்தித்
தேற்றலுறு புவியினிடை நீடுவாழ்ந்து
திகழுறுவிண் ணுலகில்வள ரின்பந்துய்த்துச்
சாற்றரிய பரஞான மருவியீசன்
சரணபங் கயநிழல்வீற் றிருப்பர்மன்னோ. (௩)

[illegible]

வேறு.

பூமேவு திசைமுகன்மா லெனுமவரும் போற்றரிதாய்ப் பொருவி லாதாய்
நாமேவு செழுமறையி னுட்பொருளா யகண்டிதமாய் களின மென்னு
மாமேவு மலர்வாவிக் கயல்வாவிக் கனியுதிர்க்கும் வளத்தினீடு [வாம்.
தேமேவு பொழில்புடைசூழ் திடைமருதின் வளரொளியைச் சிந்தைசெய்

ஏகநாயகர்.

தேறுபுக ழிடைமருதி லுறையேக நாயகன்றன் செய்ய தாளு
மூறுமது மலர்க்கூந்தற் பசியமயி லுறையிடமு மோங்கு கங்கை
யாறிலகு சடைமுடியு மைம்முகமு நாற்றோளு மணிமுக் கண்ணுங்
கூறுதிற லிருமானு மொருமழுவு மனவரதங் குறித்து வாழ்வாம் (௫)

மருதவாணர்.

ஒருதவள மால்விடைமேற் புகலவுறு மொருசிறுட்டி யுதயந்தன்னிற் [யக்
பொருதனிலான் சிலைநுதல் வேற் றடங்கணுமை யொருகிலெனுடு புவனமுய்
கருதிமை யோர் கணம்புடைசூழ் கயிலையினின்றிணைந்துநிலைகயிலையென்னு
மருதநிழ லிடத்துறையு மருதவா ணக்கடவுள் மலர்த்தாள் போற்றி. (௬)

பெருநலமாமுலையம்மை.

பொன்னிலகு பணிவனைக்கன் முகிழ்த்தருள்வன் டளிர்குழைத்துப் பொற்பி லோங்கிப், பன்னுமினி மதிச்சடிலப் பவளமலை யிடத்தினிதுபடர்ந்து மேன்மை, யென்னுமுகை முகிழ்ந்துவகை பூத்துமணந் திடைமருதி லிமையோர் போற்ற, மன்னுபுகழ்ப் பெருநலமா முலையெனச்சொல் பசுங் கொடியை வணங்குவா மால். (எ)

வயிரவர்.

வேறு.

மேலையோர் கற்பகத் திறுதியிற் கதிர்கள் மேவுடுக் கணங்கள்கீ ழுறத்தீம்
பாலையொத் திடுசங் கின்றமுத் தினங்கள் பரந்திடப் புவியிடத் தெழுந்த
வேலையின் மிதந்த புகலியந்தோணி விளங்கிடு வடுகனுங் கடவுள்
காலைமென் போதை யுச்சியிற்கொள்வாங் கடுந்துயர் மாலைதீர்ந் திடவே.

படித்துறை விநாயகர்.

வேறு.

வடித்துறைவே லனகருங்கட்பாவையர்க ளொடுமெருதம்வயங்குவாள்விற்
பிடித்துறைகன் களிக்குமுகி லுலவுமலர்ப் பொழிலினிடைப் பெருகு செ

[illegible] மருவுசோ
லைமேவு, படித்துறைக்குஞ் சரத்தின்மலர்ப் பதத்துணையை மனத்துணை
யாப் பதித்து வாழ்வாம். (௯)

## குமாரக்கடவுள்.

சத்திதனை யணிவள்ளி காந்தனைக்கந் தனையசுரர் தம்மை வென்ற
சத்திதனை யுறுமலர்க்கைத் தலத்தனையன் போர்கடவி தயமாம் பங்க[னே
சத்திதனை யிடைமருதூர குமரனைசெஞ் சேபணியென் றன்பான்மன்
சத்திதனை யவனுகந்தின் னருளெனகுத் தருமஃதுன் சகாயமாமால். (௰)

## திருநந்திதேவர்.

முழுதுலகு நிறைபிரம பரமனே யெனமறைகள் மொழியுந் தன்மை
வழுவியின்பான் முதுவிலடி படுபொழுதிற் கண்டிருந்து மயங்குவோர்க்குக்
குழுவுறுமால் விரிஞ்சன்முதல் வானவாமேற் கைப்பிரம்பு கொண்டுதாக்கிச்
செழுமணித் தண்கயிலையின் பாற றெளிவிகரு மவன்மலர்த்தாள் சிரத்திற்
கொள்வாம். (௰௧)

## நாமகள்.

[ண்டு
எழுத்துசைசொற் பொருளுதவு மணிகளிரு வகைபெறுபா வினங்கள் கொ
மழுத்தடக்கைக் கடவுளிடை மருதவன வடசொலுறு மான்மியத்தை
வழுத்திடத்தென் றமிழதனை யினிதுபுரிந் திடுகவென மகிழ்ந்து வணடின்
குழுத்த மைப்போற் றிடுதவள பங்கயத்தி லுறைந்திடும்பூங் கோதைதானே.

## தமிழாசிரியர்.

புவியினகத் திருளொதுக்கி வானெய்தி யறியவுறு பொருள்கள் காட்டிச்
சவிமருவிப் பொலிபரிதித் தமிழினிது தோன்றுகுண சயிலந் தன்னைக்
குவிதிரைத்தண் பெருங்கடலை நெடுங்கிரியை யடக்குசிறு குடங்கையானை
கவியமெடுத் திடுபாணுக் குரியவனைப் பணிகுவதே மக்கு வேலை. (௰௩)

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

சிவஞானக் கடலருந்திக் கருமைகொடு திசைகளெங்குந் தெரிய மின்னித்
தவரினஞ்சூழ் திடவுலக முணரவிடித் தமணகோடை தணப்ப வோங்கு
புவனமதிற் சைவநெடும் பயிர்தழைப்பப் பரங்கருணைப் பொருப்பின்மீது
கவிமழைகள் சொரிபுறவக் கவுணியக்கொண் டலைநாளுங் கருத்துள் வை
ப்பாம். (௰௪)

## திருநாவுக்கரசு நாயனார்.

வடமருவு தென்னிழலிற் கருணைவடி வாய்விளங்கு வரதன் போல [டு
விடமமிர்த மெனப்பருகிச் சூலந்தோண் மிசையேற்று விடைமேற்கொண்

நடமருவு நீர்ணிவிடைத் திகழ்ந்திவா சேர்பத சரோருகத்தைத்
திடமுறுமன் பொடுநினைமுஞ் சிந்திப்போர் துயர்களெல்லாஞ் சிந்திப்போ
[மால். (௰௫)

### சுந்தரமூர்த்தி நாயனார்.

முதலைவனா ராரூர் தந்திடவை யாறெய்தி முடிவில் லாத [ன்
முதலைநெடுந் தமிழொடுசெந் தமிழ்க்கவிதை யாற்றுதித்து மொழியாலிக்க
முதலையொரு மகவுதரச் செய்துகந்த முன்றேனை முகிழ்மென் கொங்கை
முதலையிதழ்ப் பரவைமணா ளனைவணங்க நமதெண்ண முற்றுந் தானே. ()

### மாணிக்கவாசகசுவாமிகள்.

வந்திதனிச் சிவலோகர் பெறவழுதி பவநீங்க மனத்தி னீடார்
வந்திதனிக் கொப்பமுலை யுமையவள்பால் வைத்தபரன் மகிழ்வினுடல்
வந்திதம்பெற் றிடப்பல்லோர் கைகையின்பாற்கண்டிடச்செய் மறையோ
வந்திதக வுறமனமே நந்தமைமெய் யன்பரிடைவைக்கு மன்றே. [ன்றனை

### கல்லாடேசநாயனார்.

நேசமுறு தாதைபுரி தவறுமவன் றனைப்பதமு ரிக்கி நீடு
பாசமகற் றிடுபரம பதத்திலுறு கல்லாடேச பதமும் பெற்றோன்
வாசமலர்ப் பதத்தினையாம் வணங்கிடுதல் மனையதனி வணக்கமாகும்
பேசரிய பேரின்ப மருவுதற்கோர் பதமென்னப் பெரிதுமன்றே. (௰௮)

### பட்டினத்துப்பிள்ளையார்.

விளம்புகாவெனுமிடற்று மருதிறைவன் றிருவருளின் மெய்ம்மைநோக்கிக்
களம்புகார் வின்மதன்றன் படைமகளிர் புவியாசை கருதுங்காத
லுளம்புகா ராகிவெறுத் தனைத்தொருமும் மணிக்கோவை யுகந்து நல்கும்
வளம்புகாரப் பட்டினத்துப் பிள்ளையெனும் பெரியவர்தாள் மனத்துள்
[வைப்பாம். (௰௯)

கடவுள் வாழ்த்து.
முற்றிற்று.

---



# அவையடக்கம்.

சொன்ன மேருமுன் சிறியகற் குன்றமுந் துலங்கு
மன்னு மான்மதக் களிற்றின்முன் முயல்களும் வயங்கும்
பன்னு தண்கதிர்க் கடவுண்முன் னுடுக்களும் பயிலு
மென்னின் பேதையர் கவிதைமுன் னிலங்கு மென் கவியும். (௨௰)

பகரு நாவொழின் மலவொரீஇ பயில்கட வுளாதற்
சிகர முற்றிடு திறமெனச் சிறியனேன் பனுவல்
மகர வண்குழைப் பிறைச்சடை மருதநா யகன்றன்
புகழு டன்கலந் ததிஞாதற் செயிர்களை புகுமால். (௨௧)

விமல ஞாயிறு சிறியனேன் விளம்பிய கவிதை
கமல நாண்முகை யவிழ்த் தருளிடோறா கருத்து
நிமிர்தன் பேவழுக காற்றிடோர் நெஞ்சக மலர்ந்த
குமுத மூடாத முறுமனங் குறிதிடு கருங்கல். (௨௨)

நற்ற வத்திடேறா ரொழுமிடை மருகிறை யாம
முற்ற விக்கதை யாவெனுத் துரைத்திடு கின்றேன்
முற்று சீருறு தென்றமி ழிலக்கண முழுதுங்
கற்று ளாதமைப் புவிடோர் புகழ்ந்திடக் கருதி. (௨௩)

அவையடக்கம் முற்றிற்று.



ஆக திருவிருத்தம் ௨௩.





உ

சிவமயம்

# திருநாட்டுச்சிறப்பு.

விருத்தம்.

பொன்னி லத்துறை சுரர்களும் விரும்புறும் பொலிவுந்
துன்னி யீசர்வாழ் பதிகளுந் துதைதிசை தரணி
தன்னி லோங்குநா டெவற்றினுந் தலைமைய தாகிச்
சென்னி நாடெனத் திகழுறு நாட்டணி தெரிப்பாம். (௧)

திங்க ளொண்சுதைக் கதிரின துருவெனச் சென்று
மங்கு லின்வழித் தாகடற் றெண்டிரை வாரி
பங்க மின்றுயர் பரிமுகந் தெரியினிற் பருகிப்
பொங்கு கள்ளிருண் வடிவுபெற் றெழுந்தன புயல்கள். (௨)

எழுந்த தணபுய லிடைபரு திறையவ னிபத்தின்
முழங்கி யாங்கத னோடையின் மின்னியோர் மூன்று
செழுங்க ணானுட லுமைதிகழ் சிறப்பின்விற் கோட்டிப்
பொழிந்த சையமேற் சுரரமு துகுத்தன போல. (௩)

மாலெனப் புகல் பெயருறு மாயனு முகிலும்
வேலை வாய்க்கடைந் தெடுத்தமு துதவினும் விளங்கு
மேலை வானவர் தமக்கரி யுதவினன் விசும்பு
ஞால மீதுறு சராசர வுயிர்க்கெலா நல்கும. (௪)

ஓங்கி டும்பல சிகரங்கொள் சிலம்பின்மே லுதகந்
தாங்கு தண்புயல் சொரிதர லிராவணன் றன்மேற்
றேங்கொள் பூந்தொடைத் தசரதப் பெயரினோன் சிறுவன்
வாங்கு விற்கொடு சொரிந்திடு சரங்களை மானும. (௫)

தூங்க வெற்பினிற் கருமுகில் சிலையொடுந் துன்னிப்
பொங்கு தீம்புனல் சொரிதரல் புணையுநீ டெழிலா
ரெங்கள் காளத்தி யிடத்திலோ ரன்பன்வா யிடுநீர்
சங்க ரன்றிரு முடிமிசை யுமிழ்ந்திடுந் தன்மை. (௬)

கூறு வானிடை யிடைதரு பயோதரங் குளிர்பூ
நாறு வெற்பினின் கனைசொரி நறும்புனற் றுளா

மற்க டத்தடங் கோடு மருவுமா
மற்க டத்தடங் கோடு மருவொடு
சொற்க டத்தலர் துன்னிடு தண்புனல்
சொற்க டற்செல வெண்ணத் துலங்குமால். (௧௫)

பாத னந்தன் வயிறுற வாய்ந்ததண்
போத னந்தன் மிசைக்கொடு போதலிற்
போத னந்தம் புரைதரு மென்பராற்
போத னந்தம் வளைபயில் பொன்னியே. (௧௬)

காம ரூர்தின் கரைபொரு காவிரி
காம ரூமலர் கனனல் பரித்தலின்
மாம ரூக பலைமண மேவியே
மாம ரூக மணனுறு மேய்க்குமால். (௧௭)

வேறு.

புன்ற கமமறு கம்பு பொருந்தலை
மன்ற வுமிழும் பதிரு டிறையைப்
புன்ற கம்மறு கம்பு பொருந்தலை
பன்ற தரவோ டேகிடு மாநீர். (௧௮)

வேறு.

செல்புனல் குறிஞ்சி யிற்கொள் செறிகதிர் நேமி வானி
வில்லுட னணைந்து முல்லை விளங்கிடங் கெவையுங் கொண்டு
மெல்லிடை மகளி ராய ரிரங்கநோய் விளைந்திட் டோடி
மல்லலம் புவனத் தோர்க்கு மறவர்பாற் பயிற்சி காட்டும். (௧௯)

குலவுறு புறவினின்று கொடியிடை நடங்க வங்க
ணிலகுவெண் டயிர்பால் வெண்ணெ யினிதுறு தாழி பற்றி
வலுவொடு தலைமேற் கொண்டு வனமுலை குலுங்கச் சென்ற
தலகில்சீர் மருத நோக்கி யாயர்த மடந்தை யென்ன. (௨௰)

இன்னலம் படரும் பொன்னி யிலங்கிடு பொழிற்பூங் கோதைக்
கன்னலென் னெழிற்றேட் பைம்பூ கதலிடற் றரம்பை யென்னு
மன்னுமென் கவான்வண் டோமாந் தளிரியன் மருதப் பாவை
தன்னெழிற் றோழி யாகத் தழீஇவிளை யாடி நின்று. (௨௧)

தடமுறு மருதங் கொண்ட தமனக முதல சூடித்
இட்டமுறு வனச மென்னுந் திருமுக மலர்வுற் றன்ன
மடநடை கொடுசென் றங்கே தலைமகள் மருவ லுற்ற
கடலிறை யவன்முன் னெய்தல் கண்டெதிர் கலந்த தன்றே. (௨௨)

ஏலம்வன் மிளகு மஞ்சள் குங்கும மிலவங் கந்தன்
பாலுறு செய்பொ னல்கிப் பனிவரை விடக்கொண் டோங்கு
கீலுறு கடற்பா லெய்து செம்புனல் வயங்கு மோர்பெண்
கோலுறு தாயினிறு கொழுந னிற் சேக லொத்தே. (உ௩)

சொற்றிடு குறிஞ்சி தன்னிற் றோன்றுதன் பொருளை கட்டி
மற்றுள திணைக டம்மில வளைபல் பொருள்க ளாதி
பற்றிய முறையிற் காட்டல் பகர்தரு பொன்னி நீரா
லுற்றிடொன் றுதி யோரைந் தறிவுறு முயிர்கள் போலும். (உ௪)

நகமதிற் கதழ்விற் றேய்க்கு நறிய குங் குமத்தி னாறு
மிகநிலத் தியல்பி னுறுவ கலங்கியபின் னியங்கு நீத்தந்
தகவுறத் தெளிந்த தாங்கோர் சாமியின்றி கலக்குற் றாலுந்
திகழ்சிறு பொழுதிற் றூய தெளியடை சிறந்த நீரார். (உ௫)

வேறு.

சைய முற்றமுத் தமிழ்முனி சரக ரயனைறனை
கையி னுற்றிடு கமண்டல மதி நயவர கமரந்
துய்ய காவிரிய புனல்பவந் தொலைத்துய மயிர்ந்தும
வைய மேலது பெற்றவா வானவர் கணங்கள். (உ௬)

மால்ப டிந்திடு சையமே வாலுல கதனிற
சால்பு கொண்டெழு பொன்னினின் கற்பகத் தாரு
பால்பி ரிந்திடு மதிகுல மாங்கதன பனைகள்
கால்கள் யாவையுஞ் சிறியகொம் பிணங்கலைக் கடிக்கும். (உ௭)

கூறு கால்வழிப் படர்புனல் வயலிடைக் கூட்டிக்
கீறு சால்வழி மணிக்குலங் கிளர்தர வுழுது
சேறு செய்துவண் டழைவிராய்ச் சொன்முளை சிதறி
நாறு செய்குவர் களமர்க ளலம்புனை மருதம். (உ௮)

பெருகு காவிரிப் புனலன்றிப் பிறங்குநாற் றினைத்தன்
னருகு வாழ்பொழிற் பலவொடு சூதநீ டரம்பை
தருக ளித்திர ளிரதமுந் தகைமலர்த் தேனுந்
திருகு றாலையின் சாறதூஉம் வளர்த்திடுஞ் சென்று. (உ௯)

பூட்டு நாஞ்சில்செங் கொழுப்படை யூர்தரப் புலம்பு
கோட்டி னோசையுங் கரும்பொடித் துழவர்கள் குலவே
றோட்டு மோசையு முழத்தியர் நடும்பொழு துரைக்கும்
பாட்டி னோசையும் பரந்திடும் பழனங்க ளெங்கும். (௩௰)

வன்ன வாய்ச்செழுஞ் சலசமுங் குமுத மென் மலருங்
கன்னு லாமலர்க் குவளையு மதிமுகங் கனிவாய்
துன்னு சேல்விழிப் பகையெனத் துரப்பவர் போலப்
பன்ன நீர்வயற் கடைசியர் களைந்தனர் பாவி. (௬௧)

## வேறு.

மன்னர்தம் விழியின் சாயல் கயலென மறிக்கக் கையாற்
றெள்ளுநீர் வயலு ணின்று செறிகளை களையு நல்லா
ரன்னல வினையும் பற்றிக குழிசியி னடைப்பர் காணிற்
கன்வினை விடுவர் கொல்லோ வுலகினிற களைக டீர்ப்போர். (௬௨)

அலவனே ராக நான மார்தரு கமலப் போதிற்
கலனையி னுழுது கொம்மைக கமடத்திற் பரமபின் செய்கை
யிலகுறச் செய்வர் மள்ள ரின்சிறு புதல்வர் செய்யுள்
வலசிறு மகளிர் பைம்பு னமையாகண் மகிழ்வுற் றோர்பால். (௬௩)

நெடியநீர் கொடுவர் தூட்டு நெடுவரை யருவின றேனு ம
படிமலர்ப் புறவத தாவின பாலுமல் லாது பானற்
கடிகமழ் வனசத் தேனுங் கயவினம பாய பேதி
மடிசொரி பாலு முண்டு வளர்ந்தன சாலி யெல்லாம் (௬௪)

ளுக்குமை யாதி மூன்று தொழில்களுட் பட்டுக் கண்ட
மேக்கெழு சொல்விற் சாலி யிளைகருக கொண்டு பின்னர்த்
தேக்குறு வொழுங்கு பெறமுத தெரியவுள் விமம லுறறு
மாக்கவி னுறமேற் றோன்றிற றனனதா உம வளாசொல் லன்றே. (௬௫)

உதயமால் விலங்க றன்னி லுதித்தெழுங் கதிரோ யென்ன
மதியுல குவகை நீட வன்பயி ரெழுந்து செந்நெல்
சதிருற வுச்சி நின்று முதிர்ந்துபிற சாய்ந்து தானுங்
கதிருருக் கொண்ட தன்மை காட்டிய தெவர்க்கு மன்றே. (௬௬)

விளைவுகண் டரிவாள் கொண்டு மேவின ரரியும் போது
களையினிற் பிழைத்த செங்கட் கமலமொண் குமுத மென்னுங்
கிளையுறு மலருங் கூட வரிபட்டுக் கிடந்த வம்ம
தளர்வுறி லடுத்தோர் தாமுந் தளர்வுறு மறிஞர் போல. (௬௭)

அரிந்தன விசித்துத் தூக்கி யடுத்திடு களத்திற் சேர்த்துத்
திருந்தவான் றீண்டப் பல்போர் செய்துபின் பிரித்து விட்டுப்
பரந்திடு பகட்டி னூர்ந்து படிந்தவை யுதறித் தூற்றிப்
பொருந்துபொற் குன்றி னீட்டம் போன்மெனப் பொலிக ளாக்கி. (௬௮)

முன்னிழைசக் தனலூர்த் தெய்வ மந்தணர் முதலோர்க் கீந்த
பின்னனைக் தரசர்க் குள்ள தளந்தன் பிறகு செல்லும்
புன்னில வினைவுந் தங்கள் மனைகளிற் பொருந்த வுய்த்தாங்
கன்னமும் பிறவு மன்பா லருந்துவோர்க் கருத்தி யுண்பார். (௩௯)

மின்னிய வெழிலி யூர்தி வேந்தனென் றிசைத்த லாலும
பன்னிசை யரம்பை மாதர் பயிலுற வினிதி னங்கு
மன்னிய தாலும் வெள்ளை வாரணஞ் சூழ்த லாலும
பொன்னிசூழ் மருதந் தன்னைப் பொன்னுல கென்ன லாகும் (௪௰)

பொய்வதை முதலாஞ் சேனைப் பொருபவப் பகையை மோதி
மெய்யெனுஞ் செங்கோ லோச்சி விளங்கிசைத் தரும மெனனும்
வையமேத் திடத்தன பொன்னி மருதநன் னிலமென் றேறுஞ்
செய்ய சிங்காத னத்திற் சிறந்திருந் தரசு செய்யும். (௪௧)

வேறு.

தேசுறு மருத நாடெலாககாகள் சிறந்திடங் ககொலா மிலங்கும்
வாசநீ டியதா மரைச்செழுந் தடமும வளமபெரு செந்நெல்சூழ்வயலு
மூசவனா டிரைக்குஞ் சோலையுங்கமுத மொழிதரு சூதமுங் கருமபும்
பாசிலைக்கதலி செங்குடன் பலவும பரபறு லடமுநல் விழாவும். (௪௨)

வேறு.

மலரின் மின்னெனப் பணைவே லெயினர்த பகளி
ரிலக நின்றுதே னிறைத்தலி னுலால மெனனு
நிலவு செந்தினைக் கதிர்கொள நெடுஞ்சினை வேங்கை
குலவு பைங்கிளிக் குலமெதிர கூவிடுங் குறிஞ்சி. (௪௩)

அனைய வன்னிலத் தெயினர்கள் வெறியினி தாற
வனைத ருங்கனன் மணப்பர்செங் காந்தளமுன் மணக்குந்
தினையி னுண்புனங் காத்திடு சிறுமியர் சென்று
சுனையி னுடுவ ரவர்முனந் தோகைக ளாடும். (௪௪)

கருந்து ணர்ச்செழும் பூவைவீழ் கடுக்கையந் துணர்போர்த்
திருந்தி டுந்திற மத்தினைத் தெய்வத மெவரும்
பொருந்து றத்தனை யறிந்திடப் பொலங்கலை யுடனே
யிருந்த விற்பதை யுறழ்ந்திடுஞ் சிறந்திடு முல்லை. (௪௫)

கான்கு திக்குமப் புறவிடை யிடைச்சியர் கவின்செய்
தேன்கு திக்குமென் கூந்தலை நோக்கிமுன் சோ

வான்கு திக்குமற் றவர்படம் வரிவிழி நோக்கி
நான்கு திக்கினுங் குதித்திடு நவ்வியென் றிரலே. (சசு)

நீள்க ருஞ்சினைப் புன்னைநன் னீழலுப் பறலுள்
வாளை மீதெறு வரால்களும் பொருந்துழி மதனன்
கோணி ரும்படைக் கேதகை குருகெனத் தோன்றி
மீள லுற்றெருண் டிடச்செயும் விளங்கிடு நெய்தல். (சஎ)

ஓங்கு வேலையிற் பரதர்க ளோட்டுவர் தோணி
பாங்கு வேலையிற் பரத்திய ரோட்டுவர் பறவை
யாங்க ளத்தவர் குவிப்பார்க ளரைத்தவெள் ளுப்பு
தேங்க ளத்தியர் குவிப்பார்க டிரையெறி துப்பு. (சஅ)

மன்னு மால்வரை முல்லைநன் மருதநன் னெய்த
லென்னு நானிலங் களிற்றனி யியல்பிவை நிற்கச்
சொன்ன பொன்மலர் கடுக்கைசெங் காந்தளம் பேற் றொரியத்
துன்னு முல்லையுங் குறிஞ்சியுந் தொடரிடஞ் சிலவே. (சகூ)

ஆயர் வெய்ங்குழ லிசையொலி யகஞ்செவிக் கொண்டு
தூய சோலையி லோதிமந் துயிலவுர் விழவின்
சேய வோதையின் [illegible] மருளவும் விரிசீர்
பாய முல்லையு மருதமும் புணரிடம் பலவே. (ருo)

செந்நெல் மேய்ந்தெழு படர்மருப் பெருமைகள் சென்று
புன்னை நீழலின் மறியவும் புணரிவால் வளைகள்
பன்னு பூகதப் பாளைமீ தெறியவும் பாங்கின்
மன்னு நெய்தலு மருதமு மயங்கலு முரிய. (ருக)

இகழ்க ளங்கனிக் கத்துணை செய்யவொண் பவள
நிகரில் பட்டினத் தவரெதிர் புறவிடை நேர்ந்து
தகவி னெய்துவர் பொதுவியர் பட்டினஞ் சார்ந்து
பகர்வர் நித்தில மொருபடி தனக்கொரு படிபால். (ருஉ)

ஆன வெற்பிடை மணிசொரி யருவியின் சிலைப்புங்
கானி டைச்சியர் கறந்தயிர் கடைந்திடு கலிப்பு
மான முற்றிடு மருதவொண் மனைமுர சதிர்ப்பும்
வானு றுங்கடற் கனைப்புநீள் மாலையிற் றொடரும். (ருங)

வைய கம்புகழ் பொன்னிநன் னாட்டிறு வளத்தைத்*
தையல் பாகநீ டிறையவன் றனெதிர் நோக்கி

மையார் சூழ்மணி மன்றுணின் றுணர்த்த நடனஞ்
செய்யு மென்றிடி லதனையார் தெரிப்பதற் கெளிதோ. (௩௪)

பொன்னி னாட்டினிற் சிறந்திடு பொன்னிநாட் டியல்பு
தன்னி லிங்ஙனஞ் சிறிதிசைத் திடனஞ் சார்ந்தி
டன்ன நாடெனுந் தனிமக ளணிநுத றிலக
மென்ன நீடுறுந் திருநகர் வளமினி யிசைப்பாம். (௩௫)

திருநாட்டுச்சிறப்பு முற்றுப்பெற்றது.

ஆக திருவிருத்தம் ௭௰௮

---

உ

சிவமயம்.

# திருநகரச்சிறப்பு.

---

பொற்பு மிக்கவிந் நாட்டிடைப் பொன்னிதன் றென்பாற்
கற்ப காலத்து மழிவின்றிக் கடவுளர் போற்றச்
சிற்ப ரன்பரை யுடன்மகிழ்ந் துறைந்திடத் திகழு
மற்பு தத்திரு விடைமரு தெனும்பதி யம்மா. (௧)

கொண்ட லூர்தியு மிரிஞ்சனுங் கோடுறு காணும்
பண்ட ரங்கனை நணுகியே வலமொடும் பணிபோ
தெண்ட ரும்புக ழவாபதி யென்னவு மெழிறபே
ரண்ட மென்னவு மிலங்கிடு மனையநீள் பதியே. (௨)

அனைய மாநக ரொருதனிப் பூந்தட மதன்கண்
வனைத லூற்றொளிர் மாளிகை மண்டப மனைவும்
புனை யெழிற்கருங் குவளையும் பலமபுகல் குமுத
வினைகொள் பங்கயச் செழுமலர் நாயகன் கோயில (௩)

மேரு வாமரு திறையவன் மேவுபொற் கோயில்
சீரு லாமணி மறுகெழு கடல்களுந் தீவுஞ்
சாரு மந்நகர்ப் புடைமதி ளேமியஞ் சயிலம்
காரு லாமதன் புறத்தகழ் புறத்தடங் கடலே. (௪)

கன்றுறுஞ்சிர வரைபடு பொருளுங் கானிடைப் படுபொருட் குலனுந்
தன்றுறு மருதத் திணைபடு பொருளுஞ் சலதியின் பாற்படு பொருளு
நன்றுறுஞ் சலதி யிடைப்பொலிக் தோன்றுநகர்படு பொருள்களு மேனை
யின்றுறு பொருளுங் கவின்குடி யிருக்கும் வீதியில் வயின்றொறும் வி
ளங்கும் (௧௬)

வானவர் மகுட முரிஞ்சுபொற் றுகளு மற்றவர் புனைமலர்த் துகளு
மானிலந் தனைவிட் டெழுந்திடா தடக்கு மாளிகைக் கொடிபடிந் துதறு
மேனிலைத் துளியுஞ் சண்பகத் தருக்கள் விரித்திடு மலர்மதுத் துளியுங்
கானமுற் றிலங்குஞ் சிவிறிநீர்த் துளியுமா விழவருக் கணைகள் மறுகின்.

வேறு.

மாந்தளி ரஞ்சி லோதி மடந்தையர் வடிவு காட்டு
மேந்தெழிற் கமுக மன்னா ரிழையணி மிடறு காட்டும்
வாய்ந்திடு மூருவின் றன் வனப்பினைக் கதலி காட்டுந்
தேந்துளி யிலவின் போது செய்யிதழ் காட்டு மெங்கும். (௧௭)

மிகவிரி பாளை போதது விளங்குதெங் கிளநீ ரன்னார்
துகிலொரு புறமேற் கொண்ட துணைமுலை காட்டுங் காவிற
றருகொடி யிடைகள் காட்டுந் தடமுறு மனிச்சம் யாவு
முகமலர் காட்டும் வண்டு முகத்துறு கண்கள் காட்டும். (௧௮)

வேறு.

மந்த மாருதம் பயின்றிடை மருதினம் மருங்குஞ்
சந்த முற்றொளிர் சண்பக முதலிய தழைந்து
கந்த மார்தரு பொழிலெழில் கண்டவர் மகவா
னந்த னந்தன தெழிலினை நவிலநா ணுறுவார். (௧௯)

எண்ட ரும்புக ழுலகெலா மெய்திடை மருதில்
வெண்டணிக் கலை மதிச்சடை விமலர்தம் விழாவிற்
பண்டருங் கனி மொழியெழிற் பாவைய ராடல்
கண்டிலா தவர் திலோத்தமை யாடலிற் களிப்பார். (௨௰)

எங்க ளீசர்வீற் றிருப்பதூஉ மாலயத் தெழிலும்
பொங்கு தண்புக ழிடைமரு தெனுநகர்ப் பொலிவுந்
தங்கி வாழ்பவர் மகிழ்ச்சியுஞ் சார்ந்தெதிர் கண்டோ
ரங்க ணார்சிவ லுலகினை யகத்தினில் விரும்பார். (௨௧)

வேறு.

மொழிதரு மொருமை தன்னோ டிருமைசெய் முத்தீ வேட்டுச்
செழுமறை நான்கு மன்றாய்த் தெளிதருமற் றையந் தீப்
பழுதக லங்க மாறும பயின்றா ணிடத்தி லன்பு
மெழுதரும் பிறவி யெட்டா தியறறிநாள் கழிப்பா சில்லோர். (௪௨)

பத்தியிற் காமி காதி பகருமா கமங்க ளாய்ந்து
நித்தியப் பொருளென் றேது நிமலனைப் பூசித் துற்றோர்
சத்தினி பாத மோர்ந்து சார்ந்திடு கலைக ளோர்ந்துஞ்
சுத்திசெய் திகலும பாசந் தொலைத்தகற் றுவர்நாள் சில்லோர். (௪௩)

கல்வனை கணைய மாதி கரங்கொடு சுழற்றி யுங்கை
மல்லொடு வடிவா ளாதி மற்றொழில் பயின்றுந் தான
வல்லிபந் துரங்க மூர்ந்து ம வருநதிடு கலைக ளாய்ந்துஞ்
சில்லியந் தடந்தே ரூர்ந்துஞ் சிலர்கழுறு பொழுது போமால். (௪௪)

விரிபொரு டமபா லுள்ள வேண்டுநர்க் கினிதி னீந்தும
புரிதரு மவர்தஞ் செங்கைப் பொருளெதிர் முறையி னேற்றும்
வரிமலர்ச சோலை பார்த்தும் வயலுறு வளமை பார்த்துந்
தெரிவுறு கேளவி யுற்றுஞ் சிலர்க்குறு பொழுது போமால். (௪௫)

துலங்குகா விரியிற் பூசத் துறைப்புன லாடல் செய்து
கலம்பெறு நியம முற்ற நடாத்தியுங் கலைக டோர்ந்தும
பலன்றரு மருத வாணன் பணிவிடை புரிந்து மன்னோன்
சிலம்பணி பதம் பணிந்துஞ் சிலர்கதுறு பொழுது போமால். (௪௬)

வேறு.

கொடிபடு நெடிய மாளிகை வீதி குலவுறு மனையபொற் பதியி
லடிபடன் மணிவார் செறிந்திடு முரசே யமைவுடுப் படுவன மாவே
கடிமது வருந்தல்சிறைகொள் வண்டினமே கட்புன லுகுத்தல்பைம்பொ
ழிலே, படியுறு குளனே யலைபடல்சிறுமைப் படலெழிற் பாவைய ரிடை
யே. (௪௭)

காரண மின்றிச் சினத்துட னெதிர்த்துக் கடுஞ்சமர் விளைத்தல்செஞ்சூட்டு
வாரண மதுவே திரித்திடு கோட்டு வளம்பெறு பெருமையும் விளக்கு
மோரண வுருவ மதனனே தன்னோ டெதிர்த்திடா திருப்பவர் தம்மேற்
சூரண முறுநீ டம்புக ரேக்குந் தடித்துறு முகிமத் துதகைத்தால். (௪௮)

மற்றவர் மொழியுட் கொண்டலர் மிசையோன் மருங்குறு மொருத ருப் பையினைப், பற்றியோர் நேமி யாக்கியங் கதனைப் பார்மிசை யுருட்டி முன் னிவீ, ருற்றிடு மிதன்பின் னடந்திடு மிதுசென் றுறைந்திடுங் கான மதுதான், குற்றமில் குளத்தீர் நல்வழியென்னக் குறித்திடு மூதுரை கொடுத்தான். (௨)

இரவிவீற் றிருக்கு மெழுபரித் தடந்தே ரோற்றிடு நேமிசென் றிடுத லொருவியப் பலவென் றுரைத்திடத் தனித்தாங் கூர்ந்திடு நேமியின் பின்னர், திருடிக ளெவரு மயனவிடை போகொண் டேகின ரதுபகீ ரதியார், திருநதிப் பாங்கர்க காசியின் வடகீழ்த் திசையினிற் சென்றுறுதல் மெய தால். (௩)

தாமரை யுருகவொரா டேகுவதென்னது தொடர்ந்திடு மாதவ முனிவர், நேமியங் குறையக் கண்டனா தாமூற நின்றனர் நிறைதவ மியற்றி யேமமுற் றிருந்த் றலமிதே யென்ன விலங்குமக் கானகந் தனக்கு, நாமமிக் நேமி தங்கிய திறத்தா னைமிச மெனப் பொருந் தியதால்.

மாயனை நிகர்க்கு மப்பூமண மெறலான் மலிமீமிசை யிருப்பதா லெனையாள், சேயினை நிகர்க்கு மொண்டலூர்க் கிடலாற் றேவர்க ளிறைவனை நிகர்க்கும், பாயதா மரையாங் கலின்விதி நிகர்க்கும் பசுமையா லுலகினை யீன்ற, தாயினை நிகர்க்குங் கலைநிறைந் திடலாற் றண்மதி நிகர்க்குமவ் வனமே. (௫)

வேறு.

அணிதரு கோங்க மெங்கு மதனரு சோக மெங்கு
மிணிதரு தமால மெங்குஞ் செறிநரந் தமால மெங்குந்
தணிவில்லைங் கோல மெங்குஞ் சாற்றுநற் கோல மெங்குங்
கணியுடன் சால மெங்குங் கலந்திடு விசால மெங்கும் (௬)

துவளித வருக்க மெங்குந் தாதகி வருக்க மெங்கு
மவமில் சம்பகங்க ளெங்கு மலர்கொள்சம் பகங்க ளெங்குங்
குவிதரு கடுக்கை யெங்குங் குருந்தில கடுக்கை யெங்குந்
தவவொளிர் சோதி யெங்குந் தழைந்தெதி ரிருத்தல் கண்டார். (௭)

காவுற வளருந் தேமா புளிமாநற் கருவிளந் தண்
கூவிள மருவுஞ் சீருங் குலவுகாய் கனியின் சீரும்
பூவுட னிழலின் சீரும் புகலுநேர் நிரைய தாகிப்
பாவுறு சீருமெங்கும் பார்த்தனர் மகிழ்ச்சி பெற்றார். (௮)

அன்னதில் வேள்விச் சாலே யருட்கதை கேள்விச் சாலே
துன்னிடு யோக சாலே சுவைதரு பாக சாலை
வன்மறை நவிற்று சாலே வளர்தவ மியற்று சாலே
யின்னபல் சாலே செய்தங் கிருந்தனர் தவஞ்செய் கின்றூர். (௯)

வேறு.

கரங்கொடு பன்ன சாலேகள் புதுக்கக் கட்டிநின் றிபக்குழாங் களிக்கு முரங்கிளர் கலேக ளிறந்திடு கலேயி னுரிகொடு முனிவர்முன் விரிக்கும், குரங்கினங் கிழங்கு தருப்பைபமா விலேதேன் குறித்திடு சமிதைகொண் டளிக்கு, மரங்களுந் தாமே வணககமுற் றருகே மலரொடு காய்கனிகுவிக்கும். (௰)

நடனுறு மயில்கட் குலவுபச் சோந்தி நறுங்கனி பறித்தெதிர் நீட்டும படவர வதன்மேற் படுமெவெயில் மயில்கள் படர்சிறை விரித்தினி தோட்டுங், கொடுவரிக் குலந்தம மடிசுரந்திடுபால் கோவிளங் கனறினுக் கூட்டும, வடுவறு மடங்கன் மறந்தருந் தொழிலே மறந்தருந் தவநெறிகாட்டும()

பொழுதினுற் றிறைஞ்சிக் கிள்ளேயைத் தீஞ்சொற் பூவைமற்றிருவெ ன விருந்தாங, கெழுதுசித் திரதகி னடங்கிவாய் செவியா யெழிற்சிவ கதையமு தருந்தி, முழுதுமுள் ளத்துள் விடாதமைத் தேகமொழிந்தபின் னேகிடுந் தெய்வந், தொழுது பைங்கிள்ளே முகமலர்ந் துரைக்குந் தொகுத்தத னகத்தினிற் பொருந்த. (௰௧)

வேறு.

இத்தகைப் பெருஞ் சிறப்புற விருந்திடு நாளி
லுய்த்திடுந் தவத் தநிசிமிக் குயர்சதா னந்தர்
சித்தர் கண்ணுவ ரத்திரி திரிசடி யாதி
மெய்த்தவத் தினேர் கூடிநல் வேள்வியொன்றிழைத்தார்.(௰௨)

அந்த வேள்விபார்த் திடும்பொருட் டருந்தவச் சூதன்
சந்த முற்றகண் மணியொடு தயங்குவெண் ணீறுஞ்
சுந்த ரம்பெறத் தரித்திடு மிடந்தொறுந் துலங்க
வந்த ணைந்தனன கண்டனர் மாதவத் தவர்கள். (௰௩)

உவகை யுற்றெழுந் தெதிர்கொடு முகமனன் குரைத்தோர்
தவிசின் மீதுற விருத்தினர் தாங்களு மிருக்க
நவையில் சூதனு மவரவர்க் கிசைந்தன நவின்று
னவி யளித்திடு வேள்வியு முடிந்ததாங் கதன்பின். (௰௪)

மாதவத முனோர் சூதனை நோக்கிநும் வதன
சீத பங்கய மலர்ந்தெதிர் செப்பினீ ரனந்தஞ்
சோதி லாதநற் றலங்களுந் தீர்த்தமுங் குலவு
மீதிவற் றரன் றலக்கதை விரும்பினே மின்னம. (மசு)

அத்தலஞ் சிறு பொழுதினி லகதநினிற் குறிக்கு
மெத்தகைப் பெரும பயனகளு மெளிதினிற் கொடுக்கு
மித்தகைத்த தாய்க் கொடுவினை யெவையுமாற் றுவதாய்
நித்த னன்புறு மிடத்ததாய் நிலவிட வேண்டும. (மஎ)

வேத வாகம புராணமாம் விளங்கிருங் கடலை
யோது நுமமதி மந்தரங் கொடுகடைந் துதிக்குந்
நீதிலத் தலக் கதையெனுஞ் தெளிவுறு மமிர்தை
யேதில் வாக்கெனுங் கரததிறு லெந்தமக் கருள்வீர். (மஅ)

என்று ரைத்தனர் சூதன்மற் றிகலுமைமம புலனும
வென்ற மாதவ முனிவிர்நீர் விருப்புறு தலமு
மொன்று பாரிடை யுளதிடை மருதென வோதுந்
துனறு சீரினை மருவிய தஃதெனச் சொல்லி. (மகூ)

திரு மகிழ்ந்துறைந் திடுமிடை மருதினைச் செல்வ
மருத வாணனைப் பெருநல மாமூலைக் கொடியைக
கருதி நீடெழு மானந்தக கடலிடை மூழ்கி
யொருமு கூர்த்தமங் கோவிய மொத்திருந் ததன்பின். (உம)

வெதிரி மாவனத் திருந்திரு வேதங்க ளவையுஞ்
சதுர் விதப்படுத் திசைத்திடு வியாதனுந் தவத்தோன்
புதிய வின்னமு தென்னவீ ரொன்பது புராணங்
கதி யுறும்படி யெமக்குமுன் கருணைவைத் துரைத்து. (உக)

விரவு மின்னவை தவத்துட னருளுறு மேலோர்
புரவு காதலின் வினவிடிற பகரொன்று னவற்றுண்
மருவு மீசன்மா லயன்பகல் வன்னிமற் றிவர்க்கு
நிரல்கொள் பத்துநான் கிரண்டுட னிசழ்த்துமொவ் வொன்றும்.()

காமனைப் பொடி செய்தவற் குரியன காந்தம்
வாமனம் பிர மாண்டமொண் மார்க்கண்ட மிலிங்கங்
கூர்மமச் சம்வ ராகமே பவுடிகங் குறிக்கு
சேடி மூற்றிடு சைவமென் றிசைக்குமீ ரைந்தும். (உ௩)

நாரணன் றனக் குரியவை நாரதம் விண்டு
காருடந் திகழ் பாகவ தப்பெருங் காதை
யாரணற் கியல் பதுமமும பிரமமு மருணற்
கோரும் பிர்ம்மகை வர்த்தமாக் கினேயந்திக் கோதும. (௨௪)

ஈசனீடிசைக் காந்தமு மிலிங்கமு மிரவி
மாசில் வண்கதைப் பிர்மமகை வர்த்தமு மருவி
வீசு திண்புக ழிடைமரு தெனுமதன் பெருமை
பேச மன்னவை யுமக்குநாம பெரிதுரைாத திடுதும (௨௫)

என்ன மாதவர் மகிழ்வுற வெதிர்விரித துரைததா
னன்ன வன்றிருப் பதமல ரகததினுஞ் சிரதது
மன்ன வைததவ னிசைததவா வடசொலா மதனை
யுன்னு தென்சொலிற புகலுவாந நமிழிறே ருணார. (௨௬)

வேறு.

உரைதரு தலவி சேட முபதேச மகிமை யீசன
திருவிளை யாடல் வெற்பின் சிறுவிதன் றவததி ஞற்றல
பரன்றனைப் பூசை செய்த பரிசுவெங கொடியொன் முடி
விரவுபொன் னிறமாய்ப் பின்னர் வெள்ளிவெற் படைந்த வாறு. (௨௭)

உரோமசன் பூசை மற்றை யோதுமாராக கணடன காதை
தராதலம் புகழ்சு கீர்த்தி மன்னவன் றன்மை மேன்மை
விராவுகா சிபனறன் காதை வெறறிவேற குமர னெய்திப்
பராவல்செய் திறையோன றன்னைப் பரிந்துபூ சிதத தன்மை. (௨அ)

வாணுத லிமயச் செல்வி மன்னுகா ருணியத் தீர்ததம
பாணமா தீர்த்த மோங்கு பராசர தீர்தத மேன்மை
நீணலச் சோம தீர்தத நிகழுருத் திரமா தீர்தத
நாண்மலர்ப் பதுமப் பேரா னணணிய புனித தீர்த்தம். (௨௯)

மிக்கபாண் டவர்க ளர்த்தம விணபுரந் திடுவோ ருதித்
திக்கிறை யவர்க ளர்தத திருவுறு கணண தீர்த்தந்
தக்கசீர்க் காக தீர்ததஞ் சாற்றிடு கெங்கா கூபஞ்
சக்கர கருட தீாத்த முதலிய தசதீர்த தங்கள். (௩0)

கச்சப தீர்த்த நீடு கவுதம தீர்த்தம் யாரு
மெச்சுகல் யாண தீர்ததம் விளங்கிடு சேட தீர்த்தம
விச்சைகொள் கந்த தீர்த்தம வெளளைவா ரணத்தின் றீர்த்த
மிச்சையி னியம்ப லுற்ற விவ்வகைத் தீர்த்தக் காதை. (௩௧)

தெரிதரு வீரசேனன் சித்திர கீர்த்தி யெங்கும்
விரிதரு சீர்த்தி விச்வா மித்திரன் கூடலுற்ற
வரகுணத் தென்னன் காதை வலனுறு நல னயோத்தி
வருயுவ ஞச்சுவன்சீர் மாந்தாதாப் பெற்ற பேறு. (௯௨)

மாசறு வசுமன்னன்சீர் வளாஞ்சந் துவசன் காதை
வீசுறு புகழ்செய் தேவ விரதனந் தகன்றன் வண்மை
பூசமான் மியத்தின் றன்மை பொதியுறு வாடன் மீண்ட
னீசனீ டருளினவி யெய்தல் போன வளவன் றன்மை. (௯௩)

சுனகன்மா முத்தி யெய்தல் சொற்றிரி யம் பகன்சீ
ரினங்கிடு மினைய யாவு மிருபத்தை திரண் டிரண்டின்
கணங்குலாஞ் சருக்க மாக்கிக் கருதிடு விருத்த மென்னு
மணங்குலாங் கவிதை தன்னால் வகைபட வுரைத்தல் செய்வாம்.

நைமிசாரணியச் சிறப்பு
முற்றுப்பெற்றது.

ஆ. திருவிருத்தம் ௯௩.

உ

மருந்தீசர் துணை.

# தலவிசேடச் சருக்கம்.

புவனம் யாவையும் படைத்தவன் பொருந்தொரு காற்றேர்க்
கவன வாம்பரி நின்றிளைப் பாறிடக் கருதிச்
சவி மணித்திரள் கொண்டுமுன் சமைத்ததே யென்னத்
தவ நிமிர்ந்திலங் கிடுவது சையமாம் பொருப்பு. (௧)

மொழிந்தி டம்மலை யிடத்துறு முதிர்ந்தருண் மந்திக்
கெழுந்த வன்பொடு கடுவனீ டுருமெலடுத் ததன்வாய்ப்
பிழிந்த தேன்வழிந் தருவியா யிடர்தொறும் பெருகுஞ்
செழுந்தண் சாரலி னொருபகல் சிறந்துழி யிருந்து (௨)

சுத்த மாதவ வசிட்டனே சுமந்தொடு விசுவா
மித்திரன் புகழ்க் கவுதமன் முதலிய மேலோர்
மெய்த்த வம்மகந் தருமங்கள் செயிற்பலன் மிகவு
மெத்த லர்தரும் விரைவினி லென்ன வாய்ந் தனரால். (௩)

ஒருவர் காசியென் றிசைத்தனர் தில்லையென் றுரைத்தா
ரொருவர் சோணமா சைலமென் றோதின ருயர்மற்
றொருவர் நீடெழிற் கமலையோ வென்றன ருகந்தாங்
கொருவர் கூடலோ வெனப்புக லுற்றன ரொருவர். (௪)

உற்ற வேலையிற் குன்றுதோ றாடெ லுகந்த
கொற்ற வேற்படைச் சூர்ப்பகைச் சேவலங் கொடியோ
னெற்று தெண்டிரைக் கடன்மிசை யிரவிதோன் றுதல்போற்
சுற்றும் வானவர் சூழ்ந்திடத் தோகைமேல் வந்தான். (௫)

கண்ணுற் றார்வமோ டெழுந்தனர் கதுமெனப் பணிந்து
பண்ணுற் றார்துதி யரியணை யீந்தனர் பரனு
நண்ணுற் றானெதிர் பூசனை விதிமுறை நவின்று
ரெண்ணுற் றார்தவ மென்செய்தோ மிவண்வர வென்ன. (௬)

அங்கதன் பினர்ச் சிறுவரை தாழ்ந்தரு கணைவுற்
றிங்கு வேள்வியோன் றிழைத்திடக் கருதின மியாங்க
ளெங்க ளீசர்தம் புதல்வமற் றியாவையு முணர்ந்தோய்
புங்க முற்றிடு மன்னது புரிந்திடு போதின். (௭)

மந்தி ரத்தினிற் கிரியையில் வளர்திர வியத்தில்
வந்து சேரினு மொருகுறை மருவிலா ளரக்கர்
சிந்தி டாவகை நனுமான் மியத்திறற் சிறப்ப
தெந்த மாதல மிகுபல னதுதரு மென்றார். (௮)

இத்திறம் புகன் முனிவரை நோக்கிவே லிளையோ
னுத்தமந் தனிப் புராணங்க ளுமையவட் கெங்க
ளத்த னோதுநான் மிகுவிளை யாட்டொடு மவற்றை
யுய்த் துணர்ந்தன னவளிடத் திருந்தவீ துரைப்பேன். (௯)

நீவிர் கேண்மினீ மகிழ்ந்துரை தலனெது நிகழ்த்தென்
றாவ லுற்றனை வினவின னஃதுமுன் னிசைத்தே
மேவு வாலையான் மறந்தனை விளம்புது மின்னும்
பாவு சோதிநற் றலங்களென் றிரண்டுள பகரின். (௧௦)

சோதி யென்பதோர் ஞானமென் றுரைத்தது தூய
வேத மாகமம் புராணம்வண் மிருதிகள் குரவன்
நீதில் யோகிகண் மந்திரஞ் செங்கதிர் கனலி
யோது மந்தணர் விபூதியென் றிவற்றினு முறைவோம். (௧௧)

தரணி தன்வயிற் றிகழ்ந்திடு தலங்களொன் றென்ற
தருணை காசிகா ளத்திகே தாரந்தென் னாரூர்
திருவ லஞ்சுழி யேரகந் தில்லைவெண் காடு
மருவு தண்பொழிற் குடந்தைபொன் வளரிடை மருதூ. (௧௨)

ஆதி யாகிய முந்திதந் தருளிடு தலங்க
ளோதி டப்புகி லனேகமுண் டவற்றினு முறைவோங்
கோதி லாங்கவற் றிடைமரு ததிகமாய்க் குலவும்
யாதினு லெனில நாதியா யிலங்கலி னென்னு. (௰௩)

அத்த லத்துறு மகிமையுஞ் சிறிதெடுத் தறைந்தான்
மெய்த்த வத்தினீ ரத்தல மேன்மையே யாகு
நித்த னம்பிகை யுடனங்கு நிலவுமெஞ் ஞான்றுஞ்
சித்த மின்புறு பலன்றருஞ் சென்மிறுங் கென்முன். (௰௪)

மாத வப்பெரு முனிவர்கள் வரையுரம் பிளந்த
சோதி வேற்படைக் கரதலத் தோகைவா கனத்து
வேத நாதவத் தலத்துறு விசேடத்திற் சிறிதீன்
டோது கென்றனர் கருணைகூர்ந் தனையவே னுரைக்கும். (௰௫)

வேறு.

தகைமைபெறு முயர்சம்ப காரணியஞ் சத்திபுரந் தபோவ னஞ்சீர்
திகழ்சோதி நகர்சருவ தீர்த்தபுரம் வில்வவனஞ் செல்வ நாளு
மிகுதரும விருத்திபுர முத்திபுர மிடைமருது வீர சோழ
நகரமெனப் புவியிடத்துச் சிவலோக மெனுமதன்ற னும மாகும். (௰௬)

கருதுபுகழ்ப் பராசத்தி விமலமுறு தனியிதய கமல மென்னப்
பொருவிலதாய்ப் பூரணசின் மயானந்தத் தனிச்சோதி புவனம் போற்ற
விரவலுறு செழுங்கருணை யுடனிருக்கு மிடமாகி விளங்குந் தான
மருதவனத் திடைமேவி யிடைமருதென் றதிஞமம் வயங்கிற் றன்றே. ()

கொத்துறுசண் பகவனத்தாற் புகல்சம்ப காரணியங் குலவு முன்னர்ச்
சத்தியணைந் துறைதலினுற் சத்திபுர முயர்முத்தி தருத லாலே
முத்திபுர மிறைசோதி யானதனுற் சோதிநகர் மொழியும் வில்வ
மத்தமெனச் சூழ்ந்திடலால் வில்வவனம் பிறவுமங்காங் கறிய லாகும். ()

வேறு.

நற்ற வம்புகழ் தருமநல் விரதமெய்ஞ் ஞானஞ்
சொற்றி டுந்திடம் பொறைநலந் தொகுபொரு டம்மை
யுற்ற வேள்வியைச் சராசர வுயிர்த்தொகை தம்மைப்
பெற்ற தாயென வளர்ப்பது பேரிடை மருது. (௰௯)

வேறு.

கோலமுறு மனையநக ரிடத்துற் றோர்கள்
கோகனகன் விதித்தவிதி தனையும் வெல்வர்
காலனச்சங் கனவினிலு மவர்கட் கில்லை
கருதுமந்தப் பதியிடத்தி லவனும் வாரா

னேனுமவன் றூதருக்குத் தினமுஞ் சொல்வா
னிடைமருதின் மறந்துமணைந் திடேன்மி னென்னப்
பாலினவ்வூ ரினர்களெதிர்ப் படினு மஞ்சும்
பார்க்கினருங் குறள்கணத்தோர் வெருள்வ ரென்றே.

பூதலத்தி லுயர்ந்தவிடை மருதின் மேவும்
புண்ணியர்க்கு நவக்கிரகத் திடுக்க ணில்லை
பூதமொடு பசாசுதான் வாரா வின்னல்
பொருந்தாது வயிரவன்றன் றுணைதண்டேற
பூதமுறு தவர்தான மியோகமாதி
புரிந்திடுங்கா லிடையூறு புணராதாமுற்
பூதமுறு மினியபுகழ் ஞானசித்தி
புத்தியொடு முத்தியது மெளிதினாமே. (உக)

அந்தவளம் பதியிடத்தோர் கவளமன்ன
மருந்திடநீ ரனுவளவு செம்பொன்றான
மந்தணர்கட் களித்தவர்கள் கயிலைசேர்வா
ரகஞ்சமைத்துத் தவர்திண்கல் லாதிநல்ம
ணைந்தமொரு துகட்கயுத யுகமீசன்பா
லமர்ந்திருப்பார் வினைநிலனுக் கரன்போலாவ
ரந்தமுறு கன்னியைத் தானமாக
வளித்தவர்க ளரவணையோன் பதவிசேர்வார் (உஉ)

தருவுதவு கனிகளொடு காய்கண்மூலஞ்
சந்தனம்வெள் ளிலைகமுகந் தயிலநெய்பால்
மருவுகலை கவிகைபா துகைநீள் கட்டில்
வழங்கினர்கள் வேண்டுமின்ப மருவிவாழ்வார்
குருடரொடு செவிடர்பித்தர் பிணியருமர்
குறையுடையோர் முடவர்முது கிழவரொன்னும்
பொருளிலர்க ளெவரேனு மவர்கட்கன்னம்
புரிந்தளித்தோ ருலகமெல்லாம் புரப்பர்தாமே. (உ௩)

விடத்தனியொண் மிடற்றிறைவ னடியார்கட்கு
விருப்பினொடு மடஞ்சமைத்தாங் களித்திட்டோர்க
ளுடுத்திடுமென் கலைகொடுத்தோர் சொன்னமன்ன
முதவினோ ரிம்மையிலுஞ் செல்வமின்ப
மடுத்திருந்து மறுமையினு நெற்றிமேற்க
ணமர்ந்திலங்கப் பாரிடங்கள் சூழவாழ்வார்

கொடுத்திடுவோர் பெறும்பலன்மற் றொருவர்க்குண்டோ
கூறுவது முலகமவர் புகழேயன்றே. (உ௪)

புறநகரிற் பரிமேதம் வாசபேயம்
புகலுமக்கி னிட்டோம மிராச சூயந்
திறனுச்செய் திடுபலனுங் கங்கை யாதித்
தீர்த்தமெலாம் படிந்துவரு பலனுந் தூய
நெறியுதவு மிடைமருதில் வதிவோர் கட்கு
நேருமனு தினமுமங்க ணினிது செய்யு
மறமெவையுந் திலமளவு மேரு வாகு
மல்லதுவெற் பெள்ளளவு மாகாதென்றே. (உ௫)

சுருதியிழந் திடுமறையோ னுங்கு மேவிச்
சோதிதனைப் பணிந்திடிற்சு ரியனே ராவன்
றரணியிழந் திடுவோர்தன் றரணி சேர்வன்
றக்கபொரு ளிழந்தவர்கட் கதுவந் தெய்தும்
பொருபகைமை தவிரவெண்ணிற் றவிரு மோங்கு
புதல்வுறுற வேண்டினோற புதல்வ ருண்டாம்
மருவுபிணி தீரவெணிற் றீரு முத்தி
வழங்குநகர்க் கிவைகளொரு வியப்போ வம்மா. (உ௬)

வீசுபுகழ் மருதீசர் தமக்கு நெய்பால்
வெண்டயிர்தே னுதிகள்கொண் டாட்டு வோர்கள்
வாசமொடு மலரளித்தோர் தூப தீபம்
வகுத்திட்டோ ரனமாதி நிவேதித் திட்டோர்
தேசுபெறு சிவலோகத் தினிது வாழ்வர்
திகழாடல் பாடலிவை செய்வித் தோர்கள்
பேசுமெழிற் கயிலையினீ டூழி காலம்
பிரியாது வாழ்வர்சிவ கணங்கள் போற்ற. (உ௭)

இடைமருதீ சனைப்பணிதற் கொருவ னெண்ணுற்
றெழுந்திடி லங்கவர்வினையு மெழுந்து நிற்கு
நடையுறிலவ் வூர்நோக்கிப் புறவூர் நோக்கி
நடக்குமது சொல்லாம லவர்க ளேகத்
திடமிலரா யுடனொருகாற் றிரும்பி னுலுந்
திரும்பாது சென்றவினை சென்ற தேயாம்
புடவிபுகழ் காசியினுற் றிலகு கங்கைப்
புனல்படிந்து வருபலன்மற் றவருக் கெய்தும். (உ௮)

வேறு.

கொலைபுரி வினைசெய் தோர்கள் குலவிடை மருதர் செய்ய
மலரடி வணங்கற் கெய்தின் வாயிலின் புறத்தே மிக்க
மெலிவொடு நிற்கு மன்னோர் வெளிவரிற் குனிந்து கொள்ளும்
வலியர்தம் மருள்பெற் றேனை மற்றையோர்செய்வ தென்னே.(உக

பாங்குயர் தலத்தோர் திங்கட் பட்டினி விரதத் தின்பே
றோங்கொரு திங்கள் வாரத் தாற்றிய விரத நல்கும்
பாங்குயர் தலத்திற் பல்லாண் டருந்தவம் பயின்ற தின்பே
றோங்கொரு கடிகை மூலத் தாற்றியசெபத்தி னெய்தும். (௩0)

அத்தலத் துமையா ளாதி யனேகர்மெய்த் தவஞ்செய் தாரைத்
தத்தந் தியர்பல்லோ ரொம் மத்தனை யருச்சித் தாரொம்
மத்தனுந் தன்னைத் தானே யருச்சனை புரிந்தான் மேலு
மத்தநாட் டிறைமுன் னாகப் பலர்பழி யகற்றி னோர்கள். (௩க)

ஆயிரம் வாயி னாலு மனந்தனோர் பணிய தாகி
யாயிர முகஞ்சொன் னாலு மணியிடை மருதின் மேன்மை
யாயிர மதனி லோர்கூ றியினு மறைதன் முற்றா
தாயிரங் கதிரோ னன்ன வாய்மைசா லருந்த வத்தீர். (௩உ)

என்றனன் முனிவ னைய வித்தல மகிமை தம்மு
ளொன்றுமித் திவசங் காறு முணர்ந்தில முணர்த லுற்றே
மின்றுன தருளி னன்மற் றிசைதவ மிமைய மென்னுந்
தென்றனிப் பொருப்பின் செல்வி செய்ததென் னிமித்த மென்றார்.

என்றலு மகிழ்வுற் றந்த விருடியர் விருப்பந் தன்னைக்
குன்றெறி வடிவே லண்ணல் குறித்தநுங் கருத்தி தாயி
னன்றதூஉ முரைத்து மென்ன நவின்றன னவின்ற வாறே
துன்றுமக் கதைத மென்னச் சூதமா முனிவன் சொல்வான். (௩௪)

தலவிசேடச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

ஆ திருவிருத்தம் கஅக.

உ

சிவமயம்

# உபதேசச்சருக்கம்.

---

இரும ணிப்பெருங் கோடுபெற் றிலங்கலாற் சுவேத
வுரும னாற்றிடுந் தகையினா லுமையவ ளொடுதெண்
மரும லர்ச்சடைத் தனிமுதன் மகிழ்ந்துறைந் திடலாற்
றரும மால்விடை போன்றது கைலையஞ் சயிலம். (௧)

செங்கண் மாலினை விடுத்தொரு சிறுவனுண் டிடமுன்
னங்க ளித்தல்போற் றனையினு மளித்திடா தெவர்க்குந்
துங்க வெற்புவிற் பரனறனைச் சுமந்துகொண் டினிது
பொங்கு பாற்கட லிருப்பது போலுமச் சயிலம். (௨)

அகில லோகமுங் கரைந்திடை யழித்துட ஞக்கு
மிகலுடைக் குறட் பூதங்க ளிலங்குபல் கோடி
பகரு மம்மலைச் சாரலெங் கணுமுயர் பரம
னுகள பங்கயப் பதம்புகழ்ந் தாடிடு முலாவும். (௩)

அனைய சாரலின் மீதெழி லாயிரந் தோட்டு
நனைகொ டாமரை யோடையு நறவமுண் டளிகள்
கனைசெ யப்பொலிந் தாயிரம யோசனை கமழும்
புனைம லர்ப்பொழிற் குலங்களும் புடைதொறுஞ் சூழும். (௪)

ஒதி வற்றினுட் கதிர்மணி யொளிர்தரு மலகில்
வீதி யும்புக லமரரோ டுருத்திரர் மேவுஞ்
சோதி மாளிகை நிரைகளுஞ் சூளிகைக் குலமு
மாத வத்தினோ ருறையுளும் வயின்றொறும் விளங்கும். (௫)

அலகின் மங்கைய ரிசைக்குமே ழிசையுட னார்வத்
திலகு தும்புரு நாரத ரிசைக்குமியா ழிசையும்
நிலவு வானமு தெனச்செவி நெறிப்புகுந் துளத்தி
னுலவ மெய்மறந் துறைவரீ சனைத்தொழ வுற்றோர். (௬)

படக மாதியின் முழக்கமும் பணைமுலை மகளி
ரடிக டாங்கிடு மணிச்சிலம் போதையு மமர
ருட னருந்தவர் துதித்திடு மமலையு மொன்று
யிடியி னார்த்தலி னணமுற் றிடியுட லிடியும் (௭)

இன்ன வீதிகள் சூழ்ந்திட நாப்பணுற் றிலங்கு
பொன்னின் மாமதி லேழினும் பொருந்துநாற் றிசையுந்
துன்னுகோபுரந் துணைகொள் பொன் மலையெனத் தோன்ற
மன்னு கோயிலொன் றம்மலை யுச்சியின் வயங்கும். (௮)

கோயி லெங்கணு மமரர்தங் குலமணி மகுடம்
மேய வொன்றொடொன றுரிஞ்சலின் வீழ்ந்திடு பணியாற்
றூய மாமணி வரையெனச் சொலும்படி துலங்கும்
வாயி லெங்கணுங் கஞ்சுகிப ரளவிலர் வதிவார். (௯)

மணியி ழைத்திய தமனியத் தூண்பல வகுத்திட்
டிணையி லிந்திர நீலவொண் போதிகை யியற்றி
அணிசெ யுத்திர மரகதத் தமைத்துவண் கொடுங்கை
தணிவி னீள்கதிர்ப் பதுமரா கத்தினாற் சமைத்து. (௰)

இந்து காந்தவுத் திரங்கண்மீ திலங்கிடப் பரப்பி
சந்த நித்தில விதானங்கள் சாற்றிடுள் ளொங்குந்
தந்து மீதெழில் விமானமுந் நயங்கிடப் புரிந்த
வந்தண் மண்டப மொன்றுள தாலய நடுவில். (௰௧)

அடுக்கும் வச்சிரத் தமைத்தொளிர் விமானமீ தமரத்
தொடுக்கு மாணிக்கத் தசும்புறு சோதியின் முன்னர்
நடக்கு மோதின கரன்கதிர் நாணொடு நெற்கும்
வடக்கு மாகவே திரிகுவன் வயங்குபப் பகலோன். (௰௨)

ஓங்கு மண்டபத் திடையிலே ருரகமா மணிக
டாங்கு வச்சிரத் தகடெழின் மடங்கலா தனத்தின்
வாங்கு வெண்பிறைச் செஞ்சடை வரதன்வீற் றிருந்து
பாங்கு பெற்றிடு மம்பிகைக் காகமம் பகருப. (௰௩)

ஆலமார் மிடற் றிறைவனைப் பணிவதற் கணைந்த
மால யன்புரந் தரன்முதல் வானவர் கணங்கள்
சால் பெரும்புகழ் சிலாதரன் றனையனுங் கீது
கால மன்றென மீண்டகன் கடைத்தலை யிருப்ப. (௰௪)

பானு கம்பனு தியர்சில பாரிடத் தலைவர்
மானமுற்றவர் சேய்மையி னிலங்குறூண் மறைவில்
ஞான நாயகன் பார்வையுஞ் சிறிதுமே னண்ணா
தான மொன்றினிற் பொருந்திடார் தனித்தனி நிற்ப. (௰௫)

அயில்கொள் வேல்விழிக் கயலினி யாதியாஞ் சிலர்கள்
பயிலுஞ் சேடிய ருமையவள் பங்கயா னனத்தி
லியலு மன்பொடு நோக்கம்வைத் தினிதுசே ணிடையோர்
வெயின் மணிச்சுவ ரருகிற்சித் திரமென மேவ (௰௬)

கூறி டும்முல கனைத்தையு மீன்றவள் குலவு
வேறொ ராதனத் தருகெதிர் மேவினளிருந்து
மாறி லாதர முளத்திடை மருவிடக் கேட்குந்
தேறி டும்படி கேட்பவள் சிலவினாச் செய்வாள். (௰௭)

### வேறு.

இறைவனின் வடிவா மாகமப்பொருளை யெடுத்தெடுத் தருளுட [illegible]னக் கீ
டறைநியா லனந்த விதங்களி னவற்று லடியனேற் குற்றதோர்மலேவு[ண்
மறைகளு முனது குணமுண ராது மருள்கொடு திரிவதாந் தெரியு
முறைமையாற் கேட்ட தமைவரக்கேட்டல் முன்னினன் விறுவுறத்துணி
[ந்தேன். (௰அ)

உலகமென் னிடத்தி லுளதியா னந்த வுலகிடத் துளனென வுரைத்தா
யிலகுமாண்பெண்ணேடலியெனு மூன்றிலெதுவென நினைப்பிரித்தறிவே
னலனுறு சாந்த னுகவு மிருத்தி நவிலுமுக் கிரனென வுறைதி [னீடுற்றாய்
மலர்நெடுங் கணையோன் றனைமுனிந்திட்டாய் வாஞ்சையென்னிடத்தி

மாயைபற் பலவாற் றிடுதியீங் கனைய மாயையி னென்றிலோ மென்றாய்
மேயவோர் தொழிலு மிலனெனவுரைத்தாய் விளங்கு மெத்தொழில்களும்
புரிதி, தூயதாம்வடிவோ டிருத்தியோர் வடிவுந் தோய்விலோ மெனவெ
டுத் திசைத்தா, யேயுறு முயிர்க்குச் சங்கரனுக விருத்திசங் காரமும் விளை
த்தி. (௨௰)

ஐயமேற்றிடுதி நினைநினைந்தோர்கட் கருள்கொடு வேண்டிய தளித்தி
யையமின்றுலகுக் கொருவனு யிருத்தியநேகனு யிருக்கவுங் கண்டே
னையமென் மலரா னனத்தினை யுனையா னறிவதெவ் வாறரு ளென்று
னையனு மூவகை கூர்ந்திது விறுதற் கமைந்ததேயென வுரைத்திடுவான்.

வேறு.

ஆதிநம்மிடத் திருந்தது மாயைமற்றதனைப்
பேதமுற்றிட நோக்கின நோக்கலும் பிரிவுற்
றுதரத்தெதிர் நின்றதை யாங்குறநோக்கி
ஓதுமிப்புவ னுதியைச் சிருட்டியென் றுரைத்தேம். ௨௨

மன்னுறும் வட வித்தினில் வடபரிணும
மென்னமாயையிற் செகமெலா மடங்கியதெனினு
மன்னதற் கெனஞான மொன்றின்மையினுகா
துன்னையன்றி நானது செயவென்ற தாலுற்று. ௨௩

முந்திநம்மினின் றிச்சைமென் மொழிதரு ஞானஞ்
சந்தமுற்றிடு கிரியை மிவைகளைத் தந்தே
யிந்த மூவகை ச்சத்தியில் யாமுமோ ருருக்கொண்
டந்த மாயை யிற்றனுமுத னுன்கையு மகற்றி ௨௪

நன்மை தீமைகட் கிசைவுற நவிறனு வாதி
யென்னு நான்கையு மளிக்குவ மிசையுயிர்க் கங்ங
னன்ன தன்மையிற் பிறந்திறந் தயருமம் மாயை
தன்னி னுஞ்சிறி தேனுமுண் மயங்கிடேந் தழுவி. ௨௫

வலிகொளிந்திர சாலஞ்செய் வான்றனை மயக்கா
லலகின் மற்றுள மணிதனை மயக்குத லொப்ப
நிலவுமாயையு நந்தமை மயக்குற நினையா
திலகு நம்மை யல்லுயிரொலா மயங்கிட வியற்றும். ௨௬

மேவலென்னை நாமிச்சையாதிகளை மேன்மேவி
யாவதென்னெனிற் சத்தியு நாமும் வேறன்று
பூவும்வாசமு மிரவியுங் கிரணமும் போல்வோந்
தாவுசத்திநித் தியமதாய நாதியாய்த் தயங்கும். ௨௭

இச்சை மற்றெமங் குயிர்களைக் கருணையா லெமக்கு
மெச்சுஞான மவ்வுயிர்களின் வினையறிந்துதவு
மெச்சமில்லதாங் கிரியைநின்றவ யவமிசைக்கு
நச்சி யைந்தொழி னடாத்துவோம் நாம்வினை யாட்டின். ௨௮

இலகுகற்பனை கரணமென்றிரு விதந்திருட்டி
நிலவுகற்பனை சத்தியின் மாயையை நீக்க
லுலவுமைந் தொழிலியற்றுதல் கரணமென் றாக்குந்
திலகவாணுதற் றுடியிடைச் சேயிழைக் கொடியே. ௨௯

மன்றநிட்களஞ் சகள நீள்வித்தையே மாயை
யென்றுநந்தமக் கீரிரண்டுருவ நன்கிசையுந்
துன்றுமாயைக்கட் டோன்றியோர் மேனியாத்துலங்க
நின்று மூன்றநிட்டிதமுற நேர்கொள்வோம் பூசை. ௩௰

சாற்றுமந்திர வுருவமாய்த் தயங்கிடு வித்தை
யேற்றதந்திர மாதிவர்க்காதி களிந்திட்
டாற்று பூசனைக்குரிய மெய்யுருவ மாயுன்பர்
போற்றல்செய்ய வீற்றிருந்த வர்க்கின்னருள் புரியும் ௩௧

சத்தி மூவகையால் வடிவுற்றது சகளஞ்
சுத்த மாதவர் தியானமும் பூசையுந்துதியு
மித்திறத்தினே நிட்களம் புணர்தலு மிதுவே
யுய்த்தல் செய்வது மொடுக்கலு மித்தகையுருவே. ௩௨

வந்த நிட்கள மளவைநீண்மறை திருக்காதி
முந்திடும்புலங் கடந்தொளிர் முதிரறிவுருவாய்ச்
சிந்தைசெய்பவர்க் கத்திறந் திகழ்ந்துயிர்க் குயிரா
யந்தமார் குருவருளினு லளவிலே யருளும். ௩௩

சகளநீயுனா நிட்களந் தானுநீயாமெண்
டிகழுருக்கொளப் புரிதனி யைந்தொழிற் செயனீ
மகிழ்வொடுன் னிடத்துறைவம்யா மிங்ஙனீவதிவாய்
மிகுமுருப் பெயர்நமக்கு வேறன்றி நாம்வேறே. ௩௪

நீருந்தண்மையு மென்னவே நின்னுட னிலகும்
பூரணப் பொருளாகு நாமைந்தொழில் புரிந்திட்
டாருயிர்க்கெலாம் புத்தியு முத்தியு மளிப்பான்
சாரும்பறபல வுருவமுஞ் செய்கையுந் தரித்தோம. ௩௫

ஆதலான் முனமிசைத்ததே யுண்மையென்றமல
ஞதிநாயகிக் கிசைத்தலுமவண் மகிழ்ந்திறைஞ்சி
யாதரத்தொடு தெளிந்த தாலைய நினனருளா
ஞதனே யுலகெழிலி னிக்காட்டடென நவின்றாள். ௩௬

பாண்டரங்கனெம முடலினிற் பரவுலகி யல்போ
பூண்டிடும் புறவுலகுறு புதுமையோ வென்ன
வாண்டநின் கணுருலகிய லுணர்விறு லறிகேண்
காண்டல் வேண்டுமிவ் வுலகுறுகவின்றனை மாதோ. ௩௭

மதிகொள் வேணியாய் புவியிடைமருவுறு தலங்கட்
கதிகமாய்ச் சுரர்போற்ற நீயகமகிழ்ந் தினிது
வதிவதெத்தலங் காட்டுதி மற்றதூஉ மென்றாள்
பதிமகிழ்ந்து நன்றென்றன னெழுந்தனன் பனைமுன். ௩௮

ஐந்துருக்கொடத் தொகைத்தொழி னடாத்திடெம் மையன்
சிந்தையான் மகிழ்வுற்றுமை தெளிந்திட நன்கு
முந்தையாகமத்துட் பொருளுரைத்திடு முறையி
தந்தணீரினி யவன்விளையாட லீண்டறைவாம. ௩௯

உபதேசச்சருக்கம் முற்றும்.

ஆக திரு விருத்தம் ௨௨௮.

# திருவிளையாடற் சருக்கம்.

ஆதிநந்தியை நினைத்தனது வொருவயிர
வோதிமத்தின் வந்துற்றதாங் குமையவளுடனு
மீதிவர்ந்தன னதிலொரு மாணிக்க வெற்புஞ்
சோதி நீலமால்வரை யொன்றுந் தோன்றியதென்ன.

வென்றி மால்விடையது தனைவிசும்புற நெறியாய்த்
தென்றிசைப்படச் செலுத்தினன் மெல்லெனச் செலுங்காற்
குன்றுகானமு நதிகளுங் குலவுயர் தலனு
மின்றயங்கிடை யுணர்ந்திட விளம்பினன் சென்று.

அன்னையாகி யிவ்வுலகினுக் கறைதருகவேரன்
கன்னியாய்க் கயல்விழிகளாய்க் கமலமே முகமாய்ப்
பன்னிடுஞ் சுழியுந்தியாய்ப் பயோதரஞ் சகோர
மென்னும் புட்களா யிலங்கிடுந் துறையவ ளிசைத்து. ௩

பின்னுமந் நதியிறதா யிசைந்தவும் பிறவு
மின்னதின்ன தென்றுரைகையோ டிலங்கிடக்காட்டி
மன்னுதென்கரை வளரிடை மருதினேருறுங்கா
லுன்னுமோர் மருதாகியாங் குற்றது கயிலை. ௪

எங்குமுற்றுநின் றியாவையு முணர்ந்தடு மெங்கள்
சங்கரன் றனிக்கயிலையா மருதிடைச் சார்ந்து
பொங்குமத் தருநீழலிற் பொருந்துறு விசும்பிற்
றங்கமால்யிடை நிறுத்திநின் றின்னது சொல்வான். ௫

இனையமாதல மாதியா யிருப்பது நமக்கீ
தனையமாதலம் புரவைசூழ் கிலத்தி னில்லை
நனையமாமலர்ச் சோலையும்வாவியு நன்கு
புனையுமீடுறு மிதனெழில் பாரெனப் புகன்றான். ௬

மற்றதற்கு முன்னுங்குப மன்னியவுறுதி
நற்றவத்தி னோரனேகர் கணவிலுறு தவமு
முற்றதெய்விகத் தன்மையு முயர்ந்த சம்பகங்கள்
பெற்றகானமும் பார்த்தன ளுமையவள் பெரிதும். ௭

கண்டுநெஞ்ச நெக்குருகிடுங் காலையிற் கண்கள்
வண்டுளிக்கணம் விடுத்தனன் மற்றது குணபால்
மண்டுபொற்பினு டலகெலாம் வணங்கிடு மேன்மை
கொண்டுகொருணி யாமுத தீர்த்தமாய்க் குலவும். ௮

செய்யவாள் வரித்தடங்கணீர் சிந்துத லுசக்கிக்
கையின் மான்மழு வெடுத்தவன் கண்டனை கொல்லோ
வையமுற்றிடு புதுமை யென்றுரைத்தனன் வணங்கி
யைய கண்டனனென்ற ளகிலமு மீன்றாள். ௯

எங்களன்னை யீதியம்பலு மெழின்மதிச் சடிலப்
புங்கவன் றிருநயனமுங் கருணைநீர் மொழிந்த
தங்கதோ ரிரண்டாகிப் பொன்னிறத்த தாயனிலன்
றங்கு திக்கினுந் தெற்கினுஞ் சார்ந்தது தடத்துள். ௰

வேறு.

சார்ந்திடு வடமேற் றடத்தின் முன்னர்த் தண்புன லிலாமையினுவி
தீர்ந்துலர்ந் துற்ற சலசரமனைத்துஞ் சிவபரஞ் சோதிதன் றிருக்கண்
வார்ந்திடு மமிர்தம் படவுயிர் வாய்ந்து மருவுருத் திரிந்துருத்திரராய்
சேர்ந்திடுங்கோடி தினகர ருதய நிகரொளி விமானமேறினவே. ௰௧

இலகெழில் விமானத் தலர்மழைபொழிய வேறிய வுருத்திரர் கணமும்
வலனுறு மிமையோர் கணங்களுங்கணிச்சிவலவனை வலங்கொடு வணங்கி
மலர்கொடு சமைத்த வொருதனிவிமான மகிழ்வொடுஞ்சாத்தினர்நின்றுங்
கலகில் வண்போதா லருச்சனை புரிந்தா ளைவகை நாதமுமுழங்க. ௰௪

இவ்வணமுனிவ ரறிந்திடாதவர்க ளிசைத்திடு தர்க்கமுற்றறிவா
னவ்வயி னிறைவ னிலங்கொருமுகூர்த்த மமர்ந்திடவிந்தமுன்னடக்குஞ்
செவ்விய முனிவ னப்பொழு தவர்க டிருமுனம் வந்தன னவர்கள்
பவ்வமொண்மதிகண்டாலெனமகிழ்ந்துபணிந்தெழுந்தவனொடுமிருந்தார்

இருந்திடு முனிவ ரடைந்தமாதவ னறனெழின்முகப் பங்கயநோக்கி
பொருந்திரைக்கடலை யருந்தருட்கடலே புண்ணியமியற்று புண்ணியமே
திருந்திய வேள்வியாதிநல் வினைகள்செய்திடிற் பலனினி தளித்தல்
புரிந்திடுவினையோ பரமனோ வெமக்குப் புலப்படப்புகல்கெனப்புகன்றார்.

தண்டமிழ் முனிவனின்னுநும் மனத்திற் சார்ந்திடு சங்கைகளியாவும்
விண்டிடுமெனமற் றவர்மறைக் குலங்கள் விதித்திடு வேள்விக டவங்க
ளொண்டர வியற்றிற் பரனெதிர்தோன்று மெனுமுறை யிசைவதன்றுருவு
கண்டிடாமையினன்மாதியாங்கரணங் கண்ணுதற்பரமன் மற்றில்லை. ௰௬

இம்பரிற் புரிந்த நல்வினைப்பயனை யெய்திமற்றிவ ருயிர்தாமே
யும்பரி னருந்து மென்னவிவ் வுலகோ ருரைப்பர்க ளின்னவும் புகல்வாய்
பம்பிடவினுவு பொருள்களுண் டின்னும்பார்க்கிலிந்நெறியவேயென்றார்
கும்பசம்பவ னீர்தெளி வுறவுரைப்பன் குறிப்புறக் கேண்மெனக் கூறும்.

முனிவிர்கா ளென்கண் முனிவுரு தொழியுன் மொழியிநுங் குலத்தொடு
நனியுயரமுறைப் புலியுறுகமரி னண்ணின ருகுத்ததுபோன்ற [தவமும்
வினைகளு முடலுஞ் சடமெனக்கலைகள் விளம்பிடு மாதலா லொருவ
னனையதொல் வினையைக் கூட்டுவித்தன்றி யாருயிரருந்திடாதாகும். ௰எ

தவமுறுவேள்வி யாதிக ளியற்றிற் றருபல னடைகுவ துயிரோ
கவிலுறு தனுவுங் கரணமுமிடமும் நண்ணிடு போகமுமான
திவளுறு பலனைத் தெரிந்துயிர்க்கெங்குஞ்செறிந்தினிதுறைந்திடுமெங்கள்
சிவபரஞ்சோதி யெனுமிறையவனே திறம்பிடாதடைவினிலருள்வோன்.

ஆவியுங்கரும மதுவும் விண்ணுதி யடைந்துறு பலன்கொளு மென்னின்
மேவுறு குருடனுமோர் முடவன் மேருவின் முடித்தனிச்சென்று
நாவுறப் பசுந்தே னெடுத்தருந்தியது நானெதிர் கண்டனனெனலாங்
காவலன் றனைச்சூழ் மறவர்வென்றனரோற்கருதிடுவரிசையார் கொடுப்பார்

வேறு.

அண்டர்பிரான் றனைப் பணியாச்சிறுவிதியி னணிமகமு
மிண்டுபுரி யிராக்கதர்க டிரிபுரமும் விதிதலையுந்
தொண்டுபடு சண்டீசன் றன்னுபெருஞ் சிறப்பொடுமோர்க்
கண்டனடை பேறுமென்றன் கைத்திறமுங் கருதிடுமின் ௨0

பரசிவனைக் குறியாதார் மனமெவையும் பகர் சுடரி
லிருளறையும் பகலவனில் லிருவிசும்பு மனுமுறைதேர்
புரவலனில் பேருலகும் புனல்வறந்த பைங்கூழும்
வரனிழந்த தனிமுல்லை மடந்தயரு நிகராகும். ௨௧

மனமாதி கண்டிலவான் மதிமுடியோன றனையென்றீ
ரனையனுள னென்றவர்பா லுளறுவ ஞதலின்முன்
வினைதருநும மியல்பனைத்தும விந்ததினைய வியன்றலத்திற்
றனிமுதலை மனத்திருத்தித் தவம்புரிமி னெதிர்தோன்றும். ௨௨

இத்தகமை சரதமென மலையமுனி யிசைத்திடலு
மத்தவர்கள் மிகமகிழ்வுற நிறையுள னென்றகந்தேறி
யெத்துணைநா ளிவற்பணியா தேகினவென் றிரங்கிவினை
யொத்திடச் சத்திநி பாதமுதிதது முனிசனைவணஙகி. ௨௩

நல்குரவி லுறுநிதியு நவில்வேனி லிடைச்சொரியு
மல்குபெரு மழைமுகிலு மானுறவெம மெதிர்தோனறிக்
கல்விதரு சுருதிகொடு கத்துரு நிச்சயஞ்செய்தா
யொல்லுறு மாதவ முனியாமுனுற்று நெறிவிதிக்கென்றார். ௨௪

விறபெறு நனமணிக் குணங்கள் விழியில்லான காண்பதுவும்
பொற்புறு வித்தாதி யிலான் பயிர்விருப்பும் புரைவாகுஞ்
சொற்படு மெய்ப்பரம பொருளைத்தொகுபத்தியிலா ரறிதல்
பற்பல மாதவத் தன்றித தோன்றுதப் பத்தியுமே. ௨௫

இன்னுமொரு வழியுரைப்ப னியலளவைக் கடங்காத
சின்மயனை யவனருளாற் றெரிசித்தல் வேணடுங்கண்
முன்னிருந்து மொளியின்றி மொழிபொருள்க டெரிவுறுமோ
வன்னதனுற் பராபரையா லறியமுயன்றிடல வேணடும். ௨௬

ஓதுபர னருளதனி லுருத்திரன்மால் விதிதோன்றத்
தீதில்பரை யிடத்திலுமை திருவினெடு வாணியென
மாதருறு மூவர்களும் வந்துதித்தம மூவருக்குங்
காதலுறு தேவியராய்க் கலந்தனர்க ணிரைநிரையே. ௨௭

சுருதிமுதற் பலகலையுந் தோற்றுவிக்கு முயர்வாணி
திருமகணல் லறத்தினெடு பலதிருவுந் திகழ்விக்கு
மரனையுமை யவள்காட்டி மாதவினுலிவர் தமமைப்
பரவிலிறை யெதிருமெனக் குறுமுனிவன் பகர்ந்திட்டான். ௨௮

வேறு.

நெடிய புகழ்க் குறுமுனிவ னிசைத்ததுவு மருந்தவத்தோர் நினைவு மோர்ந்து, விடமணிகண் டனைநோக்கி யுமையிவர்முன் னெதிர்வமென மேவலின்று, தொடர்தவத்தி னுமையருண்முற பெறிலவள்செய்திடுவள்ப ரன்றோன்றவென்னக், குடமுனிவ னிசைத்ததற்கு விரோதமா முறைய துவேகுறிக்கும்போதில. ௨௯

அதுவுமன்றி வருத்தமுறத் தேடியொரு பொருளதன்றனருமைதோன்றும்
விதுவதனத் தாயெவர்க்கு மாதலினுன் மலையமுனி விதித்தவாறே
முதுமறை மாதவர்க ளுனைக்குறித்தியறுந் தவத்தாளி முன்னர் நின்றுற்
கதுமெனத்தோன்றுதுநாமும் நீயினிதிறைற் றுதவங்கண்டபின்னர். ௬௰
என்றிறைவனசைத்தனனுங் கிருந்தவர்க ளசைத்ததுவு மிலங்குமின்பத்
தென்றமிழ்மா தவனசைத்ததிறனுமுமையசைத்ததுவுஞ்சிலே வேடன்னை
வென்றவன்ற னசைப்புமிடை மருதினியற் கையுமெணணிவிடபதேவன்
றன்றலையை யசைத்திடத்தன் மணியசைந்து கணிரென்னத் தயங்கிற்றன்
றே. ௬௧
மண்ணுலக மதிர்ந்ததுகட் செவியுலக மதிர்ந்த திமை மருவிடாதோர்
விண்ணுலக மதிர்ந்ததிது வென்கொலெனத்த போதனர்கள் வியத்தல் கண்டு
கண்ணுதலோன் சிறுநகைசெய் திறைவிதனைநோக்கவவள்கருணைமூர்த்தி
யெண்ணுறு நின்றிரு விளையாட்டெலதெலவாறிவனெனவிசைத்தாள்போற்றி.
அவ்வுரை கேட்டுளமகிழ்வுற் றினிவருகென றவளுடனு மடலேறூர்ந்து
செவ்வியல்வெண் கயிலையடைந் தினிதிருந்தா னிறைவனிது தேவிகாண
நவ்வியங்கைப் பரனிழைத்த விளையாட லினித்தேவர் நகரிதெங்கு
மவ்வன் மணங்கமழ் பொழில்சூழிடை மருதினுமை தவஞ்செய்வளமை
சொல்வாம். ௬௨

திருவிளையாடற் சருக்கம
முற்றிற்று. ஆக திரு விருத்தம் உ௬௧.

# தவநிலைச் சருக்கம்.

மலையமுறு தவமுனிவ னுரைத்தபடி தபோதனரு மகிழ்வினோடு
நிலைதருமெய்ஞ் ஞானமுறத் தவமபுரிந்தார் கலைமகளை நினைந்துமுன்னர்ச்
சிலைநுதல்வேற்கருந்தடங்கட்கலைமகள்வெள்ளனமதனிற்சிறக்கத்தோன்றி
யலைவறநீ ரெவையுமுணர்ந் திடுகவென வரங்கொடுத்தா ளகிலமுய்ய. (௧)
ஞானமுறச் சகலமுமிக் குணர்ந்ததற்பின் மகமினிது நவிலுங்காலை
தானமுத வியற்றுதற்குப் பொருளாதி வேண்டினர்செஞ் சலசமின்னை
மானமுறக் குறித்தரிய தவமியற்றக்கருடனமிசை வந்துநின்று
தேனமிர்தமெனுஞ் சொல்லாள் வேண்டுவதென் னெனவேண்டுஞ் செல்வ
மென்றார். (௨)

கானுலவு மலர்த்தடமுங் கனகமணி மண்டபமுங் களிவண்டுண்ணுந்
தேனுலவு சண்பகத்தன் பொழிலு நவமணிக்கு வையுந்தேவர்சூழும்
வானுலவு தேனுவுமொண் கற்பகமும் பிறவுமெங்கும் வயங்கச்செய்தாள்
மீனுலவு கமல நிகர்வதன முறுகமலை யெனும் விமலைமன்னோ. (௩)

முத்தநகைப் பவளவிதழ்க் கமலையெழின் முகநோக்கி முனிவரின்று
மித்தலவாழ்குந் ரொவர்க்கு மினிய பெருஞ்செல்வ மளித்தென்றுநீயுஞ்
சித்தமகிழ்ந் திவணுறைதல் வேண்டுமென்ற ரவளுமிது செய்துமென்று
ளத்தினநதொட் டநகரந் திருவளர்மா நகரான தவனிமீது. (ச)

பொன்னுருவச் சண்பகத்தண்மலர்ச்சோலை யெங்குமிகப் பொலிதலுக்கி
மன்னுசண்ப காரணிய மாகியதித் தலமிந்த வைக லாதி [ரும்
யென்னவதற் கொருநாமங் கொடுத்தனன்பின் னருந்தவர்க ளிருந்துளோ
தென்மலைய முனிவனு முமையைநினைந் தரியதவஞ் செய்ய லுற்றார். ()

கந்தமலர் வேணியனைப் பூசித்தும் மகம்புரிந்துங் கல்வி நீடு
மந்தணர்க்குஞ் சிவனடியா ரொவர்க்குமன்ன மாமகிழ்ந் தளித்துநெஞ்சிற்
சந்ததமு முமையவள்பொற்றாள்குறித்தும் பற்பலநாட் டவங்கள்செய்தும்
வந்திலளாங் குமையவள்கண் டகத்தியனு முனிவன்மிக வருந்துகின்றான்.

பனிவரைக்கோம் பருளாதிவ் வாறிருக்க நாமென்ன பவஞ்செய் தோமோ
முனிவரர்க்கு நாமிசைத்தமொழியென்று மினியென்ன முன்னிமுன்னித்
துனிவருத்த மிகவுற்றா னெதுவுமிறை யவனருளாற் றோற்றுங் காலம்
நனிவரத்தோன் றிடுமன்றியிடையொருவர்முயற்சியினு னண்ணற்பாற்றோ

அம்பிகையா தியைநோக்கி யரியதவ மிகவியற்றி யன்பின் மிக்க
கும்பமுனிவருந்துவதுன் றிருவுளத்தி லிசைந்திலைகொல் கோமானென்ன
வெம்புலியி னதளுடுத்தோன் முனபடர்தி யென்றினிது மொழிந்தா னன்
னுன், செம்பதுமத்தாள்பணிந்து சென்றனள்விண் ணின்றொருமின் செல்
வதென்ன. (அ)

சத்திதனைப்பிரிந்து நொடிப்பொழுது தனித்திருப்பதற்குச் சத்தியேதாங்
கத்தினையுரித்த பிரானவள் வருமுனிடைமரு தினனை வுற்றந்தப்
பத்திமிகு முனிவர்முத லெவருமறியா திருந்தான் பணையும்வந்து
முத்தியல் வெண்ணகைத்து வர்வாய்ச் சேடியர்சூழ் வரமுனிவர் முன்னர்
நின்றாள்.

வேறு.

செந்தழலினின்றுருகு சொம்பொன் வரையென்ன
வந்தலகில் செங்கதிர்கள் மண்டியெழ லென்ன
நந்தலறு மின்கள் முனர்நன் கொளிர்வதென்ன
வந்தணனர்கணின் றொளிர்தல கண்டனர்களம்மா. ௰

வானவர் கணங்கள் சொரி மாமலர்கள் கண்டார்
கானமுறு மைந்தொழில்கள் காதின் வழிகொண்டார்
மேனிலவுமிந்த வொளிமேவு மெதுவென்றார்
மானலது துங்கமுற வாய்வெருவி நின்றார். கக

இந்தவொளிநீடு மிவணென்று முளதேயோ
மந்திரமன்வேழ்வி யின்மந்த விடமீதோ
விந்தைமிகு மாதவமும் வெங்கனவு தானோ
வந்தவைமுன் யாவையெது வந்திடுவதன்றோ. கஉ

வேறு.

என்னவுரைத் தலமரனுற்றிருப்பதுவு நிற்பதுவு மியக்கந்தானும்
பன்னுவது முணர்ந்திலரா யுழல்வேலை யருந்தவர்கள் பயின்றவேள்வி
தன்னிலெழும்புகை முகிலிற் புலவர்சொரி மலர்மழையிற் ருனுமோங்கு
மின்னென நின்றவள் புவிமேற் பெண்வடிவந் தோனறவுற்ருள்வேள்விச்
சாலை. (௰௪)

எழுதரியவலயமு முரகமணி முதலவற்றி னிலகுபூணு
முழுதுலகும் விலையிலெனுங் கலையுமிரு ளகற்றுமணி முடியுஞ்செய்ய
செழுமலர்க்கை யபயமொடு வரதமுநீ டகமகிழ்வுஞ் செம்பொற்கச்சும்
பழுதகல் விண்ணுல கமலர்தொடையலு நற்றிருவருளின் பண்புந்தாங்கி.

தும்புரு நாரத ரிசைத்தேன் சொரியமலர் மடந்தைநிதி சொரிய வில்லி
னம்புருவக் குமரியொடு காளியுடை வாளேந்த வமர்செய்வேற்கட்
கொம்புருவச் சிறுமருங் குற்புலோமிசை வெள்ளிலைமடித்துக் கொடுப்ப
[மேவும்
வம்புருவத் தனதடத்து வாக்கணங்கு புகழிசைப்ப மறைகள் வாழ்த்த. ()

தென்மலையிற் பணைத்தெழுந்து வடமலையுற்றிலகுமுலைத் தேவமாதர்
பொன்மலிவெண்டுகிலிரட்டகமலினிவெணகுடைநிழற்றப்பூவையன்ன
சின்மொழிச் சிற்றிடைக்கயற் கட்டிலோத்தமை மெனனடம்புரியத்திர்த்
தமினஞர், வின்மருவு கவரிபுடை விசிட முன்னுர முனிவர் விளங்கக்க
ண்டார். ௧௬

கண்டனர்கண் மகிழ்நது குதிகுதித்தனர் முன்வணங்கினர்கள் கவை
யிலார்வங், கொண்டனர்கள் விழுந்தனர்பின னெழுந்தனர் மெய்விதிர்ப்பி
னெடு குலவு கண்ணீர்,விணடனர்கள் குதித்தனர்கள் பதைத்தனர்க ளரற்
றினர்கள் வெம்பேயாற்பற், றுண்டனர்க ளெனததிகைத்து நின்றனர்க
ளனைவர்களு மொருவரொன்ன. (௰௭)

ஆங்கதன் பின்னகமதனை யொருவழிக்கொண்டொல்லையினிலருகிலெய்தி
யோங்குபர னியற்றிடுமைந் தொழிலினுக்குங் காரணமா மொருத்திதன்
பூங்கமலத் தவிசினிடையிருத்திமலராதிகளாற் பூசையாற்றி [னைட்
நாங்களிறை யிவன்றனையுங் கணடுபணிந்திடக் கருணைநல்குகென்ருர்.

இந்தவித முரைத்தமறை முனிவர்மகிழ்ந்திட வுமையாளிசைக்குநீடு
சந்தனமென் பரிமளமு மாயதென வந்தணரும வருமானீர்
முந்திரவி தன்னையும் விண்ணுலகினையும் விளங்கிடச்செய் முறைமையெ
ன்னச்
சிந்துபுடை சூழுலகினிவிரு மேற்பிறவி யருந்திகழச் செய்தீர். ௧௯

குணதிசைக்க ணெடுத்தவொளி யிரவியருகினிலடைந்த குறியதென்ன
யுணர்வுதரு வாணியொடு கமலையு முன்னுதித்தனர் நீருவகையெய்த
மணமருவு மலர்க்கூந்தற் பாவையர்சூழ்ந்திட நாமும்வந்தோ மீண்டுப்
பணவரவப் பணியிறையும் வருவனினி யையமிலை பயப்படேன்மின். ௨௰

மாமதியில் விசும்பெனவு மதியமைச்சி லரசெனவும் வயங்குங்கல்வி
யேமமுறுங் குரவரின்றித் தாமேநின் றியற்றுவினை யிலங்கிடாது
தாமமுறு மிவணுமக்கச் சிந்தனை வேண்டுவதிலைமேற் றலைவற்காண
நாமுமருந் தவம்புரிது நீவிருநின் றரியதவ நவிற்றுகென்றாள். ௨௧

ஆற்றுதவப் பாவனையு மதின்பலனீந் தருள்பவளுமாகி நிற்பாள்
சாற்றுதவம் புரிவதற்குத் தொடங்குவதுங் குறிப்பினிருந்தவர்கடேறப்
போற்றுதவ பேதத்தினியல்பறி வித்தவர்க்குறுதி பூட்டவுற்ற
தோற்றமெனத் தகுமதுவு மன்னவர்முன் புரிதவத்தின் றேற்றமேயாம்.

அன்னைதவம் புரிந்திடுதெ மென்னலுமா தவர்வணங்கி யமரர்நாட்டில்
துன்னிடு கற்பகமலராற் சண்பகத்தண் சோலையிடை துலங்கச்செய்தார்
பன்னுமெழின் மண்டபமொன் றதனை நவமணிகளினாற் பதுமக்கோயிற்
பொன்னினிதினலங்கரித்துநன் கிரட்டிமங்கலமும்பொருந்தச்செய்தார்.

அந்தமணி மண்டபத்திற் புகுந்து வடதிசை நோக்கி யணிகொள்பீடத்
திந்துமுகவர மகளிர்பணிவிடை செய்திடுவன சத்திருவரோடு
சந்தமுறு கைலைமலை மாதர்வழிபடு வடுகன் சயமின் காளி
வந்தகங்காத்திட வயன் மாலுருத்திரர்கள் புறங்காப்ப மகிழ்வோடுற்றாள்.

நற்றவர்கள் போற்றி மகப்பிணி தவிர்ப்பத்தாய் மருந்துநனி தின்றாங்கு
சிற்றறிவினோம் பொருட்டுத்தவம் புரிதிநீயு முயர்சிவனும் வேறன்
றுற்றமனை நீயவன் போதுனைக்கண்டா மவற்காண்பானுடையோங்காதல்
மற்றவற் காண்பருவமெமக்கென்றுறுங்கொலென் றுரைத்தார் வணங்கிநின்று.

நிகரின்முனிமடந்தையர்களுமையவள்பால்நின்றுரைப்பார் நிலவெமன்னை
பகருமணி முடிக்கதிரு மொளிர்வதன மதியுமண்டப் பரப்பினெங்கு
மிகலுமிருட் கணமகற்றப் பரிதியெனத் திங்களென விளங்குவேறு
திகழுறுவதென் விசும்பிற் றிங்களின் முன்னுடுக்கணங்க டிகழ்வதென்ன.

வரித்தடங்க ணுலகனைத்தும் படைத்தளிப்பநான்முகனு மாலுமென்றே
விரித்தவருட் கடல்சூழத் திரைக்கடலென் விளங்குகுண வெற்புநீடித்
தரித்திருக்கப் புவனமெலாம் பூதரமென் றிலகுபல சயிலமென்றே
தெரித்திடுமிப் பொருளிவ்வா றிலங்கலிவள் விளையாடற் செய்தியன்றோ.

பரிவினுறு மிவடனைவிட்டொரு கணமும் பிரிவுபொறாப் பரனுக்காங்குத்
தரிதருங் கோலின்னு மிவணெய்தாத பரிசென்றோ தயங்குமீண்டு
வரியளிகள் சண்பகத்தேனருந்துகின்றதினைக்கரத்தால் வயங்குபொன்னி
விரிகதிர்ப்பொன் மணி யெறிந்தகற்றவான பகையான விலங்கும் புள்ளும்.

கந்தமிகுந் தெதிரோ மக்கனலும் வலஞ்சுழித் தெழுந்த கரந்திடாது
சந்தமுறு மானினங்கள் பால்சொரிந்த களிநிறைந்த தண்காவெங்கும்
மந்தமருத் தினிதெழுந்த தினியகுறி யிறைவனிங்கு வருதற்கேது
வந்ததனவென் றுரைகின்ற பூவைகிளி யென்றனர்கண் மகிழ்ச்சியெய்தி.

பரவுமொழி யிவையனைத் தும்பகற முழுதுலக ளித்தபாவை கேளா
விரவியெழுந்திடுஞ் சமயஞ்சில குறியாலறிகுதல் போலீண்டு வள்ளல்
வரவதுவுஞ் சிலகுறியா லறிந்தனர்களிவ தொன்ன மனத்துட்கொண்டு
விரவுசிறு நகைசெய்து மகிழ்வினொடு தவம்புரிய மேவலுறருள். ௯௧

பொன்னிநதி யிடத்தணைந்து புனல்படிந்து சந்திவினை போற்றிவந்து
பண்ணிடு மைந்தெழுத்தோதிப் பூசனைக்கு வேண்டுவன பலவுங்கொண்டு
நன்னளினத் திருவர்களு முதவிடவை வகைச்சுத்தி நவிற்றியாரு
மன்னுமகத்திலும் புறத்தும் பரமபொருளைப் பூசித்து வாழ்த்திப்பின்னர்.

மேவுதழ லிடந்தனிலு மவந்தனஞ்செய் தவியினிது வீசுங்காலைப்
பாவகன்வெய்தெனக்கொள்வன்றி நமுகத்திற்குருவெயர்வைபடு முனஞ்சி
தாவியினைப்பகற்றிடுங் காற்றிறை யொருகாற் பதமலர்கள் தன்மீதுற்றுற்
பூவதென விருந்துமன மகிழ்ந்திடுவள் பூவென்னப் புகலுமன்னாள். ௯௨

இவர்களிவை புரிவனவும பிறருமவரவர்க்கிசைநத தியற்றுமாறுஞ்
சிவனருளெவ்வளவென நினைந்து பிறசெய்வனவுஞ் செய்துபின்னர்
மவுனநிலையடைந்து தனித்தியான முற்றுளிவ்வாறு வருங்காலத்து
நவநவமா யெழுந்தன்புநீட விறையவனருளும் நணுகிற்றனரே. ௯௩

ஓதரியமறைப் பொருளாய்ப்பூரணமாய்த்தெளிவினிடையுதிக்குமொன்றாய்
பேறுருகேவல சகலந்துரிய மிவைகடந்ததுவாய்ப் பிரிவிலாதா [ப்
யாதிநடு வீறிலதாய்ச் சிற்பரமாய் நிற்குணமா யனாதியாகி
நாதமதின் முடிவினதா யிலங்குபரன றிருவுருவை நண்ணிநின்றாள். ௯௪

அன்னைய சஞ்சலையாகிப் பரமசுகத்திடை நிற்கவமலமான [ளுள்
தன்னிதயத்திடை விளங்குஞ் சுடருருவாயெழுந்திறைவன் றயங்குமன்
முன்னமொவர்களுங் காண வெளிநின்று னீடண்ட முகடுகீறி
துன்னிமெச் சுடரினளவிவளவென விதிதனக்குஞ் சொல்லவற்றே. ௯௫

வேறு.

இரவியிற் பரமன் பதம்புகுந்துயிர்க ளியாவையு மொடுங்குவதென்ன
மறுவறுதவத்துப் பனிவரைக்கொடியு மாதவர்கணங்களும் பிறரு
முறுதிசையனைத்துஞ்சூழ் சுடரொளியி லொன்றினர் திசைகளும் பிறவும்
மறிகிலராகித் திகைத்தனர் நின்றாரம்பிகை தெளிந்தனள் பினனர். ௯௬

விழித்தனர்விழித்தே நிற்றலு முகிழ்த்தோர்மேலு மந்நிலையினின்றிடலு
மழுத்தனிப்படையோ னெடுத்தபேரொளியின் வடிவமுநோக்கி நின்றி
றையை
வழுத்திமுன்னின்றுவிழிகொடுநோக்கும்வடிவுகொண்டருளுதியென்றாள்
மொழித்திறனிதனைக் கேட்டலுமெவர்க்கு முன்னவன்றிருவுளமகிழ்ந்து.

ஓங்கருள் வடிவமாகிய விலிங்கவுருவமதாக வோருருக்கொண்
டாங்கதனிடை நின்றெழில் கனிநதொழுகு மவயவங்களு நனிமுடிக்கண்
வாங்கிளம் பிறையுந் தடக்கைமான் மழுவும் வரதமுமபயமும் பிறவுந்
தாங்கியோர் பவளமலை பெழுந்தென்னத தயங்கொருவடிவு கொண்டெ
ழுந்தான். ௩௮

பரவிடுமிமையோர் சொரிமலாமழைகள பாரிடமறைத்தன திதிக்கோ
ணிருநிதி மழைகள்வரைகுலமறைத்தவெணணில்கநதருவர்க ளிசைக்குங்
கருவியினிசையும வியன்மிகு பூதகணுதிபர் துநதுபி முழக்கு
மருமறையொலியுந துதிததிடுமோாப்பு மார்கலிதனை மறைததனவே. ௩௯

உணர்வின் மிக்குயிர்க ளுணர்ந்திட வடிவுற்றுதித்தருளேக நாயகனுங்
கிணையின் மெய்யன்பி னுமையவளகாண வெதிருற மற்றவண் மகிழ்ந்து
துணைமலரடியிற் பணிநதனர் தொழுது துதிததனர் முனிவருமபிறரு
மணுகினர் கமலமலரினை வனததினகறறிய பதம்பணிந்தேததி ௪௦

பெருகுமானநதச் சலதியுட்படிநது பிறைநறுஙகணணியஞ் சடிலக
கருமிடற் றிறையோன் வடிவெழிலமுதைககண்களா லருநதிமுன்னோங்
[கும்
பருவரற்பசி தீர்ந்தனைப்ப தோன்றின்றி பரவசமடைந் தெதிர்நின்றார்
கருதியதனையப் புரிதருமுயற்சி கணிததிடு தவத்தின வேறுண்டோ. ௪௧

வேறு.

பனிவ ளாக்கொடி யருந்தவம் புரிந்துநீள் பரிவின்
முனிவ ரீசனைக கண்டிடச் செயததுமொழிந்தே
மினிய ரன்றனைத தானருச் சனையினி தியற்றித
தனிமை யுறறிடு பெருங்கதை சாற்றுதுங கேண்மின். ௪௨

தவநிலைச்சருக்கம முற்றும்.

ஆ- திருவிருத்தம் ௱௦௱.

---

உ

# தம்மைத்தாமருச்சனைச்சருக்கம்.

---

மேக நாண்மலர்க் குவளைவெஞ் சிலைகுமிழ் மிலைந்தோர்
மாக மாமதி பூத்தபூங் கொம்பரின வயங்கும்
பாகு நேர்மொழி யுமைமுகம் பார்த்தக மகிழ்வுற்
றேக நாயக னருளுட னின்னன விளம்பும்.

வண்ணவண் பிறைநுதல் விரிமதர் விழிவநதின்
டெண்ணின்மாதவ மியற்றிமெய்யினைத்தனை போலு
நண்ணுமுத்தமிழ் முனியுமா பயன்பெறநாமு
மண்ணலுற்றன முருவுகொண் டருந்தவர் மகிழ. ௨

திருநதிம்பர்முன் பாலிடைநெய் யெனததிகழா
திருநதிடெந்தமைக காட்டினை யெளிமையாய்ப் புவியோர்க்
கருந்தவம்புரிந் தவரிடத்தன்பினு லதனைப்
பொருந்துறக கடைந்தெடுத் தெதிர்வைததது போல. ௩

புவனமெங்குநின் மகிமையே பொருந்திட நிற்பாய்
தவமியற்றிய செவ்விதஞ் சார்ந்தெவணிருநதா
யவணருந்திப தெதுநமைப் பிரிந்தனையதன்பி
னுவகைபூததிடு மனததிடை நினைத்த நீண்டளந்தோ. ௫

நாமகிழ்ச்சி யுற்றன மினிநவில் வரமாக
நாமமிகக சீர்ச்சைலமை நல்குருவோ மென்னி
னீமகிழ்ந்துறைந்திடுமது நின்னதே யாகு
நீமமுற்ற செல்வங்களு நிற்குநின் னேவல் ௬

மாயைநீக்குவமெனில் விதைவடிவ நின்மேனி
மேயகாமமாதிய பகைவிலககுவ மென்னி
லாயவுட்பகை யுனக்கிலை யன்பினு ரொவர்க்கும்
பாய வின்பமு முத்தியும பரிவினி தருதி. ௭

மற்றுநின்றனக் கியாதரு வரமொனறுமிலலை
யுறதிடுன் மொழியமுதை யுடகொண்டு நாமுவப்பா
னிறைநந் தமகொரு வரநதருதி நீயென்னக்
கற்றைவார்சடை யவன்சொலக கவுரிமிக்குவந்து. ௭

வேறு.

சங்கர நீலகண்ட சம்பகவனேசநீடு
பொங்கர வணிந்தவேணிப் புண்ணியமூர்த்தி யெங்குந்
தங்கர வுலகநாத சம்புவே மறிமானேந்து
மங்கர மருதினிழ லமர்ந்திடு முதல்வபோற்றி. ௮

மன்னுற வுணர்வையாவு மற்றினியெனவினுத
லென்னையான் வினவிலுண்மை யிசைததிட வேண்டுமன்றே
பன்னுறு பரமானந்தப் பரவையுண் மூழ்கியாங்கே
துன்னிநின் றதனைத்தானே தொடர்ந்தினி தருநதல்செய்து ௯

வாசகமனத்திற்கெட்டா மறைத்தனிப் பொருளாயோங்குந்
தேசினைப் பொருந்திடன்பிற் செழுமலராதிகொண்டு
பூசனை யுகததிறுள்ளும் புறத்துஞ்செய் திருந்தேனுன்பா
னேசமிக்குடையராகி நிலவுதினனடியரொன்ன. ௧௦

நினைத்ததை யுளதோவென்றாய் நினைப்பன்யான் மறைப்பினியம்
மனத்திலீ துணரவந்து வதிந்ததூஉ மறிவேனென்றாய்
வினைப்படு தவஞ்செய்காலை விளங்கிராப் பகலேகாணே
னெனைத்தனி யின்றுகண்டே னுனைமுன்னு மின்றுங்கண்டேன். ௰௧

சாற்றிடு விசும்பினூடு தம்பித மாகிநிற்குங்
காற்றென விரவியின்பாற் கலந்திடு திங்களென்ன
போற்றிடங் குன்பானின்றே னெனவுமை புகலலுற்றாள்
மாற்றமின் னவைகட் கண்ணல் மகிழ்ச்சிகூர்ந் திசைக்குமன்றே. ()

ஆற்றுநின் றவததினுண்மை யறியவே யின்றுகாறுந்
தோற்றிடா திருந்தேங்கண்டேந் தோற்றினஞ் சோதியாகச்
சாற்றிடுமினைய சோதி யுருவமா மிலிங்கந்தன்னைப்
போற்றிடு மெவருங்காண வீண்டுநாய பூசிக்கின்றோம். ௰௩

கற்பகம் வாளாநின்று கருதிய துதவுமாபோற்
றற்பர மாகிநீடு சயம்புவா யினிதுமேவும்
பொற்புறிவ் விலிங்கந்தன்னைப் பூசனை புரிதற்கெண்ணி
முற்படு பொழுதிற்றானே முற்படு வினைகடீர்ப்பாம். (௰௪)

அகத்துறு மன்புநீட வருச்சனை பொருநாட் செய்யி
லிகத்தினிற் கல்விசெம்பொனெழின்மனை மனைவிமைந்தர்
தொகுத்திடு சேனை நாடு தொடர்வளம் பிறவு மெய்தி
பகுத்திடு பாசந் தீர்ந்து பரமுத்தி யடைவர் மன்றே. (௰௫)

தெரிசனஞ் செயினு மோர்காற் றீயபா தகமென் றோதுந்
துருசுக ளவையுந் தீயிற் றேய்ந்தநுண் பஞ்சி யென்ன
விரிசுட ரிரவி தோன்ற வெவ்விருட் குலங்க ணீங்கும்
பரிசென வகலு மாங்கே பகையொடு பிணியுந் தீரும். (௰௬)

எண்ணிய பொருள்க ளியாவு மெய்திடு மென்ன வோதி
யண்ணலம் மூர்த்தி யின்பா லணுகினன் புவன மீது
வண்ணமென் மணிப்பொற் பீட மகிதல மடந்தை யீந்தாள்
விண்ணவர்க் குரிய தச்சன் வெயின்மணி விமான மீந்தான். (௰௭)

இரணிய கருப்பன் முந்நூல் பவித்திர மணைவுற் றீந்தான்
வருணன்மிக் குவந்து தீர்த்த மணித்தசும் பேந்தி நின்றா
னருணமூ ரனில தேவ னணிமலர் வருக்க மீநதான்
றெருண்மலி சோமன் றாழ்ந்து சிறந்தபட் டாடை யீந்தான். (௰௮)

தடமுறு மலைய வெற்புச் சந்தன முதவிற் றாங்கே
வடதிசைச் செழும லீசர் மணிக்குலக் குவைக ளீந்தார்
திடமுறு வன்னி தூப தீபமும் விரைவி னீந்தா
னெடிதுபா றயிரன் றூதி புவனேசை நிறைத்திட் டாளால். (௰௯)

மருவுவெள் ளிலேகா யாதி முகபதி யினிது நல்க
நிருதிதண்குடைகண்ணுடிநிலவுறுகவரிவீசப்
பரிதிகள்மகிழ்வினெங்குஞ்சுடரிடுபணியினிற்பக்
கருதிடுமியமன்சேனேதிசைதொறுங்காவலாற்ற. (௨௰)

மந்திர மறைக ளோத வசுக்கள்பல் லாண்டு கூறத்
தந்திரர் கீதம் பாடத் தவமிகு முனிவர் வாழ்த்தச்
சுந்தர மகளி ராடச் சுரர்குல மலர்க டூவ
மூந்துறு பூத நாதர் துரிய முழக்கஞ் செய்ய. (௨௧)

தருபவர் தருவ யாவுந் தடக்கையின் வாங்கி நல்கித்
திருவளர் மார்ப னண்ண லேவலின செய்து நிற்ப
வருமறை யாக மங்க ளறைதரு விதிகொண் டந்தப்
பொருவரு மூர்த்தி தன்னேப் பூசையங் கினிது செய்து. (௨௨)

ஆங்கதன் பின்ன ரேவ லாற்றிய வமரர்யார்க்கு
மோங்கிடு வரமு மன்றே ருலகமு மருளிச் செய்து
பாங்குற மிமய வல்லி பங்கய வதன நோக்கித்
தேங்கிள முறுவல் செய்பத தேவிநே ரின்ன சொல்வாள். (௨௩)

பொன்னிறக் கடவு ளாதிப் புலவரும் பிறரு மெய்தி
நின்னேயர்ச் சிப்ப தன்றே நீதிநீ யிந்த மூர்த்தி
தன்னிடை யெவரைப் பூசை புரிந்தனே சாற்று கென்றாள்
முன்னவன் கருணே யுற்று மொழிகுவ னெவருங் கேட்ப. (௨௪)

ஓதுமர்ச் சனேசெய் தோனு முகந்தது கொண்ட தேவும்
போதுறு கோதை வேற்கட் பொற்றெடி நாமே யாகு
மேதுவென் னம்மை நாமே யருச்சித்தற் கென்னி லிந்த
மாதவர் நமைப்பூ சித்தன் மறந்தனீண் டறிதற் காமால். (௨௫)

என்னவோ திடலு மன்னே யிமைத்திடோர் குழுவுங் காண
நின்னரு ளுருவந் தனனே நிகழுமா தவர்க்குக் காட்டி
முன்னதைப் பூசை செய்யு முறைமையுங் காட்ட லுற்று
யன்னவ ரிடத்தி லுற்ற வளவிலாக் கருணே தன்னல் (௨௬)

அவர்களே நோக்கி மேலுன் னருட்டிரு வாக்கி னனு
மூவகையிற் படுத்த வேண்டு முறைக்குமுன் னதுவு நீயே
நவிலுவை யெனினுமி யானு நண்ணுவ ரிடத்தன் பாலுந்
தவரின் துரிமை யாலுஞ் சாற்றின னென்றான் மன்றே.

வேறு.

சத்தியிது மொழிந்தி டலு நித்தனுவந் தருந்தவர்க டம்மை நோக்கிப்
பத்தியெனுங் கற்பகமொன் றுங்களிடத் திருந்தெவையும் பயக்கு மாற்று
னத்தனயன் றனக்கரிய நம்மையுங்கட் கழைத்தெளிதி னல்கிற் றன்ன
தெத்தகையோர்க் குளதவர்கட் கெளியமியா மவர்வேண்டு மெவையு மீ
வோம். (௨௮)

என்றிறைவ னிசைத்திடலு முனிவரெங்கட்கு மதிடத்தி னிலகுப
த்தி, அன்றிடசெய் வதுவுமதைக் கொள்வதுவுங் கொண்டுவினைத்துயரி
னீக்கி, நன்றிதரு கருணைபுரிந் தருளுவது மியாவையுநீர் நாங்க ளிங்கே,
யொன்றுமுணர்ந் திலமெமைநீ ரன்புடைய ரென்றதனு லுயர்வுபெற்றேம்
எங்கடமக் குமதுதெரி சனங்கிடைத்திட் டதற்கெழில்கூ ரிமயச் செல்வி
தங்கமுறு கருணையுமுத் தமிழ்முனியு மேதுவெனச் சொல்ல லாகு
மிங்கணினி தெனவுரைத்தா ரிறைவன் மகிழ்ந்தரியதவ மியற்றி னோர்க்கு
மங்குவறி திருந்தவர்க்குங் கல்விசெல்வ மெனும்பொருள்க ளருளிச் செ
ய்து. (௫௰)

முன்னமிருந் தமிழ்மலையக் குறுமுனிவன் பலன்றருவோன் முக்கணனே
யென்னவுங்கட் கிசைத்த துண்மை யாயினதே யின்னமுமக் கியாதுவே
ண்டு, மன்னதுவுங் கேண்மி னென்றா னவர்களெல்லா முமதருளே யடி
யோங்கட்குத், துன்னுசிவ ஞானமினி வேண்டுமஃ தாதவுமிடஞ் சொல்
க வென்றார். (௫௧)

எண்ணலுறு பிரணவத்தின் பொருள்வடிவா யிலங்குமிந்த விலிங்க
மேனின், றண்ணலுறு மெமையறியுஞ் சிவஞானம் பணிந்தோர்கட் கரு
ளிச் செய்யுந், திண்ணமுறு மஃதுமக்குங் கொடுத்திட்டோ மெனப்பரம
ன் றெரித்தா னந்தப், பண்ணவர்கள் பிரணவத்தி னுருவுமென்றீ ரதன்சி
றப்பென் பகர்கென்றார்கள். (௫௨)

முனிவரிது பகர்ந்திடலுந் தனிமுதல்வன் புகல்கிற்பான் மொழிதுங்
கேண்மி, னினைவரிய குடிலையெனும் பிரணவமீண் டோருருவாய் நிகழு
மேனும், வனைவனசத் தவனவனைத் தந்தவனு மெனுமூவர் வடிவமாகு
மனையதிற லுடையதுநந் தமைப்பிரியா திருக்கின்ற தநாதியாக. (௫௩)

ஆதியினிற் போதகத்தி லுறைந்திடுவோ னொருவேள்வி யாற்றற் கெண்ணி
வேதமுடி வினைக்குறித்தா னதுசிறிதுந் தோன்றிலதால் விளங்கக்காண்
பான், மாதவஞ்செய் தனன்வெகுநா ளெமைக்கருதி யாமவன்முன் வயங்
கத்தோன்றி, யோதிடுமந் திரங்கடமக் குயிராகும் பிரணவத்தை யுபதே
சித்தோம். (௫௪)

மலரின்மிசை யிருந்திடுநான் முகத்தொருவன் பிரணவமாம் வாரி தன்னை
யுலவுமதி மந்திரத்தாற் கடைந்திடலும் வியாகிருதி யுதித்த தாங்கே
யிலகிடுகா யத்திரியன் னதிற்றோன்றிற் றதிற்சுருதி யெழுந்து நின்ற
தலகில்புக ழுறுமதனிற்கா ரணர்மூவருந் தோற்ற மாகினார்கள். (௫௫)

தோற்றமுறு மூவரையுங் கொண்டுநினைந் திடுவேள்வி துலங்கச் செய்தா
னாற்றிமெற் றதினுலக மேழிரண்டும் வடிவினுட னமையத் தோன்றிற்
றேற்றமுறு மனையதெரி சனத்தினாற் சிவஞான மெய்திற் றங்குப்
போற்றுமத னுலமது தெரிசனமன் னவற்கினிது பொருந்திற் றம்ம. ()

ஆதலினாற் பிரணவமே நமையறிதற் கேதுவென வறைய லாகு
மேதமறு முத்திதனைக் கொடுப்பதுவு மிஃதேயா மிதனைக் கூறு
மாதவர்க்குச் சோகமொடு மோகமுத லானவையு மருவா தென்று
ஞானிமொழிந் திடலு மருந்தவத்தோர் மகிழ்ந்தினையநவில்கின்றார்கள்.

தேசுறுமிவ் விலிங்கமதின் மான்மியமிங் கெமக்கெவையுந்தெரிந்தவின்னும்
பேசுபுக ழுலகினிடத் திலிங்கவடி வொன்றேயோ பிறவு முண்டோ
பூசையுஞ் தருள்புரியு மூர்த்தியுள தேலதுவும் புகல லுற்று
நேசமுட னிறப்பூசை புரியுமுறை யையுமுணர நிகழ்த்துகென்றார். (௧௮)

சேவுயர்வெல் கொடிப்பரமனிசைத்திடுவா னெமைப்பூசை செய்வதற்குப்
பாவனையும்வடிவமனைப பற்றுமிக வுறுமதமும பகருநாலு
மேவலுறு மனந்தவிதம் வைதிகந்தாந் திரிசமிவை விரவலென்ன
மூவிதமுற் றிடும்பூசை யவற்றுளனு மனந்தவித மொழியுங் காலே. (௧௯)

விரிந்திடுவற் றியாதேனு மொருவடிவி லொருவிதியின்மேவும் பூசை
புரிந்தவர்கள சிவன்முதலாவ வெந்தவடிவினிலிட்டப் பூசிதராலும
பரிந்தகில மின்றியமையாத வெனகவெகாள்கென்று பகருநூல்க
டெரிந்திடமற் றவையு முங்களிடத்தினில வைத்திடுமென்பாற செப்புகின்
றோம். (௨0)

காலைநறும் புனன்மூழ்கிச் சந்திமுடித் தருச்சிக்குங் கவினுறவெய்தி
யேனுமெழுத் தஞ்சோதிப் பஞ்சசுத்தியுமியற்றி யிதயந்தன்னிற்
சீலமுடனருச்சித்துப புறத்துமொரு வடிவினருச்சித்தல் செய்வான்
சால்பினெனமையதனிடையா வாகனதாபனஙகளினாற் சாரச்செய்து. ௨௧

பாதியத்தோ டாசமன மருக்கியமீந தபிடேகம் பரிவிற்செய்து
வாயததுகிலொடு சாந்தநகூவிள மொண்மலராக ளிவைவயங்கச் சாத்திக்
கூர்த்தவெழி லனமாதி நிவேதித்துத் தூபாதி கொடுத்திறைஞ்சித்
தோத்திரஞ் செய்திடலாகுமவையினையநியமமதாய்த் தொடங்கவேண்டும்.

செல்வமுட னாற்றலுடையவர் புரிபூசையிற குறைவு செய்திட்டாரேல்
நல்குரவெய்திடு மெவருமவரவராறறலுக் கிசைய நவிலவேண்டுஞ்
சொல்லுறு மன்பொடு பூசைபுரிந்தவ ரெண்ணின்பமெலாஞ் சுகித்து
வாழ்ந்து, மல்லலுறு சாத்தியமாம் பேரினப மினிதடைவர் மறுமைக்கண்
ணே. ௨௨

பூசைபுரிந் திடுபவர்க ளெவரேனுஞ் சுகாகளெனப் புகலுநூல்க
ளாசையுட னஃதியற்று ரெவரேனும் விலங்கொடு புள்ளாளனையராகுந்
தேசுறுநந்தனிமப்பூசை யொருமலராயினுங் கொண்டு செய்வோர்கட்கு
வீசுபுகழ் விரதமொடு தவநதருமம் வேறொன்றும் வேண்டலின்றே. ௨௩

நன்றுபுகழருச்சனை செய்தவர் பெருமைதனை யெவரோ சொல்லவல்லா
ரென்றுசுடர் விழியுதற்செஞ்சடைக்கடவுளிசைத்திட்டா னிமையோர்தா
மின்றவகத்தியனாதி முனிவரரும் பூசிப்பா னிதமுமெண்ணி {மு
வின்றிறைவற் காலயஞ்செய்திடுகவென மயனையழைத் தியம்பினார்கள்.

## வேறு.

அற்புது மயன்வா னவருமா தவரு மறைந்தசொற் செவிபுகுந் திடுமுன்
சிற்பநூ லதனிற் சிறந்திடு விதியைச் சிந்தையிற் குறித்தனனதன்முன்
சொற்பயில் கனகச் சினகர மாங்கே தோன்றிய தஃதனை யவன்முன்
கற்றிடு திறத்திற் சமைந்ததோ விறையோன் கருணையிற் சமைந்தது கொ
ல்லோ. ௬௬

திருத்தகு பதுமமண்டபமணிகள் சேர்ந்தொளிர ருத்தமண்டபமே
னிருத்தமண்டப மாமணடபஞ் சிகையினிலவுறு வசந்தமண்டபதோ
டுரைத்திடு வேள்வி நடத்துறு சாலையோங்கிய திருமடைப்பள்ளி
விரித்திடு மிரட்டை மாளிகைப்பத்தி மேவிய நெடுந்திருமதில்கள். ௬௭

ஆருவாகனத்தனுதியர்சூழ வமர்ந்துறை தேவராலயங்கள்
வாகுறுமேரு வினைத்துனைத்தடிமேல் வயங்குற நிறுத்தியதென்ன
மாகமுற்றுயர்ந்த சிகரகோபுரங்கள் வலவயினுமையவள் கோயிற்
பாகுறுமிவைக ளனைத்துமோர் கணத்திற் பார்த்தனரெவர்களும் வியந்தார

வியந்தன ரேகநாயகக்கடவுள் வியனுறு மூமையெனு மிவர்கள்
வயங்கெழிற் றுணைத்தாள்வணங்கியங்கவாதண்மலர்முகநோக்கினீ ரொன்று
மியைந்திடு மினையவாலயத் துறைவுற்றியாங்கள் செய்பூசையுங் கொண்டு
நயந்தருள்புரிய வேண்டுமென்றிரந்தார் நவிலுமன்னவர்களு மிசைந்தார்.

மொழிதருஞ் சோதிமய மகாலிங்கமூர்த்தியைப் பெருநலமூலையைப்
பொழிதருங்கருணை யேகநாயகனைப் புறத்துள தேவர்கடம்மை
யெழின்மிகுந்திலங்கு மவரவர் கோயிலிடங்களிற் காமிகாகமத்தி
னுழிபெருவிதியினுடோறும் பூசித்து வகையுற்றிருந்தனர் மாதோ. ௭௰

பன்னகமதனைப் பணியெனப்புனைந்த பரமனுமுமையவளுடனே
இன்னணமுனிவர் கணங்களும் விசும்பினிலங்கிடு தேவர்தங் கணமுங்
கின்னரர் கணமும் பூசனைபுரிபக் கிளர்தரு பேரருடாங்கி
யன்னவர்வேண்டும் வரங்களீந்திருக்கு மணிதிகழாலயமதனில். ௭௧

பாகுறுநறுஞ் சொலுமையுமாதவரு பரிந்தெதிர் போதினையில்லா
மாகவின்வடிவுங் கருணையின் றிறமும் வயங்கிட நோக்கியுண் மகிழ்வுற்
றேகநாயகவென்றிறைஞ்சவீற்றிருந்தோனருச்சனையியற்றியபூசைத்தேங்
காகமொன்றுங் குற்றுருத்திரனுன கதையுள தொன்றினிச் சொல்வாம்.

தம்மைத்தாமருச்சனைச சருககம் முற்றும்.

ஆக திரு விருத்தம். ௬௫.

---

# காக்மான்மியச் சருக்கம்.

முன்னுறு மனுக்க ளநேகர்க ளிறக்கின் முடிவாக னிருசுட ரவரு
மன்னவ ரநேக ரிறந்திடி லிறகரு மமராகோ னவர்களெண் ணிலர் நாள்
பினனிடின மலரோ னிறந்திடு மவர்கள் பெயாந்திடி லனேகர்மா லிறக்கு
மின்னவ ரநேக ரிறந்திடின் மயிரொன் றிறந்திடு முடவிஞ் ஞொருவன் ()

இத்திறமவன் றன்னுடலுறுமுரோம மியாவையும புவியிலொவ்வொன்றாய்
வுய்த்திட வுதிர்ந்த பின்னர்வா ளரவு முயரிளம பிறையுமவாழ் வேணி[ன்
நித்தன்மறறிசைக்குளுசராசரமெவையுநிறைந்தினிதுறைந்திடுமிறையோ
சத்தியோர் பாகத திலங்கிடு பரமன் சரணபங் கயநிழ லுறுவோன். (உ)

இருண்மிடற் றிறைவ னெதிரினு மதியா திருந்திடு மதமுமற வொருவன்
கருதிடுமெவையுமுடிபபதுமபொருளாற கருதுமப்பொருளடைவது செந்
திருவிஞ் ஞெனலாலவர்களெண ணிலவைச்செய்துதனனடியடைந்தோர்க்
குத், தருதிற லுடையோன னளவில்லாத ...மெனும் திருவுட னுறை
வோன் (௩)

இலகிடு சைவ வைதிக நெறியி னியல்புட னிறப்பெதிர் நிகழ்வாய்ப்
பொலிதரு காலத் திடல்புமெவ் வுயிர்க்கும போகமும வீடுநன்குதவு[தோ
நலனுறு மிறையோ னொருவனுண டனறே னவினறிடுமுமையொருபுறத
னலதுவே றில்லை யென்பதுந் தெளிந்தோ னவன்பெய ருரோமச னுகும்.

நவிலவ னுயர்வீ டெளிதல வென்று நற்றவர் சூழ்ந்திடச் சென்று
சிவனுறை பதிகள் வணங்கிநற் றீர்த்தஞ் செழுமபுன லாடினன் வருவான்
புவனமேத் தினிய பொன்னிநீர் படிந்து புகழிடை மருதிடைப் புகுங்கா
லவனொரு காகம வந்துபொற் றீர்த்த மணைந்ததிற் படிந்தினிதெழுந்து.()

பாங்குயர்ந் திலங்கு மருதினுற் றிருந்து பகரிரு ளிரவியா னதுபோ
லாங்குறு தனது கறைவடி வேகி யமபொனின் விளங்குத னோக்கி
யீங்குறு தீர்த்தம பகுத்திடு மிரத மென்னி னமமுட விரும் பன்று
மோங்குபொன் வரையு மன்றிதுநாமிவ் வுருப்பெற வெனவியப் பெய்தி

பூவுலூ கிடத்திற் சிறந்திடு மினைய பொன்னிநா டெனப்பொலி நாடும்
பாவுறு மினைய விடைமரு தினைப்போற் பதியுமிப் பதியினில் விளங்குந்
தேவனை யனைய தெய்வமு மிநதச் செய்யபொற் றீர்த்தநே ராகி
மேவிடு மினிய தீர்த்தமுங் கருதின் வேறிலை யாகுமீ துண்மை. (எ)

வெவ்வினை துலைத்தற் கொருமருந் தாக விரிசடைப் பண்ணவனமைத்த
திவ்விய தீர்த்த மாமிது பாஞுந் திருவுள மகிழ்ந்திவ ணுறைவு
மிவ்விடை மருதிற் புணணியம் புரிந்தோ ரெய்துவ ரீனர்வந் திடினு
மவ்வியற் பொழுதே மேன்மையுற் றிடுவ ரஃதுநம மிடத்ததிந் தனமால்.

என்றுரைத் திடலு முரோமச னோக்கி யியம்புவான் காகமே வருதி
மன்றநீ முனியோ தேவனோ வன்றி மாயையோ பறவைதா னேயோ
துன்றவெற் கறைதி யாவனெனக் காகந் துரிசறு சினமுதற் பகையை [பும்
வென்றிடுமுனிவர்தலைவமுற்றுணர்ந்தோய் விளம்புவன் கேட்டியென்றியம்

ஆதிநான்மறையோன்சுருதியாக மங்களருங்கலை புராணமுற்றுணர்ந்தோ
ன், கோதிலாச்செல்வமுடையவனொருநாட் கோளராப் பரிதியைவிழுங்கி
ற், றோதிடக் காலை யெவருநற் றீர்த்தத் துவப்பொடு நானமுன் னியற்றி
மீதியன் றிநோற் றானமுஞ் செய்தார் வெவ்வினை செய்தன னெளியேன்.

நற்றவ முனிவோர் மனிதர்க ளிமையோர் நல்வர மேற்குநாண் முன்னர்ச்
சுற்றிரா றாக்க ளெங்கட்கென் னென்னச் சுடர்க்கனன் கதிர்தனையரவம்
பற்றிட லாது புண்ணியம். தினத்திற் பரிந்துசெய் தவங்களா திகட்கோர்
குற்றமெய்திடிலங்கவற்றினைநீவிர்கொண்மினென்றிசைத்ததூஉந்தெரியும்

புண்ணிய முயர்த்து மெவரையும் பாவம் புகைந்தழ னரகில்வீழ்த்துழலப்
பண்ணிடு மெனவுஞ் சிறியவர் பெரியோர் பாங்குறிற் றுங்களும்பெருமை
நண்ணுவ வெனவு மன்னநற் கேது நற்றவந் தருமமே யெனவு
மெண்ணைமுன் னூழ்வந் துற்றிடி லதனை யாவரோ விலக்கிடப் பாலார்.(௰௨)

அறந்தொடர்ந் திலர்பாற் பாவவூழ் தொடரி லங்கவர் தேவரோ யெனினுந்
துறந்தவ ரெனினும் வாய்மையும புகழுந் தூய்மையு நிலைமையு மதியும்
பிறழ்ந்திட மயக்கி யாவரு மிகழப் பெரிதலைத் திடுமெனி லென்னை
மறந்துவிட்டிடுயோதனியனேனிழைத்த வல்வினையென்னவாங்கென்னில்

நானுமங் கணைந்து நவில்கட னனைவையு நவிற்றியோர்மன்னவன்றன்பாற்
றானமேற்றுடனேமற்றையோர்மன்னன்றன்னிடத்தினுமணைந்தேற்றேன்
மானவே லன்னான் குறிப்பிலென் னுரத்தின் மருவுசந் தனத்தினைநோக்கி
யீனமின் றிதற்கு முன்னுமேற் றனைகொ லென்றனன் னுண்டென விசைத்
தேன். (௰௪)

கடுத்தகந் தோறு மணைந்திரை கவருங் காகமே யொத்துமுன் னொருவ
ரிடத்தினேற் றுடனென் னிடத்துமேற் றதனா லிலங்குநீகாகமாகென்னக்
கொடுத்தனன் சாபங் காகநீர் தன்னைக் கொண்டுநா னவன்றனைச்சபிக்கத்
துடித்தன னவன்றன் புரோகித னென்னுஞ் சுசங்கிய னெனைப்பணிந்து
ரைக்கும். (௰௫)

என்னிழைத் திடுதி யையவூழ் வினையா லிங்ஙனம் விளைந்ததுன் றனக்குப்
பின்னரு மொருநா ளினிவிரண் டிடத்திற் பெற்றிடு தானவல் வினையான்
மன்னவன் சபியா திருக்கினுங் காக வடிவுனக் கெய்திடு நீமற்
றின்னது சகியா தெதிர்சபித் தனையே லிவ்வுரு வொழிந்திடா தென்றும்.

அருள்புரிந்தெதிர்நீ சபித்திடா தொழியி லறைந்திடோர் புண்ணியதீர்த்தம்
மருவுற வகலுங் கடிதினிற் பின்னர் மழுவலான் கருணையுங் கிடைக்கும்
புரவல னுன்னைச் சபித்ததாற் றானம் புரிபலன் பொருந்திடா தாகுந்
தெருளுறு மரச னிலகிடி னுலகஞ் செழிக்குமென்றன்சினம்விடுத்தேன்.

நின்றனன் காக வடிவுபெற் றனன்முன் னினைவொடுஞ்சொரிகண்ணீருட னுங், குன்றமும் வனமு நாடுநன் னகருங் குழுவுறும் பறவைக ளோடுஞ் சென்றடைடந் திடுவன் றீர்த்தங்கள் படிவேன் றிகழ்வுறு காய்கனிகோயில் முன்றிலி னுதவு பலியருந் திடுவேன் முயல்வனிவ் வாறலைந்துழன்றேன்.

இற்றைநாண் முன்னர்த தவஞ்சிறி துளதா லிவ்விடை மருநில்வந் தினைய பொற்றனித் தீர்த்த மூழ்கினன் வடிவம பொன்னெழி லுருவதாயிலங்கப் பெற்றன னின்னைக் கண்டிறைஞ் சிடவும் பெற்றன னின்னதென்னியல்பு மற்றுனைக் காணப் பெற்றதாற் கதியுமருவுமே லென்பதூஉந் துணிந்தே ன. (௰௧)

பிறரினுக் கின்னு மூற்பக லியற்றிற் பிழைத்திடா தவ்வினைத் தாமே வுறவருந் தமக்குப் பிற்பக லெனலா லுற்றிடத் துயரினை யருந்துந் திறனெனி நலவே யென்றதைச் சிந்தை செய்துதற் காத்திட மதித்தோ ரறைதருஞ்சினமும பிறர்பொருள் கவரு மவாவுநனகவிதிட வேண்டும்.

எனவிரித் துரைத்த துரைத்திடு மேல்வை யிறையவன திருவரு ளதனுற் றினகர கோடி நிகரொரு விமானந் தேவர்தங் கணதொடங் கெய்த வினைதவிர் காக மவ்வுரு வொழித்துவிளங்குநாற் ருேளுட னிலங்கு தனிவிழி நுதலபெற் றுருத்திர ஞகிச் சார்ந்திடு விமானமீ தேறி. (உக)

வந்தர மகளி ரெதிர் நடம புரிய மருங்கெழிற் கவரிக ளிரட்டத் துந்துபி முழங்கக் கணுதிபர் சூழச் சுரர்கண மலமழை சொரியச் சுந்தர வதன வனிதையோர் பாகன் றுணைமலர்ப் பதமுளத் திருத்தி யந்தமி லின்ப மருவிநீள் கைலை யடைந்துவீற் றிருந்தது மாதோ. (உஉ)

திருத்தகு குடபால் வீதியிற் குணபாற் றிகழ்ந்திடு தடத்தினிற் காக மருத்தியிற் படிந்து தமனிய வடிவா யணிமரு திடத்திருந்ததுவும் உருத்திர ஞகிக் கைலையின் விமானத் துறற தூஉம வியப்புறநோக்கிக் கருத்தினி லடங்கா மகிழ்வொடுந் தவத்தோர் கணத்தொடு முரோமசனி ன்ருன். (உ௩)

இத்தகைத் தாழ்மார் காகமத் தலத்தி னிலங்கிடு மதிலதிக் குறையு முத்தம தீர்ததம் படிநதுபொன் னுருவுற் றுருத்திர ஞகிய வளமை சத்தியீ ஞாஞனந்தமே வடிவாய்த் தயங்கிடு முரோமசன் பின்னர் நித்தியன் றன்னைப் பூசைசெய்திருந்த நிகழ்ச்சியுஞ்சிறிதெடுத் திசைப்பாம்.

காகமான்மியச் சருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௭௧.

# உரோமசச் சருக்கம்.

ஓதுமா யிடை நின்றுபின் னுரோமச முனிவன்
வேதநா யகன் கோயிலின் மேவலுற் றிடுங்காற்
கீதவோ சையுந் தூரிய முழக்கமுங் கேளா
மாதவத் தினோர் குழாத்தொடும வல்லையுட் புகுந்தான். (க)

தங்கு பற்பல தீபமும் விதானமுந் தாழ்வில்
கொங்கு லாமலர்த் தொடைகளுங் குலவுதோ ரணமு
மெங்கு முற்றிடக் கணடன னெவளையுங் காணுன்
பொங்கு மற்புதத் தொடுபரஞ் சுடரிடைப் போனுன். (உ)

அண்ண றன்னையர்ச் சனைபுரிந் திருந்திடு மழகுங்
கண்ணி னேக்கினன் முடிமிசைக் கரமலர் குவித்துப்
பண்ணி னீடிய துதிபல பணிதந்தனன் பணியா
வுண்ணெ கிழ்ந்திடப் புளகித முற்றன னுடலம். (௩)

எனையு நின்னடிக் கடிமையாய்க் கோடியென் றிரந்து
தனை மறந் துநின் றொரு வகைபுரஞ் சார்ந்தா
னினைய வற்புத மெவர்நமக் குணர்த்துவ ரென்னு
நினைவு தன்னொடு நிற்பவ னிமலனை நினைந்தான. (ச)

செய்ய மேனியிற் பூசுமவெண ணீற்றொளி திகழத
துய்ய வேத்திரஞ் சுரிகைமான் மழுவொடு துலங்குங்
கையன் முப்புரி நூலினன் கண்ணுறு நுதலா
னைய னந்திநா யகனனை வுற்றன னவன்முன். (ரு)

மருவு நந்தியைப் பணிந்தெதிர் முனிவரன் வாழ்த்தித
திருமலிந்திடு மினையபொற் சினகரந் தன்னி
லொருவர் தம்மையுங் காண்கில மென்னென வுகந்து
தருமமாதவ கேளென மற்றவன் சாற்றும். (சா)

இருட்டி யாதியீண் டுமைதவஞ் செயதன ளவடன்
பொருட்டி யாவையு மாகிய புனிதனோர் மூன்று
திருட்டி யானெதிர் தோன்றினன் றேவர்மா தவர்கட்
கருட்டி யாகமும் வரங்களுங் கொடுத்தினி தமர்ந்தான். (எ)

சம்ப கத்தனி வனமது சாற்றுமக் காலை
கும்ப சம்பவ னாதியாந் தவத்தினோர் குழுமி
யெம்பி ரானறனை நியதியாற் பூசனை புரியற்றி
நம்பினே டிவ ணிருந்தனர் நடந்தன பலநாள். (அ)

ஆய காலையி லந்தண் மாதவர் சிலரணைந்து
பாய வேலையுண் டவன்றனைப் பணிந்துநீ யெளியேந்
தூயர் போற்றிடுஞ் சுவேதகா னத்திடைத் தொடங்கு
மேய வேள்வி நோக்கிட வரவேண்டுமென விரந்தார். (கூ)

விந்த மாய்த்தவ னுலகெலாம் விளிந்திட வரினு
மிந்த மாதலந் தனைவிட் டகன்றிடே னென்றான்
வந்த மாதவ ரீசனை வணங்கிநின் மகத்திற்
கந்த மாங்குறு முனிவனங் கணைந்திடு மென்றார். (ய)

பரம னனபொடு மகத்திய படர்திநீ யென்று
விரவின் மீதெமைத் தொழவிவண் மேவுறு நாளுன்
வரவு பார்த் தெதிர் நிற்குது மென்னலும வாழ்த்திப்
பொருவின் மாதவ ரொடுமவண போயின ரங்கே. (யக)

வேறு.

குரவ ரின்மையாற சிலபக லகன்றிடக குலவுமிந் நாட்டிடை நீடு
சரியை யாதிநாற் பததநெறமெ நடந்தன சைவமை திக மெல்லா
மிரவி நீங்கிடத் திருடருங் கூகையு மிலங்கலொத துலகெங் குமப
பரவ லுற்றனர் ஞானசூ டன்முதற பவுததர் சிவகா மாதோ. (யஉ)

மதியி ழுந்துநின் புலிக்கொடி நிருபனு மருவிட மதமுற்றான்
பொதிய வெற்பனீ தறிந்துவந் தவனறனைப் பொருதுவென் றுவப்பெய்தி
மதுரை யுற்றினி திருநதன னவனையும வளைததன ரமன்குண்டர்
விதியை வெல்குவ தெளிதுகொ லவனுமவ் வீணர்க ளொடுசேர்ந் தான் ()

பாணடி நாடனு மமணரின மூழ்கிய பரிசுதேர்ந் தொரு வேடன்
றூணடு சேனையோ டெய்திவெம போரசெயத் தோற்றுமீ னவனோடிக்
காண்ட முற்றெளித தானமண் குண்டருங் ககழ்வுகொண டவன் பின்ன
ராண்ட னைந்தன ருலகிய லித்திற மாகமுற் றியதம மா. (யச)

இங்குமுன் னரசன் சமணர்தங் குழுவொ டியைதலு மீசனைப் போற்றி
யைங்கரக் கடவுள் சங்கர சிருட்டி யாகிய வடியினிற் றனே
யெங்குமிவ் வுலகி லமணர்தங்குழாங்க ளியைந்ததென னிருபனுமதிகெட்
டங்கவரான தென்கொனின் பூசை யருகிய தென்னென வினவ. (யகு)

முன்னவனவனை யருகழைத்தணைத்து மொழிதருமுச்சிமோந் தருள்கூர்ந்
தின்னண நமது சமயவாற றலினை யெவர்களு முணர்ந்திடச் செய்தோந்
துன்னுமிவ் வமணர்தமையெலாமவென்று தொலைத்திடவருஞ்சிலநாளின்
பின்னர்நம மிடத்தி லன்பினிற் றுதியிற பெரியனுஞ்சிறியனீங்கொருவன்.

அருந்தவ முனிவ னொருவனீண டணையு மவனெமை யருச்சனை புரிவன்
பொருந்துற மீதென றவன்வருந் துணையும பூசனை புரிதிநீ யனைய
திருந்திடு தவத்தோன வழிபடுங் காலோர் செனனியிப் புவிதனக்கினிய
விருந்தென வருவன் வந்துநம் பூசை விளக்குவ னெங்குமித் தலத்தும். ()

நீயிதற் கிரங்க லெனவகுத் துரைத்தா னீடுறு துதிக்கையோன் மகிழ்வுற்
றேயுமத் தினத்தொட் டருச்சனை புரியு மென்றன னுரோமச னுவகை
மேயின னாகிப் பூசனை புரியும் விதஞ்சிறி துரைத்திடு கென்றான்
மாயிரு குணிக்கும்வேத்திரப்படையோன் வகுத்ததுமொழிந்திடுமன்றே

தினந்திகழ் நியதி யாய்மறைப் பொருளாய்ச் சிறந்திடுஞ்செழுத்தினி தறைந்து, மனந்தரு பொருள்கொண் டகிலகா ரணனை மானத பூசைமுன்னியற்றி, யனந்தரம் புறத்து வேண்டிடும் பொருள்கொண் டவனியோ ரறிந்திடா வண்ண, மினந்தரு கணங்க ளேவல்செய் திடநின் றிசைத்திடு பூசனை புரியும். (௰௧)

ஆதலான் மனித ரில்லையிங் கிறைவ னவன்செயும் பூசனைக் குகந்து
கோதில்சீர்வரங்கள்வேண்டியதளித்தான் குலவுமைங்கரனுமுண்மகிழ்ந்து
நீதிமன் னவர்க ளின்மையாற் றனது நீடருள் கொண்டுயிர்த் தொகுதி
யோதிடுந் துயருற் றிடாவகை யினைய வுலகையுங் காத்தினி திருக்கும்.( )

இந்தநன் னிலத்தின் கருப்பொருண் மருத மெனச்சொலுந் திறத்தினாலெ
ன்றுஞ், சந்தமுறறிடுமன்னதுசிலசூழ்த் தழைந்துறைதகமையோர்ந்திண்டு
முந்துவெண் கைலை வந்தொரு மருதாய் முனனவன் புடைநிழல்விரித்துச்
சுந்தர மருவி நின்றதிப் பொழுது தொடர்மரு தடவியா யினதே. (௨௧)

இன்னுமொன் றிசைப்பன்பவுத்தரோடியையவுற் றிப்பொழுதுலகினைப் புரக்குஞ், சென்னிதன் குலத்துத் தருமசே னனுக்கோர் சிறுவனுற் றிடுஞ் சில நாளி, லன்னவன் றரும வடிவமே யனையா னவனைவிக் கிரமனென் றெவரும், பன்னுவ ரவனிவ் வுலகினைப் புரக்கும் பதத்தினி லிங்ஙனம் வருவன். (௨௨)

துணையிலா வரசன் றன்னைநீர்வீர சோழனென் றணிமுடி கவித்து
மணிவளர் மிடற்று மருதநா யகனற் வளமையுஞ் சிறிதிசைத் திடுவீர்
கணிதரு மவனீ ரிசைத்திடு வண்ணங் கதிர்மதி வேணியன் றனக்குப்
பணிவிடை புரிவ னீருமித் தலத்தே பயிலுறு முனிவரோ டிருந்து. (௨௩)

நற்றவம் புரியி னிறைவனும் விரைவி னண்ணிவேண் டியவர மளிப்பன்
சொற்றமிழ்முனிவனென்னவித்தலத்தைத் துலக்குவீரொன்றிசைத்தகன்று
ன், குற்றமி றவத்து முனிவனச்செம்மல்குளிர்மலர்ப்பதம்பணிந்துவகை
யுற்றுநீடிறையோன்கோயிலின்வடபாலுறையிடந்தழையினுன்றமைத்து

ஆர்புனை வளவர் நாட்டினிற் கால மறிந்தவர் துதவிடும் பொன்னி
நீரின்முப் பொழுதும் படிந்தவ ணியற்று நியதிக ளியாவையு முடித்துச்
சீருறு மலர்மஞ்சனாதிகொண் டிலங்குஞ்செய்யபொற் கோயிலின் மேவிக்
காருறு மிடற்று மருதவா ணனையுங் கணதிபன் றன்னையும் பணியா.(௨௫)

ஆய்தருஞ் சுருதி யாகம விதிகொண் டருச்சனைபுரிந்துசென்றினிய
காய்கனி கிழங்கு கிடைத்தன வருந்திக் களரிதன் னுடும்வட நீழல்
மேயசீர்க் குரவனாகியெம் மிறையோன் வெளிப்படக்கருத்தினிற்குறித்து
தூயருந் தவத்தி லுறைந்தனன் பன்னாள் சூழ்முனி வருந்தவத்துறைந்தார்

பயலுமத தவத்தி னிறைவனுற் றிடாத பரிசுகண் டொய்யுணர் வின்றி
யியலுறு சுவாச மதனையு மடக்கி யிசைத்திடு நிருவிகற் பமதாம்
வியலுறு சமாதி யடைந்தொரு தம்ப மேவிய தெனவிருந் தனன்பின்
மயலொடு வெகுளி காமமொன் றுறாத மாதவ வுரோமசன் மாதோ. (உஎ)

இன்னணம் வலியநிட்டையிலிவன்மற் றிருத்தல்கண்டரிமுத லிமையோர்
முன்னர்வந்தனக்கு வேண்டியவரங்கண்மொழிகென முனனவனிடத்திற்
றுன்னுறுமனத்தோரென்னுமோ திலனச் சுராதிபா தவநதினையலைப்பான்
மின்னிடை யரமபை மாதர்கள் பலரை விடுத்தனன் கினனர ருடனே. ()

வேறு

வந்தரம்பை மடமாதா முழாவினொடு சிலம்பொலிப்ப மருங்கு றன்னோ
டந்தளிர்ச்சீ றடிவருந்த வாடாத நாடகமு மாடித தீரததா
கந்தருவ ரிசைபாடி வாயினொடு மனமிளைபபக ஏகயி னோடு
தந்திரியுஞ் சோர்வு பெற நின்றனர்பின் னெவரும்வெள்கி நதமதாருற்றார்.

பரவிதற்கு மனஞ்சலியா தொருநிலையி லிருக்கின்ற பரிசோராந தன்னை
கருதியவா ரிலகுமுல கனைத்தையுமீன் றளிக்குமெழிற் கவுரி யோர்பான
மரகதவெற் பெனவிளங்கத தானபதும ராகவெற் பெனவிளங்கத தானபதும ராகவெறடு வனைபோ னின்று
ஏரவமணிந் திடுமருத நாயகன்வந் துரோமசனு மவன்றன் முன்னர். (ஙய)

மானமுறு பாரிடங்கள புடைசூழப் புகழ்ந்திமையோர் மந்தா ரநதின்
றேனிமிரு மலர்மாரி சொரியமறை வாழ்த்திடசகந் திருவர் தேவ
கானமிசைத் திடவெதிரின் றிடபரம குரவனைத தனன கண்ணிற கண்டா
னீனமில்சீர்த் தவமுனிவன் பாவகமுற் றேயமே யெனன நின்றான். ()

நின்றுணர்வு கொண்டதற்பி னிமயமயி லொரேற்ற ரிமலன் பாத
மனறல்கமழ்சரோருகததண்மலர்த்துணையிற்பணிந்தெழுந்துமாறிலகண்ணீ
ர், குன்றருவி யெனசசொரியமனமுருகிககரஞ்சிரமேற குவிததுமேன்மே
லொன்றியபே ருவகையொடுமுறைதமொ ழிடப்பரவ லுற்றானமமா. (ஙஉ)

பதுமமல ரடிநினைந்தோ ருறுதுயரங் கடிதகறறும பரம போற்றி
விதுமவுலி யிறைபோற்றி திரிபுரந்தீ யெழநகைதத விமல போற்றி [ற்றி
முதுமறையுட்பொருளபோற்றி யெவரொதுவே ணடினுமுதயு முதல்வபோ
மதுமலிதண் மலர்ககூந்த லுமையவளு யகமருத வாண போற்றி. (ஙங)

எனத்துதித்த முனிவரனை நோக்கியருள் கூர்ந்திறைவ னிமைப்பிலோரும்
பனிப்புறநீ வருந்திமிகப் புரிந்ததவங கண்டுவந்தோம் பரிந்து மேலுன்
றனக்கிவண்வேண் டியவரங்கள் கேட்டிமகிழ்ந திவையனைதது தருது
மென்றான், கனதபுகழ்ப்பெருந்தவத்தோர்தலைவனிவை விளம்புகின்றான்
களிப்பு மேவி. (ஙச)

சுராதிபவிவ் வடிவொடுநீ யென்றுமிங்கு சலதிருந்து தூயபொற்றாள்
பராவுதல்செய்பவர்தமைக்காத்திடவேண்டுமெனககு முன்பாறபத்திவேண்
டும், சுராதலமின் புறவேண்டுஞ் சைவமொடு வைதிகமுந் தழைககவேண்
டும், விராவுபுக ழெத்தலதது நின்பூசை பொலிவெய்த வேண்டுமென்றான்.

தேமலர்ச்செஞ் சடையவனித் திறங்கேளா முனிவரநீ தெரித்த வாறே
நாமுமிவ ணுறைகின்றோம் பிறவரமு மினிதளித்தோம் நவில்கின் ஞானி
லேமமுறு மொருவளவன் வருமிவண்வந் துனக்கேவலெதுவுஞ்செய்வான்
மாமருவு மெய்யுணர்வும் பெறுகுவைமே லெண்ணியவு மருவு மென்றான்.

விதிதருமிவ் வரமேற்றுக் களித்துவர மளித்தானும் வெற்பின் மின்னுங்
கதிருமிழோர் மணிச்சிங்கா தனத்தினுறப் பூசித்துக் கருத்தி னூடு
முதிருறுமன் பொ[illegible]த நாயகனைப் பெருநலமா முலையி னானைச்
சதிருறுமைங் கரனவனைப் பூசித்து முனிவர்பிரான் றங்கு நாளில். (கஎ)

சேற்றினிடைத் தாமரைதோன் றியதென்ன விடமுதவு சிற்றராவின்
பாற்றிகழுஞ் சுடர்மணிதோன் றியதென்ன வறிவிலியாய்ப் பவுத்தனாகி
வீற்றிருக்கும் புரவலன்பாற் சென்னிகுலத் தூடனுலகம் விளங்கவந்து
தோற்றியரன் றிருவருளாற் காஞ்சிதனில் விக்கிரமச் சோழன் மாதோ. ()

விடையுகைத்தானிடப திகினிலன்புருவாகிப்பிறைமதியின்விளாவிளுங்கிப்
படைகுடிகூ ழமைச்செல்நட் பரணறின்வலியெய்திப் பகைவேந்தர்க்கோ
ரடலேறாயக் கல்வியருட் சாகரமாய் மன்னுயிர்கட் கனைய கொற்றக்
கொடைநிழலுற்றறினிலொன்றிறைகொண்டிறையினெடுகூடிவாழ்வான்

இத்தலத்திற் காகப்பொன் னுருவாகிப் பேசியகிழ்ந் திருந்த வாறு
மெய்த்தவரோ மரோமசமா முனிவரன்மா தவம்புரியும் விதமுங் கேளா
வ லமுற திப்பொழுதே பாஞ்சுடரைப் பணிவேனென் றவாவி னோடு
பொய்பெருஞ் சேனையொடு மெழுந்தெழிற்கா விரிநாட்டின் முன்னுற்
றுற்றல். (சய)

கயலினங்க ளுயர்தெங்கி னிளங்காயிற் பாய்ந்துடைக்கக் காலுந்தெண்ணீர்
மயலி டப் பொன்சொரியினீர் வடிந்திடுறும்வடியாத வளத்தாற்செங்கெ
லியல்பினெழு சன்னலெனக் கன்னல்கமு கெனக்கமுக மெழிற்றெங்கென்
னப், பயில்வளமை பார்த்துமகிழ்ந் தரன்பதிகள் வழியுறைவ பணிந்து
போற்றி. (சக)

ஆசினிமட் டெழுந்திலகு சையவரை தனிற்பொலியு மாரத தோடு
தேசுமிகு மரகதம்வச் சிரமாதி கொடுதேக்கித் திரைநீள் வேலை
காசினிக்க ணாதரு கரமாகி விளங்கிடச்செய் கவினுற் றோங்கும்
வாசநெடும் புனற்பொன்னி யடைந்துபடிந் ததிர்நியம வகைக ளாற்றி.

மருதவனத் திடைமேவி யுடுக்கணத்தி னடுவொளிரு மதியே போன்று
கருதுமுயர் தவமுனிவ ரிடைவிளங்கு முரோமசனைக் கண்டு தாழ்வுற்
றுருகிமேன் பொடுநின்றான் முனிவரன்பார்த் திறைவனரு ளுன்னிமன்று
வருகவென வியந்தினிய முகமனளித் தாசிபல வகுத்துப் பின்னர். (சரு)

நவிலுமவன் றனக்குரிமை யுடன்வீர சோழனென நாமஞ் சாற்றி
யவனிபுகழ் மருதவனத் திறைவனவின் றனைநினைத்த வருளு மோதித்
தவமுனிவ ரொடுமவன்ற னொடுமெழுந்துபொற்கோயில் சார்ந்துமன்னுஞ்
சிவபரன்முன் விடுத்தனனுங் கவன்வணங்கித் துதியனந்தஞ் செய்தான்
மன்னோ. (சச)

அவ்வயினின் றவ்வாசனம்முனிவர் தலைவனொடு மன்பினோடுங் [திச்
கொவ்வையிதழ்க் கருநெடுங்கட் பெருநலமா முலையுமையாள் கோயிலெய்
செவ்வனசத் தாட்பணிந்து மற்றுமுள தேவர்தமை நெரிசித் தேத்திக்
கவ்வைநெடுங் கடல்குடித்தோன் செய்தவமா தியுங்கேளாக் களிப்புநீடி.

பொன்பயிலுந் திருக்கோயிற் புறத்தினிலுற்றிருந்து முனிபொற்றாள் போற்றி
யன்பிலெளியேனையுமோர் பொருளாகக் கொண்டருள்செய் யறத்தின் மூர்த்தி
கொன்பயிலுந் தவச்சுடரோயானியற்லும் பணிவிடை பெண் கூறுகென்றான்
மின்பயிலுந் தனிவேலான் றனைநோக்கி முனிவர்பிரான் விளம்பு வானால்

வேறு.

எண்ணிநின் செல்வ மிளமைமெய் கனத்தி லியல்பதா யழிந்திடு மென்
றும், புண்ணிய மறனுந கழிவிலை யதலிற் புகல்சிவ புண்ணிய மதிகம்
பண்ணிநின் தவத்தா லியாவையு மருவம பயின்றிடு மனைமா யத்திற்
கண்ணுதற் பிறைச்செஞ் சடைமணி மிடற்றுக் கடவுடன் பூசனையதிகம்.

மருத்துள வணிமான முதலினோர் பாமு மற்றவர் செல்வமும் பிறவு
நிருத்தனைப் பூசை புரிந்திடு பயனே நிலவுமப் பூசைதன் கையா
லருத்தியிற செயலே யமையுமான் மாந்த மன்றியன் னியவடி வதனி
லொருத்தராற் செய்வித்திடலுமா மமைற்றவுயர்ந்த துசயம்புவா மிலிங்கம்.

இன்புற வொருவன் றன்புதிதாக வியற்றிடு மறங்கிறு மொருவன்
முன்புசெய் திருந்த வறத்தினுக் கிறுதி முந்தறச் செய்திடா திருக்கிற்
கொன்பயில் பலனங் கெண்மடங் கினிது கூடுநீ டறமொழிந் திடுகொற்
றன்பொருண் முயற்சிகொண்டமை விளங்கச் சமைத்திடற்சதமடங் கெய்
தும். (சகூ)

அரனடி யவர்கட் களித்திடு மெவையு மரன்றையி லளித்ததே யாகு
நிருபநீ யினைய புனிதமா தலத்து நித்தன்வாழ் சினகர மெங்கும
பரிவட னீடு திருப்பணி யியற்றிப் பரன்மகிழ் பூசைமுஞ் செய்வித்
துரியமெய் யடியார் தமமையும் போற்றி யுமாபதி யருளடை கென்றான்.

இத்திற முனிவ னிசைத்தசொற் சென்னி யெழின்முடிச் சென்னிதாழ்ந்
தேற்று, மெய்த்திற லமைச்சர்க் கிசைத்திட வவர்கள் விரைவினே வவர்
களைத் துறைதோ, றய்த்திட வனஞ்செற் றணிநகர்வகுத்தற் குரியவர்சிற்
பநூ லுணர்ந்தோ, ரத்தொழிற் குரிய கருவிகளுடன்வந் தளவிலர் சூழ்ந்து
கா டெறிந்தார். (ருக)

செழிதரு கருங்கால் வினைஞர்வா ணவியத் திண்படை யெறிதலுமாங்கே
யறைதரு மருத வனத்துறை யிறையோனடிதொழுமன்பர்பல்வினைபோற்
பறவையும் விலங்கு மெறிந்தன வவர்கள் பவத்தொடக் கென்னவேரோடு
முறிதர லுற்று வீழ்ந்தன போலு மொழிந்திய் தருக்குல மெங்கும். (ருஉ)

வனமறப் போக்கி நிலனுறத் திருத்தி மருதநா யகப்பெருங் கடவுள்
சினகரந் தனைமுன் மயனினி திலங்கச் செய்தவா றொழில்படப் புதுக்கிக்
கனமுறப் பின்னுந் திருப்பணி பலவுங் கண்டுநன் னகரமேற் காண்பா
னினமுகி லுறங்கு நேமிமால் வரைநே ரெயிலுட னகழிரு ழமைத்து. ()

மாகமார் குடுமி மாடநீண் மறுகு வகைபடு மாவணங் கவலை
யேகநா யகன்வந் தனுதினம் பவனி யியங்கிடு பெருந்திரு வீதி
வாகுறு தெற்றி சாளர வொழுக்க மன்றுபொன் மேடையாடரங்கு
பாகுறு கழக மூயர்மணிக் குலங்கள் பரந்தினி தொளிர்நிலா முற்றம். ()

மாதவர் மடங்கள் பயிலறச்சாலை மருவுறச் செய்துமற் றனந்தங்
கோதில்சீர்த் தெருவு மியற்றிவெங் களிறு குலவெழிற் றேர்பரி நிலையுந்
தாதுறு மலர்ப்பூஞ் சோலைபைங் கமுகு தழைந்தெழு தெங்குவெண்கதலி
சூதநீள் வருக்கை கூவல்பூந் தடாகத் தொகுதியு மிலங்கிடவமைத்தார்.

அறைகழ லரச ரேக்கியுண் மகிழ்வுற் றணிநகர் சாந்திசெய் தோங்கு
மறையவர் மன்னர் வணிகர் வேளாளர் மற்றைய சாதிய ரவர்க்கு
முறைபெற வீடு வகுத்தினி தளித்து முந்துபொன் முதலிய வுதவித்
துறைபயில் வேணி மருதநா யகர்க்குச் சூழ்ந்திடு பதியெலாங் கொடுத்து.

அலகில்பொற் கலையு முயர்நிதிக் குவையு மணிமணிப் பணிகளு மீந்து
கலைபயி லாதி சைவராற் பூசை கருதியே மூன்றுகா லையினு
மிலகிடச் செய்தா தானுமந் நகரத் திலங்கொரு மாளிகை யிடத்துச்
சலவுறுஞ் சேனை நெருங்கவீற் றிருந்தான் றுன்னல ருள்ளமு நடுங்க. ()

இருந்திடு வளவன் மற்றைநாண் முனிவ னிருக்கையுற் றடிமலரிறைஞ்சித்
திருந்தெழின் மருத நாயகன் றனக்குத் திருவிழாச் செய்திடு கென்னப்
பொருந்துமென் னெஞ்சமு புகலுமீண் டதற்குப் பொருந்திய மதியெது நாள்
யா, தருந்தவர் தலைவ வென்றனன் முனிவனவன் றனைப் புகழ்ந்தினி திசை
க்கும். (௫௮)

மாயிருஞாலத் திருந்துளோர் பாவ வலியெலாந் தொலைத்திடு மெவர்க்குந்
தூயதாக் கிடுமங் கலந்தனை வளர்க்குந் தொடர்ந்திடு முத்தர நெறியி
லாயிரங் கதிரோ னடைமுதன் மதிமற் றன்னதி லுயர்ந்திடு பூச
மேயநா ளதனைத் தீர்த்தநா ளாக்கி விழாவினி தியற்றிட லாகும். (௫௯)

பேசிடுமேனைத் தலத்தொரு கோடி பிறங்குநற் பசும்பொசும்பொ னீந்தது
வாம், பூசநா ளினிலீண் டணுவள வதனிற் பூசுரர்க் களித்திடு தான
மாசில்பொ னகமெண் கோடியர் தனக்கு மற்றைய தலத்தளித் திடும்பே
றீசனன் பருக்கித் தலத்தினத் தினத்தி லீந்திடு பிடியன முதவும். (௬௰)

உடையவர் பூச நாளிலுண் மகிழ்வுற் றுதவில சொன்னில்யா தேனுங்
கடைபடுமவர்கள் வாழ்வுசின் ஞளிற் கள்வராற் பகைவர்க டம்மா
லிடைமருதென்னுமிதனிடைவிளங்கு மெழில்விழாக்கண்டுளமகிழ்ந்தோர்
விடையவன் மலர்த்தாள் பணிந்துளோ ரிவர்கள் வியன்சிவ புரியினில்வாழ்
வார். (௬௧)

விழவுநோக்கிடவொனெழுந்தொருதடையான் மீண்டவர்மேவுறநினைந்தோர்
முழவொலிகேட்டோர்நோக்கமுற்றடைந்தோர் முன்னுறக்கண்டவரவரை
யெழில்விழாச்சிறப்புவினவினோர்வருவோரிடத்தினிலெம்பிரான்றனக்கு
மொழிதருபொருள்யாதேனுமீந்தவர்கண் முதியசீர்த்தேவராய்த்திகழ்வார்.

அத்தகை மதியு மடுத்ததன் னதனி லமரர்தங் குரவனு ளதுவு
மொய்த்திடு மவன்றன் வாரமுங் கலையா லுடுபதி நிறைந்திடு திதியு
மொத்தணைகின்ற தின்னதுத்தமமா மொளிர்விழாத்தொடங்குகவென்றான்
மெய்த்திற லரச னுவகைமீக் கூர்ந்து விருப்புட னவ்வணந்தொடங்கும்.

மருவளர் மலர்ப்பூம் பெழிலிடை மருதூர் மருதநா யகனெழிற் பூசத்
திருவிழாவினுக்குவந்திருந்திறையோன் றிருவருளடைந்துசெல்கென்னக்
கருநடந் தெலுங்க மாரிய மராடங் கவுடமா தியவுயர் நாட்டு
நிருபர்க டமக்கு மனமகிழ் வோடு நேர்தர வரைந்துமுன் விடுத்தான். ()

ஓங்கெழிற் கனக வரைக்குல மென்ன வுயர்மணித் தேர்கள்செய் வித்துத்
தேங்கமழ் மருத நிழலுறை யிறையோன் சினகர மெங்கணும் விதானம்
பூங்கொடி மகர தோரணந் தொடலைப் புகழ்நடைக் காவண மாக்கி
தாங்குபொன் வீதி யலங்கரித் திடுவான் றழங்கொலி முரசறை வித்தான்.

வாரண மிசைநின் றறைந்திடு முரசின் வளரொலி கேட்டனர் மகிழ்ந்து
தாரண வுறுபூங் கோதையர் மனைவர் கவின்மனை தொறுமுனை வளைத்துப்
பூரண கும்ப மினியபொற் கொடிகள் பொலிவுறச் செய்தவீ திகளிற்
றோரண மலர்ப்பூம் பந்தர்கள்விரித்துச் சுடர்மணிப்படலைகணிரைத்தார்.

மணிவிளக் கெடுத்த தமனியப் பாவை வாயில்க டொறுமுற நிரைத்தார்
கனிதரு கமுகு தெங்கினொண் குலைகள் கதலிபைங் கன்னல்சன் னிவைத்தா
ரணியணியுரிஞ்சவுதிர்ந்தபொற்பொடிகளடங்கிடப்பனிப்புனலிறைத்தார்
இணிதரு தத்த மனைதொறும் வதுவை செய்தலிற் பிறவுமே லமைத்தார்.

துன்னிடு மோலை கண்டிடு செங்கோற் றுங்கவெண் குடைப்புர வலர்க
ளின்னிய முழக்குங் கடகரிச் சுறவு மிவுளிவண் டரங்கமு மெழிற்றே
ரொன்னுமொண் கலனும் பரந்திடு சேனை யிருங்கடல் சூழ்ந்திட வெழுந்து
மன்னிடு மகிழ்ச்சி யுடன்றிசை தோறும வந்திடைமருதினிற் புகுந்தார். ()

வளவன்மற் றவரை யெதிர்கொடு மருத வனத்திறை மலர்ப்பதம் பணிவித்
துளமகிழ் சிறப்பும் வசதியு மவர்கட் குதவினு னுயர்விழா நடக்கும்
வளமையோர்ந் தவனித் தலத்துறை பிறரும் வானநா டரகநாட் டினரு
மளவில்பே ருவகை தன்னுடனீடு மவரவ ரூர்திமேல் வந்தார். (சுக)

சென்னியுண் மகிழ்ந்து மாதவற் குறுகிச் செய்தவுஞ் செய்பவுமுரைத்து
முன்னதூர் காவுஞ் சாத்தன்மா காளி முதலியோர்க் கணிவிழா நடாத்தி
யென்னைய னென்னு மைங்கரக் கடவுட் செழில்விழாத் தனியினி தியற்றி
மன்னனு லிடபத் துவசமேற் றுவித்தான் மருதநா யகனுள மகிழ. (எ௰)

அத்தின முதற்கொண் டேகநா யகனீ டணிதரு பொற்கலை மகுடம்
நித்தில வடங்கள் கதிர்மணிப் பதக்க நிலவுமிழ் மகரகுண் டலங்கள்
சித்திர மணிக்கங் கணங்கள்கே யூரந் திகழ்மணி நூபுர மாதி
மொய்த்திடு பணிபூண் டெழில்கொள்வா கனத்தின் முற்றிழை யுமையுட
னெழுந்து. (எக)

நாரணன் பிரமன் புரந்தர னாதி நவிலுமெண் டிசைபுரந் திடுவோர்
தாரணி வசுக்கள் வைரவ ரியக்கர் தண்மதிக் கடவுளா தித்தர்
போரணி நெடுவேற் றனவ ரிமையோர் போற்றுசந் தருவர்விஞ் சையர்கள்
பாரிடத் தலைவர் சித்தர்மா தவர்கள் பார்த்திப ராதிமா னிடர்கள். (௭௨)

வம்பவிழ் கோதை யரம்பைய ருரக மடந்தையர் வயங்கெழு மாத
ரம்புவி யிடத்துப் பேதைய ராதி யணியிழை வனிதைய ரொவரும்
பைம்பொ னீள்வீதி யிடத்திலும் புயல்கண் படுசிகை மண்டப மீதுங்
கம்பயில் சிகரி மணிமதி லிடத்துங் கணங்கொடு நின்றுபோற் றிசைப்ப.

வேறு.

படகமொண் சங்கம் வீணை பகர்ந்திடு தகுணி பேரி
குடமுழா முரவ மொந்தை கொக்கரை குடாரி தாளங்
கடமுறு முருடு தக்கை சல்லரி குழல்யா ழாதி
திடனுறு கொண்ட லோடு திரைகடன் முழக்கஞ் செய்ய. (௭௪)

தருமமால் விடையோன் வந்தான் சம்பக வனேசன் வந்தான்
பெருநல முலையாண் மன்னும் பிறங்கெழி லிடத்தான் வந்தா
னிருணிற மிடற்றோன் வந்தா னேகநா யகன்வந் தானென்
றுருவளர் மணியிற் செய்த வுபயசின் னங்க ளார்ப்ப. (௭௫)

கவினுறு பாடற் பண்பு காந்தளொண் கரத்திற் காட்டி
சுவையுற வதனப் போதிற் றுணைவிழிக் கயலு லாவத்
தவறில்சீர்ச் சதியி னோடு தளிரடி பெயர்ந்து வைத்துக்
குவிமுலை மலர்ப்பூங் கோதை யரம்பையர் நடனஞ் செய்ய. (௭௬)

எண்ணில்வெண் மதிகள் வெய்யோ னெதிருற்ற தென்ன வெண்ணில்
வண்ணவெண் டாளத் தொங்கல் வயங்குபொற் குடைகள் சூழத்
தண்ணுநித் திரளு மென்னத் தரளவொண் பந்த ரோங்க
விண்ணிற்புள் ளினஞ்சூழ்ந் தென்ன வியன்கொடிக் குலங்க ணீட. (௭௭)

ஆவண மென்னும் வேலை யதிலெழு திரைக ளென்னக்
காவணக் கூந்த லார்கைக் கற்றைவெண் கவரி துள்ள
மாவணத் திலங்கவ் வேலை மலர்ந்திடு செம்பொற் கஞ்சப்
பூவண மெனத்தீ பங்கள் பொலிந்தவெண் ணிலாத வெங்கும். (௭௮)

காவிரித் தென்சா ரோங்குங் கவின்மணி மண்ட பத்தின்
மேவிவீற் றிருந்தன் னோர்க்கு வேண்டிய வரங்க ளீந்து
கோவிலுற் றினிதுநீடு கொடியுகந் திறக்கிச் சூழ்ந்த
தேவர்கண் முதலி னோர்க்குத் திகழுறு விடையு மீந்து. (௭௯)

மாற்றருஞ் சிறப்பின் மிக்க மடங்கலா தனத்து மீது
வீற்றிருந் தனன்மற் றிப்பால் வேந்தனும் மகிழ்ந்து சென்று
போற்றினன் முனிவன் றன்னைப் புகழ்ந்தன னவனுங் காசி
சாற்றிவெண் ணீறு நெற்றி தரித்தன னுவகை கூர்ந்து. (௮௰)

சென்னிதன் னிருக்கை யெய்தித் தேவர்மன் னவர்க ளியார்க்குந்
துன்னுறு வரிசை நல்கித் தொகுமவர் தன்னை யேவி
மன்னர னருளி னூலோர் மகப்பயந் துவகை யெய்திப்
பின்வரும் வருடந் தோறும் பெருவிழா நடத்தல் செய்து. (௮௧)

பிறங்குபல் காலம் வாழ்ந்து பின்புதன் னரசு தன்னை
மறங்கிளர் நெடுவேற் செங்கை மைந்தனுக் குதவித் தான்செ
றறங்கிளர் சிவலோ கத்தி லமர்ந்திம் புனிதன் செய்ய
திறங்கிளர் பதார விந்த நிழலின்வீற் றிருந்தான் மன்னே. (௮௨)

உரோ மசன் பின்னு மாங்கே வுயர்மரு திறையோன் பாத
சரோ ருகம் போற்றி நீடு தவம்புரிந் திருந்தா னிப்பால்
விரோதமில் லருந்த வத்து மிருகண்டு வென்னு மேலோன்
வரோதய னென்ன வோது மார்க்கண்டன் பேறு சொல்வாம். (௮௩)

உரோமசச் சருக்கம் முற்றும்.

ஆக திருவிருத்தம் ௪௮௨.



௨

## மார்க்கண்டச் சருக்கம்.

மாத வப்பெரு வாழ்வுறு மார்க்கண்ட முனிவன்
வேத நாதமுந் தகைகடன் முழக்கமும் விரவுங்
கோதில்சீர்க் கூடலூ ருறை யிறையவன் குளிர்பொற்
பாத பங்கயங் கூறறின்மேற் படப்புரிந்த தற்பின். (௧)

வேலை சூழ்புவி யிடைப்பல தவங்களின் மேவி
பால லோசன னுமைக்கொரு பாசமுண னளித்த
கோல மின்புறக் காணிய வுளத்திடைக் குறித்துச்
சீல மாதவம் பலபகல் செய்துசெய் திளைத்தான். (௨)

ஒருத லத்துமத் திறனெதி ருற்றிடக் காணன்
கருத்து வண்புக ழிடைமரு திடத்தினிற் கலந்து
பொருத ரங்கமொண் மணிபெறி பொன்னிநீர் படிந்து
மருத நாயக னடிமலர் வணங்கிநின் றேத்தி. (௩)

பரிவி னேடொரு சிறையிருந் தெதிர்வரு பன்னு
ளரிய மாதவ மியற்றின னவனும்வந் தன்பர்க்
குரிய நாயக னுமையுடன் கருணையுற் றும்பர்
விரிகொ ளொண்மலர் சொரிதர மேவிமுன் னின்றான். (௪)

வேறு.

ஒருவடி வதனி லொருபுறத் தான்மற் றொருபுற முயமொழி யுமையாள்
மருவுதன் புறநீற் றணியுறு தவள மலர்ச்சடை நீலவொண் மிடறு
பரவெழின் மார்பிற் பணியணி பூணூல் பகர்புலித் தோலுடைப் பரசு
விரவுறு தடக்கைச்சிலம்புறுமலரத்தாள் வீரவொண்மணிவட மதின்மேல்.

நவிலுறு மூமைதன் வடிவெழிற் பசுமை நான்மலா நிலைதருங் கூந்தல்
கவினுறு முயாகுங் குமமொளிர் மிடறு கச்சொடு கதிர்மணிக் கலன்சூழ்
குவிமுலைவளாமார்பிலங்கெழிற்பட்டுக் குலவுநுண்ணிடைமணித்தொடிக்
கை, திகழொளி மணிப்பொற் பாடகஞ் சதங்கை திகழ்ந்திடு சேறடிப்
போது. (௬)

என்னவோ திடுமின் னிவைவல னிடமா யிலங்கிடக் கறுதிபர் சூழ
முன்னர்நின்றிடலுங் கண்டுகைதெழுந்து முளரிநாண்மலர்ப்பதமிறைஞ்சி
மன்னுள மூருகிப பரவசமடைய மலர்க்கணீர் சொரிதரக் கரங்கள்
சென்னிமேற் குவித்து நின்றனன் பின்னர் தெளிவுபெற றிங்ஙனந் துதிக்
கும். (௭)

நீலமார் மிடற்றாய் பவளமால் வடிவி னீறணி நிருத்தனே போற்றி
வேலினைநிகர்கருமவிழியுமை பொருபால விளங்கவந்தெளியனேனகாண
பாலுமின்சுவையு மவேறுவேறிருக்கும் பரிசெனநின்றனைபோற்றி
யேலுமெய்யனபாக்கெளியனேபொழிலகுழிடைமருதிறைவனேபோற்றி.

ஆலநானுண்பாலடைக்கல புகுதவடற்படைகொண்டெனைப்பிடிப்பா
காறிவந்திடுவெங்காலனைக்கறுவுகொண்டுதைத்துயிர்தனைக்குடித்தா [ன்
யின்றுமெனக்கருநது முடிந்திடவுனமயாளிலங்கொருபுறத்துடனின்று
யென்றுமென்றனைக்காததருளவுனைபல்பிடையிடைமருதுறைபரஞ்சுடரே

என ததுதித திடலுமெதிரு ... ... வியமபுவான் முனிவர் டலைவ
வினைதது ... கற்று முனசருந் தவமு மகுந்தநின் பத்தியுந் துதியும்
கனக்கநா முளததின் மகிழ்ச்சிசெய் தனந் கருதிய வரங்கள்கே ளென்றன
னெனக்கலை களைந்து தவப்பயிர் வளர்க்குந் திறலினு னின்னவை பகரும்.

நிலவுறு மிமையோர் தலைவரு முனைர நின்னரு டன்னொடு நீயு
மிலகிடவெளிநின்றென்னையாண்டனைமற் றினிவரமிதனில்வேறென்னோ
குலவுறு மினைய தலத்தில்வந் துன்றன் குரைகழற் பதமலர் பணிவோர்
கலகிலெவ் வரமு மளிதருள புரிந்திண் டவர்களை யாண்டிட வேண்டும்.

கொடியதிக கயங்கணிலைபிறழாத திடினுங் குளிர்கட லாதரத் துறினு
மடியனே னிபாற சிறிதுவைத திருக்கு மன்பினிற குறைவுறா தருளிக்
கடிகமழ் சடுக்கைத தொடைபுனை வேணிக் கண்ணுதற் பராபரவெனக்கு
முடிவினி லுனறன் மறைச்சிலம பரற்று முண்டகப் பதந்துணைதருவாய்.

நின்பணி விடைகள் புரிந்துளோ ரடிசில நிதியொடு கலைமுத லியநின்
னன்பர்கட் கனைய தலத்திடை யளிதத்தோ ரழிவிலா நிலைப்பத மருவி
யின்பமுற் றிடவும புரிதியென் றிசைத்தா னிசைத்திடு வரமெலா முதவி
மின்பயில் வேணி வரதனந் நிலையே விமலைதன் னொடுமகிழ்ந் திருந்தான்.

வீற்றிருந் தருளும் பிறைமதிச் சடில விமலனைப் பெருநல் முலையைப்
போற்றிவந் தனஞ்செய் தனுதின மினிது பூசனை புரிந்துபல் கால
மாற்றருங் காதல் கொண்டுமார்க் கண்ட மாதவன் பின்னுமாங் கிருந்தான்
மேற்றனிச் செங்கோற் சுகீர்த்திமன் னவன்றன் வியனுறு சரிதைகூ றிடு
வாம். (௧௨)

மார்க்கண்டச் சருக்கம் முற்றும்.

ஆ திருவிருத்தம் ௪௭௬.

தந்தியின் குழாமும் பாய்மாத் தானையு மருங்கு போத
மைந்தர்கண் முன்பு செல்ல வண்புகழ்த் தண்டி பின்னோர்
வந்திட மறுகி னூடு மருவுபோ திரண்டும் வானோர்
சுந்தர மலரின் மாரி சொரிந்திடப் பவனி யுற்று. (௭௰௯)

மின்னுபொன் வரையி னோங்கு வெயின்மணித் தேரி னேறிப்
பன்னிரு புனர்த நாளிற் படரொளிப் பவனி வந்து
மன்னிய பூச நாளின் மால்விடை யேறி நீடு
பொன்னியுற் றினிய தீர்த்தம் பொருந்திய வெவர்க்கு மீந்து. (௮௰)

# ௪. கீர்த்திமன் சருக்கம்.

மந்தமா ருதஞ் சூழ்பொழி லிடைச்சூறு மலர்கள்
சிந்து தேறலின் சிறுதுளிக் குலங்கொடு சிதறி
நந்தலில் லெழின் மாடவீ திகளெலா நறுந்தேன்
கந்த மோங்கிடு முயர்பதிற் கச்சியி னுறைவோன். (௧)

வன்ற னிப்புலிக் கொடியி னான்மன்னவர் திலகன்
றுன்று தொடிமைக் கடல்புரை சேனையன் சுகீர்த்தி
யென்று ரைத்திடு பெயரின னிராவலர்க் கென்ன
மன்ற தன்பொரு ளியாவையு மளித்துத வியல்போன். (௨)

காம னேயெனு மெழிலினன் கலைமலா முனிவர்தே
றாம வேற்றைகையான் மகளிர்தங் கயனெனு டினருந்
தாமமார்தரு மலரடி தாங்கிடு புயத்தோன்
மாம திக்குடை நிழலி னில் வையகம் புரப்போன். (௩)

அல்லி னேருறு கண்டனு மவனடி யவருஞ்
சொல்லு மன்னதன் பொருளுமென் றிறைஞ்சிடு தூயோன்
வல்ல வஞ்சகப் பகைவர்தங் கருங்கொரு மறவோ
னல்ல வர்க்கவர் புதல்வரி னுறுமுறு நண்பன். (௪)

புன்க ணுற்றிடு மெளியவர் புவியிடைப் பொருந்து
தன்க ணிற்கொடு நோயுறு மவனெனத் தளரும்
வன்க ணாளனைத் தண்டனை மருவுவித் தவர்மே
னன்க ணுறிட வியற்றுவோ னல்லறம் வளர்ப்போன். (௫)

இந்த நீர்மையி னின்பமுற் றிருந்திடு நாளின்
மைந்த னின்மையாற் சிறிதோர் மனக்குறை யெய்தி
யந்த ணாளர்தம் பூசனை விரதங்க ளாற்றி
முந்து தீர்த்தங்கள் படிந்துசார் திகள்பல முயன்றான். (௬)

இனைய வாற்றியு மகவுதித் திடானைகண் டிரங்கி
யனைய நீடவை மருவிடு மவனுயிர் போல்வார்
புனையு முத்தமிழ் முனிவரன் பொன்னடி வணங்கிற்
றனைய னிவனின் றேல்வழி சாற்றுவ னென்றார். (எ)

சந்த வெண்குடைச் சுகீர்த்தியுந் தருவதா மிஃதென்
றந்த மாதவ னங்குளா னனையினி தாய்ந்து
கந்த நெய்தலொடு மகளிர்கள் காட்டுவென் காட்டில்
வந்தம் மாதவ முனிவரன் மலர்ப்பதம் பணிந்தான். (அ)

மிக்க தென்வரைச் சிகாமணி யாகிய மேலோன்
றக்க வாசிக னொடுபல முகமனுஞ் சாற்றி
மக்கண் மற்றுளா நிகழ்ச்சியும் வினவலும் வளவன்
விக்கி றென்ன நின்றனன் விழுமமீ தாய. (௯)

என்ன கத்திடைத் துயருனக் கென்றனன் முனிவன்
மன்னன் றொலக் கவிலா வணங்கன்மற் றனித்தி
ரன்ன வுற்றினிற பெருமைத் தெய்தின னகற்றே
றின்ன லுற்றனன் புதல்வர்க ளிந்திடா மையிற்றல். (௰)

அலகில் புண்ணிய நீர்த்தக் களமுடனே முடி
யலகி லர்ச்சனைக் கிசைவுறு தானமு மளித்தே
னலகி லேறுபுக ழாற்றினேன் றவம்பல விழைந்தே
னலகில் சாந்திகள் செய்தன னுங்குமா தருளால். (௰௧)

சிந்தி டப்பெரு தளைகவேயான் செல்வமு மதவே
ளந்த மூர்விதி யங்கையு மனர்தீ டறியு
மிந்தி ரன்பெறு போகமு மெய்திவாழ் நினு
மைந்த ரின்றெனின் மற்றோர் வாழ்வெனப் படுமோ. (௰௨)

கருணை யுற்றினி யேனுமோர் காதல னுதவி
யிருமை தன்னினு மெளியனே னிடமுற் றிடநீர்
புரிய வேண்டுமென் றுரைத்தனன் பொதியவெற் புறைவோன்
வெருவ லேலுமை யிடத்திறே னருண்மென விளம்பும். (௰௩)

செந்நெ லோங்கெழிற் கன்னலிற் செறிந்திடு மருதந்
துன்னு வேலியிற் சூழ்தரு மிலங்கிடை மருத
மன்னு செஞ்சடைச் சோதியால் வயங்குமோர் மருத
மன்ன திற்படர்ந் திசைத்திடு மளிக்குல மருதம். (௰௪)

கருமை யுற்றிடுஞ் சிறைவரிக் கணமிசைக் குறிஞ்சி
பரவு வானிடைச் செலவுறு பருவரைக் குறிஞ்சி
மருவு தேண்சொலார் கூந்தலே மானநன் குறிஞ்சி
புரவு தண்கடன் முகிற்குல முலவுறாங் குறிஞ்சி. (௰௫)

வகிரமன் முன்விடுத்தா ரவன்மற் றங்ங
னெங்கள்சிரந் தனிற்கால தன்ட மேறிப்
பாகுறநின் றியாங்களுரைத் தனவு நீடு
பரிவுறுதன் கனைக்கரிசைத் தனவுங் கேட்டு
வேகமுறு நரகினிடை யிவர்க டம்மை
விடுத்துமுறைப் படிதண்ட மியற்று கென்று
ஞாகவெழுந் தனர்பின்னு மநேக ரங்கே
யாலமென வணைந்தனர்கள் கொண்டு சென்றார். (உ௭)

வேறு.

மன்னு துச்சக நரகிடை மருவுற விடுத்திட்
டன்ன திற்பிறன் மனைவியை யணைந்தவெம் பவந்தாற்
பன்னு செந்தழற் காய்ந்தசெப் பெழிலுறு பாவை
தன்னை மெய்யுறத் தழீஇக்கொடு தளர்ந்திடச் செய்தார். (உ௮)

விரும்ப லுற்றய லாடனைப் பார்த்ததன் மேவு
பெருமப வத்தினாற் புகலுந் தீத்திடைப் பிறங்கு
மிரும்பி னாக்கிய துடைவெங் காக்கைக ளிகலுற்
றொருங்கு கண்களைக் கொத்தியீர்த் தலைத்திட விடுத்தார். (உ௯)

விண்டி டித்துவு மிரவியு மேவுநாள் பிறர்வீட்
டுண்ட பாதகத் தேதுவாற் கடத்திடை யுற்று
மண்டு காக்கைக ளழலிடை வைத்தகூ ரிருப்புத்
துண்டமிட்டன வினைத்துணித் திடவெதிர் தொடுத்தார். (௩௰)

தந்தை தாயர்கள் மூத்தவர் சாற்றிடு மொழியை
முந்து கேளுறா மதத்தினான் மூண்டவல் வினையின்
வெந்த முற்கொடுஞ் செக்கிலிட் டரைத்திட மெலிந்து
சிந்தை நொந்தறி வழிந்திடச் செய்தனர் பலநாள். (௩௧)

தனையர் தந்தைதாய் முதிர்ந்துளோர் சார்ந்திடு கிளைஞ
ரினையர் வெம்பசி யறிந்திருந் தினிதுறப் புசித்த
வினையி னாற்புகல் செம்பினை யுருக்கிவாய் விடுத்துப்
புனைகொள் பாசத்தி னடித்தனர் பொருந்துறப் பலநாள். (௩௨)

பெரியர் தங்களை நிந்தனை பேசிய வாய்ப்பற்
சரிய நீள்சவு ளடியுமென் றடித்தனர் சரித்தார்
தெரியு றும்பிறர் பொருள்சனைக் கவர்ந்திடு திண்கை
யரியு மென்றரிந் திட்டன ரபயமிட் டலற. (௩௩)

உன்னு மீசர்தம் மடியவ ரொளியவர்க் குதவா
தின்னல் செய்திடு தனுக்களா மிவைகளைப் பிடுங்கித்
தின்னு மென்றுநாய் நரிபுலி கழுகொடு பேய
பன்ன கங்களை விடுத்தனர் பறையறைந் திரங்க. (௩௪)

கால சூத்திரங் கண்டகோ லாகலங் கராளை
மால்செய் கூடசான் மலியொடு வளர்கும்பி பாகங்
கோலிடுந் தழற் பிரானரோ தம்படர் கோர
மோலி டின்னவை யாதிய நரகெலா முழன்றோய். (௬௫)

இலகு மொவ்வொரு நாள்களி னெய்தொறு மியற்றும்
வலிய தண்டனை தன்னொடு மாறுமுறு வேதந்
துலக மியாவையுங் கனாத்திடை யுலாவியங் குறுவார்
சுலவி யேகுதற் கின்றுபந் திறமிவண சூழ்ந்தார். (௬௬)

வேறு.

இன்னமுமென் செய்வர்களோ வறிந்திலேமே
யிவ்வழிநீர் சிவசிவவென் றுரைத்த சத்த
மன்னவர்கா தினிற்புகலு முய்மை நோக்கி
யகன்றனர்க ளெமைவிடுத்து நாங்க ளிங்குத்
துன்னினமுற் றமதருளா லினிமற் றன்றோர்
தொடர்ந்தெய்மை வருத்தாமற் போற்று கென்னப்
பன்னினம்பி யானவர்களை யஞ்சேன்மி னென்று
பரவு மருடனு மிடைமருதி னெய்தி. (௬௭)

முக்கணுறு பரஞ்சுடரை வணங்கச் செய்து
முதியபுகழ்ப் பொன்னியிடை மூழ்கு வித்துத்
தொக்கவர் கோத்திர முறைத்துப் பிதிர்களுக்குத்
தூயதில தர்ப்பணமுஞ் செய்வித் தேன்மே
லக்கணத்தி னவரை யுருவாகி நேர்க
ளமரர்களா யெழின்மருவி விமான மேறி
மிக்கசுர தந்துபிசன் முழங்க வானோர்
வியன்மலர் மாரிகள் சொரியத் துறக்கம் புக்கார். (௬௮)

அனையதல மான்மியமும் பிதிர்பூசை தன்று
லாகியது முணர்த்தனையே யனேக ரின்னு
மினையவகை யத்தலத்திற் கதியுற் றோர்க
ளிலங்கிலைவேற் சுகீர்த்தி மன்னநீயு மெய்திக்
கனைகடனஞ் சருந்திறையோன் பதம் பணிந்து
கட்டுரைத்த படியியற்றி யுலகம்போற்றுந்
தனையனு திக்திடு மதன்பினிறையோன் கோயிற்
றயங்குதிருப் பணியாதி செய்தி யென்றான். (௬௯)

வேறு

மன்னவன் குறுமுனிவனை வணங்கினன் விடைகொண்
டன்னம் வாழ்மலர்ப் பொழில்குலா மணியிடை மருது
தன்னை யெய்தினன் பொன்னியிற் படிந்தனன் சடைமேற்
பன்னிளம் பிறை சூடி தன்பதயுகம் பணிந்தான். (௭0)

மதித்திடும் புகழாதிநூல் வகுத்திடு முறையே
பிதிர்க்கள் பூசையும் புரிந்தனன் பிறங்குவே னென்ன
வுதித்தனன் றனிப்புதல்வன் றன்னுளத்திடை மகிழ்ச்சி
கதித்தனன் சொரிந்தான் முகிலென வொளிர் கனகம். (சக)

காற்றுமென் சருகறல் பொசித்தெண்ணறுங் காலஞ்
சாற்றுமைங் கனலிடைக் கடந்தனிற் றலைகீழா
நோற்றிடுந் தவப்பேறொரு நொடியினிற் பெரியோர்
மாற்றமொன்றினி லெளிதினிற் கிடைத்திடு மன்றே. (சஉ)

என்ப துண்மையே யென மகிழ்ந்திறைவ னாலயத்துட்
பொன் பிறங்கிடு திருப்பணி யலகில பொலிவித்
தன்பி னோங்கிடு பூசனை யணிவிழா நடத்தி
மன்பெரும் பத்திதிக்ஷணை வழங்கினன் மிகவும். (சங)

ஓதுவேதியர் தமக்கு நன்னிலம் பலவுதவி
மீதிலங்கு பல்கால நீள் விருப்பொடு வாழ்ந்து
காதன் மைந்தனைப் பூதலங் காத்திடப் பின்னர்ச்
சோதிதன் மலர்ச்சரோருகத் துணைப்பத மடைந்தான். (சச)

எண்ணரும் புகழ்ச்சுகீர்த்தி மன்னிடை மருவெய்தி
யண்ணலைப்பணிந் தெண்ணி யதனைடந்தவா றிசைத்தேம்
புண்ணியத்தனிக் காசிபனருந் தவம் புரிந்து
கண்ணனைக் கண்டிடப் பணிந்திடு காதையே மிசைப்பாம். (சரு)

சுகீர்த்தியன்சருக்கம் முற்றும்.

ஆக திருவிருத்தம்-[illegible].

உ

# காசிபச் சருக்கம்.

எழிலுறு பிரமர் பதின்மரி லொருவனெனப் புகழ்காசிப முனிவ
னழலுமிழ் திகிரிப் பொருபடை முகுந்தனையாதருஞ் சேரியிற் சிறிய
குழவியின் வடிவத் துடன் விளையாடக்கோகிலசீர்க் கோலமுன் னோக்கித்
தொழுதிடவேண்டுமெனவொருகருத்தொடர்ந்திடப்பற்பகல்கழித்து. ()

கனத்திடு தவஞ்செய் தன்றியவ்வுருவங் காண்பரிதாகு மத்தவமு
மினித்தடம்பொழில்சூழிடைமருதிடத்தினியற்றிடி னெல்லையிற்றோன்று
மெனக்குறித்தனைய தலத்தினைத் தெருசிற்றிடைப் பெருநலமுலையென்று
மனத்துடன்மருதநிழலுறைறையிறையையோர் பரைப்போற்றினன் பணிந்து.

பெருமகிழ் வெய்தி யானருட்செல்வம் பெற்றகன் றொருசிறை குறித்துக்
கருதியதியற்றத் திரைமணி கொழிக்குங் காவிரித் தண் புனலாடி
யுரிமையினியதி முடிப்பனமுடைசதாங் குறைந்தனை வொடுதுயிலகற்றி
யிரவுநன்பகலுங் கண்ணனைமனத்தி லிருத்திநோற்றிட்டனன் மன்னோ. ()

வண்ணநூபுரம் பட்டிகை யொளிர்தரள மாலிகை மகர குண்டலமேற்
றண்மணிச் சுடிகை சுடர்த்தொடி முதலாய்த் தரித்தொரு குழவியினுருவா
யொண்மதி வதன மிளநில வெறிப்ப வுரவிடை யசைத்தவ் வாகக்
கண்ணனம் முனிவன் கருதியாங்கே கண்ணுறத் தோன்றினன் மன்னோ.

கண்டனன் முனிவன் பணிந்தன னெழுந்தான் கருத்திலி லடங்கிடாமகிழ்ச்சி, கொண்டனனெனினியென் றனையொரு பொருளாக் கொண்டெழுந் தருளினை யென்னைப், பண்டருக்குறு கொடுபலத் துதித்தான் பங்கயக்கண்ணனுன் றவத்தால், விண்டிடி நிதியானை மிகமகிழ்ந்தேம் வேண்டியவரங்கள் கேளென்றான். (௫)

நந்தநந் தனதா மோதர முகுந்த நவிலுமிப் பதியுணீ யுறைந்து வந்துனைக்கண்டு பணிந்துளோர் துதித்தோர் மனத்தினைக் குறித்தவ ரெவர்க்குஞ், சிந்தையிலவர்கணினை திடுவரங்கள் சிறந்திட மகிழ்ந்திட வுடனே, தந்திட வேண்டுமென்றனன் முனிவன் சதுமுகன் முதலியோ ரறியாப் பான். (௬)

மெய்த்தவ முனிவ நாமுமீண் டுறைந்து மேலுள வரங்களு மளித்தே மித்தலம் போல்வ திசைத்திடி லுலகத்தில்லையி துண்மையா மறிவோம் நித்தனுண் மகிழ்வுற்றிருக்குமீண் டவனை நினைத்துமுன் னினைத் துணைவுறுமீ தயித்துணர்வோர்க்குப் புகலுநீயு முறைதக்கினை புரிகென்றான். (௭)

முனிவர விவ்வா றருள்விற்றிருக்கு முகுந்தனைப் பணிந்தருச்சனைசெய் தனையவனுரைத்த தன்பின்றெவர்க்கு மறைந்தெழுமின் மருதநாயகனைக் கனிவுறு மன்பினுலகெலா மிறைஞ்சிக் கதிபுறத்தானு மர்ச்சனைசெய் தினிதுறுவரம் பெற்றிருந்தனன் பன்னுளிசைக்குமத் தலத்தின் மாதவத்தீர்.

நீவிருமனைய விடைமருதடைந்து நிகழ்த்திடு மகப்பயிரியற்றின் மேவுறு பலன்மற நெறல்லையின் மிசவும் விளையுமின் பெய்தலாமென்னச் சேவலங்கொடியோன் முனிவர்களெவருந் தெளிவுறவுரைத்தனன் முனிவர் யாவருமகிழ்ந் தித்தலத்தினுக்கிணை வேறெங்கு மின்றெனப்பணிந் திசைத்தார். (௯)

மையறு குணத்துச் செழுந்தவ முனிவீர் மற்றினிச் சூரம் பிளந்த செய்யவேற்றடக்கைச் சரவணபவனுந் திகழ்வசிட்டாதி மாதவருஞ் சையமால் வரையினின் றிடைமருதிற் சார்ந்து செஞ்சடையிலிந்துடனே பையராப்புனைந்த மருதநாயகனைப் பணிந்தருச் சித்தவா றிசைப்பாம். (௧௦)

காசிபசச்சருக்கம் முற்றும்.

ஆகத் திருவிருத்தம்-௫௱௱.



௮

# குமாரபூசைச் சருக்கம்.

நாக நாடவர் போற்றிடை மாதடைந்து வளக்தரு மகம்புரி வதனுக்
கேகமாதவத்தோர்தன்விடைமேற்கொண்டெழுதலு மிலங்குவேற் குகனுந்
தோகை மேற்கொண் டாங்கெழுந்து விண்ணெறியாய்த் தொடரு மாதவ
ர்களுஞ்சூழ, நாக மென்பணி வோனுறை பதியிடையி னண்ணினர் பணிந்
தகன்றேகி. (க)

தனதெனப் புலவர் துதிபரங் குன்று தாவிலாவினன் குடிசெந்தூ
ரினமுகில் வதியும் பழமுதிர் சோலை யேரகப்பதி முதலான
கனமுறு தலங்க ளியாவையு மணைந்து காட்டமுன் பணிக்கினி தேத்தி
மனமகிழ் முனிவோர்க் கிடைமரு தெதிரோ வயங்கிடல் காண்மினென் றி
சைத்தான். (உ)

கண்டனர் சேணினேமிமால் வரை போற்கதித் தெழுபுரிசையி னழகுங்
கொண்டலூர்பொழிலு மாடநீ ணிரையுங் கோபுரத தெழிலு மாலயமு
மண்டு பேருவகை வாரியிற் படிந்தார் வணங்கினர் பரவச மடைந்தார்
விண்டனர்துதிகள்கண்டனரவரைவிடாதுகொண்டிடைமருதணைந்தான்.

சங்குலா மருதஞ் சூழிடை மருதிற் சார்ந்திறை பதாம் புயம்பணிந்து
கங்கையைக் குறித்தான் குறித்திடுமுன்னர்க் கதழ்வினி லெய்தினளவளைத்
திங்கள்சூ டிறையோற்காட்டுதற்பொருட்டுந் திளைப்பவர் பவந்தவிர்பொரு
ட்டு, மிங்குறைந் திடுக வென்றனனவளுமீ சனுக்கீசதிக் கமர்ந்தாள்.

அறைதரு மினிய புனிதநீ ரொடுத்தாங் காபிடேகமு மியற்றி
நறைவிரித் திடுபோ தாதியாலமலனலந்தரு சிவாகம விதியான்
முறையுயர் பூசைபுரிந்துளமகிழ்ந்தான் முனிவர்களிலங்கெழிற் பொன்னித்
துறையினுங் கங்கைப் புனலினு மற்றைத் தூயதீர்த்தத்தினுமாடி. (ரு)

கற்பனை கடந்த கருணைவாரிதியைக் கண்ணுதற்பொருப்பினைப்பொருப்பு
விற்பிடித் திடுநாட் பங்கயச் செங்கை விமலனை மருத நாயகனை
யற்புதத் தொடிக்கைப் பெரு நலமுலையை யைங்கரக் கடவுளைப்பணிந்து
சொற்படு மலரா லருச்சனை புரிந்து துதித்தன ளளவிலாத் துதிகள். (சு)

வெயில்விரி மணிப்பொற் சிங்கவா தனத்தின் மீது வீற்றிருந் திடுமொங்க
ளயிலுறு தடக்கைக் குமரநாயகன் றனடிமலர் பணிந் தருச்சித்தார்
பயிலுமஞ் செழுத்தைச் செபித்தனர் விதியிற் பரிவொடு மற்றதன் பின்
னோர், வயிலுறைந் தேவரும் வேண்டுவ கொண்டு மகமினி தியற்றினா
மன்னோ. (எ)

பன்னகம் புனைவோ னெல்லையிலிமயப்பாவையி னுடனடல் விடைமேல்
முன்னர் நின்றனன் கண்டிறைஞ்சினார் நீவிர்முன் வரங்கேண்மி னென்றி
சைத்தான், நின்னடித் துணையை மறந்திடா தென்றும் நியதியாயருச்சனை
செயவு, முன்னியபெறவு மருள்கெனப் பணிந்தார் முன்னவ னீந்தனன்
சரந்தான். (அ)

இவ்வரமேற்று மகிழ்ந்து மாதவர் களியாவரு முமையொரு புறத்து
நவ்வியங்கரத்தோன் பதசரோரு கதினொடொறு மருச்சனையியற்றி
யவ்வியற் றலத்தை யகன்றிடா துறைந்தா ரத்தலத் தணைந்திடப் பெற்ற
செவ்வியோர்கருத்து மற்றொரு தலத்துச் சென்றிடக்குறிக்குமோவம்மா.

இருந்திடுங் காலை மருதநாயகன் முன்னீந்தருள் வரத்தினெற்றுங்கள்
வருந்துத லின்றிச்சித்தி யோரொட்டு மனத்தினிற் குறித்தவை பிறவும்
பொருந்தினர்தமைவந் தடைந்துளோர் தமக்கும்புகழுறவுதவின ரொன்னத்
திருந்துறு தலத்து முனிவரர் தமக்குச் செப்பினன் சூதமா முனிவன்.(௰)

மாசறு தவத்தீர் முனிவரர் சூழ வானவர் மிடையிடை மருதுற்
றீசனை மருத நீழலினுறையு மிறைவனை யிலங்குவே லமலன்
பூசனை புரிந்த திறமிது மீதுபுக லுமையருளுருவாகித்
தேசுறு புகழ்க்கா ருண்ணிய தீர்த்தச் சிறப்பெடுத்தினி திசைத்திடுவோம்.

குமாரபூசைச்சருக்கம் முற்றும்.

ஆகு திருவிருத்தம். ருசச.



சிவமயம்.

# காருண்ணியாமிர்தச்சருக்கம்.

நவையறு தவத்துச் சூதமாமுனிவ னகைமுகப் பங்கய நோக்கிச்
சவுனகர் மொழிவார் † சையமால் விலங்கறன்னி னின்றுங் கணைமுனிவர்
பவமறு பொன்னி கங்கைபொன் கூபம் பரவு காருண்ணியதீர்த்த
மிவைகளின் மூழ்கி யேனையதீர்த்த மெவற்றினு மாடினமொன்றீர். (௧)

இன்னுமத்தலத்தி லெத்துணைத் தீர்த்த மிலங்கிடு மவற்றிட மியாவை
யன்னவை யமைத்தோரியாவ ரங்கவற்றினடி யின்புற்றவரியாவர்
பன்னுக வெனவே வணங்கலுஞ் சூதன்பகரு நல்விடை மருதினுக்கு
முன்னுநந் தெல்லை நான்கியோசனை யேன்மூன்றிற்கு மொவ்வொன்று
குறைவே. (௨)

திகழுறு மிருமுப்பத்து முக்கோடி தீர்த்தமு முறையுமந் நலந்திற்
பகரு மன்னவற்றுட் சில வெடுத்துரைப்பாம் பரவுகாருண்ணிய வமிர்தம்
புகழுறு மவைகளெவற்றினு மேலாய்ப் பொலிவுறு மதிற்கதி ரிரவி
தகமொனுமிராசி பொருந்து முற்பகலிற் றனிப்பகல் படிவது விசேடம் ()

மருமலர்த் தலையோன் றிருமகள் கொழுநன் வயங்குருத்திர னெனுமூவ
ருருவ மாமச்சு வத்தமந் தீர்த்தத் தோங்கு மீசானதிக் கிலங்கும்
பொருவிலன் னதையத்தீர்த்த முற்படிந்து புகழ்மதிவாரத்திற்காலை
வரு*தரிசத்திலேழ் வலம்புரியினுல கெலாம் வலம் புரிபலனும். (௪)

பன்னுநான் மறையை விடுத்திடுபவர் பரகதி யருளி லிங்கத்தைக்
கன்னியர்தமை விற்றவர் மதுவுண்டார் கருதிடு சிரார்த்தம் விட்டவர்கள்
பொன்முதற் களவுகொலை புரிந்திட்டோர் போற்றிடு குரவனை யிகழ்ந்தோர்
துன்னுமிக் கொடியோரியாரு மத்தீர்த்தந் தோய்ந்திடின் முத்த ராகுவரால்

அறைந்திடு பதினென்காய வித்தைகளு மகத்தினில விருறாடி மின்னும்
புறந்திகழ் செல்வ முதலவா மைசுவரியமுங் குறித்திடிற் பொருந்து
மறந்தரு பகையும் பிணிகளுநீங்கு மாறிலா வானுரு வெய்துஞ்
சிறந்தகாருணிய வமிர்தமா மதனிற் சென்றிவி தாடினர் தமக்கே. (௫)

---

†சகியம் என்பது-தென்மொழியில் சையம் என்றாயிற்று.

*தரிசம்—அமாவாசை. இத்திதியில் சூரிய சந்திரர்கள் ஒருங்கு கூடிவரக் காணப் பெறுதலின், அதற் கிப்பெயர் போந்த வாறுகாண்க. [திருச்=காண், பார்.]

மங்கல முறுகா ருண்ணிய வமிர்த வாவியிற் படிந்திடி னொருகாற்
றுங்கமா மினிய தீர்த்தங்க ளனைத்துந் தோய்ந்திடு பேறுவந் தெய்து [ள்
மங்கதி னொருகாற்றருப்பணஞ் செயினே ராண்டினிற் சார்பிதிர் தினங்க
பங்கமி லெண்ணூற் றுறிற்செய் சிரார்த்த பலன்கொடு பிதிர்களுண் மகி
ழ்வார். (எ)

அங்கதிற் படிந்து துயர்தொலைத் தின்ப மணைந்துளோர் தமிற்சில ரிசை
கங்கைநல் யமுனை தாமிர பன்னி காத்தியா யணிபுகழ் வாணி [ப்பாங்
துங்கபத் திரைகோ தாவிரி பவானி சோணையா தியநதி மின்னூர்
திங்கள்சூழ் சிகரக் கைலையங் கிரியிற் சென்றெதி ரிறைவனைப் பணிந்து.

அங்கணு கைலை யிறைவவிவ் வுலகோ ராற்றிடு பவமெலாம் படிவுற்
றெங்கள்பால் விடுத்துச் சேறலா லியாங்க ளெழில்குலைந் துடலெலாங் க
றுத்தே, மிங்கெமை யனைய கொடியதீ வினைவிட் டேகுமா றருள்புரி
கென்றூர், *சங்கர னெனுந்தன் பேரினுக் கிசையத் தற்பர னுளமகிழ் ந்தி
சைக்கும். (கூ)

பொன்னியின் றென்சார் வளரிடை மருதிற் போற்றுகா ருண்ணிய வமி
ர்தந், தன்னிடை மேட மதிமுத ளுளிற் சாற்றுகற் கடகமெய் திடுங்காற்
றுன்னின ரொருகாற் றோய்ந்தெழு ந்திடுமுன் றொல்வினைத் துடக்கெலா
மகலும், வன்னிமேற் படிந்த பஞ்சுபோற் கதிரோன் வருமுனந் தொலை
யிருட் கணம்போல். (க0)

நீயிரும ணைந்து படியினத் தினத்தி னீங்கிடும் பவக்குல மனைத்துந்
தூயரா குவிரென் றுரைத்தன னவர்க டொழுதறு விடைகொடு மீண்டு
மாயிருட் குலங்க ளெனப்படர்ந் தனைய மாதலத் திலங்குமத் தீர்த்த
மேயினூர் படிந்தார் படியுமுற் படிந்த வினைக்குல மனைத்துமாய்ந் தனவே

இரும்பினுக் கிரத குளிகையின் றுடக்க மெய்திடப் பசும்பொனு மது
போற், பெரும்புன லதனிற் படிதலும் வினைபோய்ப் பேரொழி லடைந்தது
நோக்கி, யரும்புகழ்த் தீர்த்த மடந்தையர் மகிழ்வுற் றணியிடை மருதின்
வீற் றிருக்குஞ், சுரும்புறு கடுக்கை புனைபரஞ் சுடரைத் தொழுதுதோத்
திரம்பல விசைத்து. (கஉ)

அவரவ ரிருக்கு மிடங்களி னணைவுற் றன்றுதொட் டாண்டினுக் கொரு
கா, னவிலுறு மேட மதிமுதற் பகலி னண்ணியாண் டனையதீர்த் தத்தி
னுவகையி னேடும் படிந்தது காறு முற்றிடி கொடியதீ வினையுங்
கவலையு மகற்றி வருவரிவ் வாறு களிப்புறப் பயின்றிடுங் காலை (கங)

---

* சங்கரன்=சிவன். தன்னை வழிபட்ட ஆன்மாக்களுக்குச் சுகத்
தைச் செய்பவன். [சம்=சுகம், கரன்=செய்பவன்.]

வேறு.

வட்ட வார்சட லகழியும் வான்றொடு மதிலு
மட்டு லாமலர்ப் பொழிலுஞ்சூழ் மிதிலையில் வாழ்வோ
னட்ட மூர்த்திபா லன்பினோ னுலகினி னாள்வோ
னிட்ட ரோமனென் றிசைத்திடு மியற்பெய ருடையோன் (கச)

அரிய கேள்விய னுளனொரு காவல னவனுக்
குரிய காதலி பெயரினைச் சுகேசியென் றுரைப்பர்
தெரியு மன்னவள் வனப்பினிற் றிருவினிற் சிறந்தாள்
பரிவி னோங்குகற் பினிலருந் ததியெனப் படுவாள். (கரு)

அந்த மாதுட னிடுநா ளின்புறு மனையான்
மைந்த ரின்மையா னென்செய்வா மெனமனம் வருந்திச்
சந்த நான்மறை யறைந்திடு தானங்க ளநந்த
முந்தி யற்றினன் பற்பல தருமமு முயன்றான். (கசு)

மதங்க ளிந்திடு களிற்றவ னிங்ஙனம் வளர்நா
ளுதங்க னென்றொரு முனிவர னவனிடந் தூற்று
னிதங்க லந்திடு மொழியவ னெழுந்தவன் கமல
பதங்க ளிற்பணிந் தியான்செயும் பணியெனை யென்றான். (கஎ)

எண்ணு றும்பல தருமமீ யிழைத்தல் கேட்டுன்னைக்
கண்ணி நோக்கிட வந்தனங் காதலி னீண்டுப்
பண்ணு கின்றன மொருமக மதற்குநின் பாங்கர்
நண்ணு றும்பொருள் களிற்சில நல்குக வேண்டின். (கஅ)

அறத்தின் மேலனீ யாதலி னவற்றையா மேற்றுத்
திறத்தி னாற்றுமவ் வேள்வியிற் செலுத்துது மென்ன
மறத்தி னீங்கிய மாதவ னிசைத்தனன் மன்னன்
குறித்தி டும்பொரு ளலகில பரிவொடுங் கொடுத்து. (கசு)

எளிய னென்றனை மகவிலாத் துயரமொன் றெய்தித்
தளர்வு செய்கின்ற தன்னது தனக்கொரு தளர்வின்
டளிமி குந்திடு முனிவர விளத்தியென் றறைந்தான்
களமி டற்றவன் றனைநினைந் தம்முனி கழறும். (உ0)

அருணை வண்பதி திருவையா றணிகொள் மாயூர
மருள கற்றெழு முனித்தலம் வளரிடை மருதூற்
றுருவ நீடியர் புனல்படிந் துருத்திரற் கிலக்கந்
தருண வில்வமுந் *துரோணமும் பணிந்தெதிர் சாத்தில். (உக)

* துரோணம்=தும்பை, திரு-என்னும் முதனிலைக்குக் கொல்,

சேயு திக்திடு மவற்றினிற் றிருவிடை மருதி
னேயும் வல்லையி னித்திற பத்தலத் தியற்றி
போய கன்னனுந் தசரத வேந்தனு முன்னாட்
டேய மைந்தனைப் பயந்தனர் சோதிதன் னருளால். (உ௪)

அத்த லங்களி னீயுமுற் றூற்றி னிவ்வாறு
புத்தி ரற்பெறு குவையென முனிவரன் போந்தான்
முத்த மூரலொண் மனையொடு முனையடு மாசன்
சுத்த நீடுறு மருதமுன் றன்கினுஞ் சூழ்ந்து. (உ௫)

இனிய தீர்த்தங்கள் படிந்தரு ளீசனை யிறைஞ்சி
வினைய கற்றுறு சிவார்ச்சனை விதிப்படி யியற்றி
யனைய மாதலங் களிற்சில வைகலன் கடந்து
தனைநி கர்த்திலங் கிடைமரு தெனும்பதி சார்ந்தான் (உ௬)

சார்ந்து காருணி யாமிரு தத்தடம் படிந்து
வாய்ந்த சிற்றிடை யுடைப்பெரு நலமுலை மனையாற்
சூழ்ந்தி றைஞ்சினின் றருச்சனை தலங்கிடப் புரிவுற்
றேந்துநல்லெழின் மனையொன்றி விருந்தனன்மகிழ்ந்து. (உ௫)

விருப்பினோ டங்குச் சிலபகல் மேவுமுன் மனைவி
கருப்ப மெய்தின ளனையதோர் தகமிகக் களித்துப்
பொருப்பு வின்மரு தீசன்பான் மிகுமன்பு பூண்டான்
மருப்ப யின்றிடு கோதையும் மகவினைப் பயந்தாள். (உ௯)

கருது மைந்தனைக் காதன்மீ தூர்ந்திடக் கண்டான்
பிருது கீர்த்தியென் றொருதனிப் பெயரினி தளித்தே
மருத நாயகற் களவில்பொன் வழங்கிநற் கதிரோன்
றருதி னம்பல சென்றபின் சார்ந்தனன் மிதிலை. (உ௭)

---

ஹ்ரிம்சி என்னும் அர்த்தமுன்மையால் அம்முதனிலையினின்றுந் தோன்றிய துரோணை என்னும் இப்பதத்திற்கு, இதன் இலை உரக கீடவிஷம், சிலேஷ்ம சந்நி, வாதம், சுபம், அக்கினிமந்தம், சிரநோய்களையும், இதன் புஷ்பம் தாகரோகம், சந்நிபாத சுரம், நேத்திர ரோகங்களையும் நீக்குதலான், நோய்களை நீக்குவது என்பது பொருளாதல் அறிக. இன்னும், தும்பை தன் பூவை யெடுத்துச் சிவபிரானைப் பூசித்த ஆன்மாக்களது பாபங்களை நீக்குதலின் அப்பெயருடைத்தாயிற் றெனவும் உணர்க. வில-என்னும் முதனிலைக்குப்பேதி, பிரி என்னும் அர்த்தமுன்மையான், அதினின்றுந் தோன்றிய வில்வம் என்னும் பதத்திற்குத் தன்னை யுண்டவர்களுடைய மேகம் குட்டம் முதலாகிய நோயை அவரினின்றும் பிரித்துவிடுவது என்றும், தன்னைப்பூசித்தவருடைய பாவத்தை அல்லது தன்பத்திரத்தை எடுத்துச் சிவபிரானைப் பூசித்தவருடைய பாபத்தை அவரினின்றும் பிரித்து விடுவது என்றும் பொருளாதல் போல வெனக.

மிதிலை யுற்றினி திருக்குநாள் விளங்கிளம் பிறைபோற்
புதல்வ ரோருங்கியென் ணிரண்டெனும் பருவமுன் பொருந்த
பதிய மைச்சரோ டொருதினஞ் சூழ்ந்துதன் மகற்குக்
கதுமெனச்செய வேண்டிநற் கடிமணமென்ன. (௨௮)

தேறு மந்திரத் தலைவரு முளத்தினிற் றேர்ந்து
கூறு வாணிந்த வரசிளங் குமரனுக் கேற்ப
வேறு கண்டிலன் சுபாங்கியென் றொருகொடி மேவு
மாறில் வண்புகழ்க காசிமன் னவன்மகண் மன்றோ. (௨௯)

அனையள் கண்ணுருச் சுயம்வரம் வரிர்திடு மாங்குன்
றனைய ரோடுநீ யுறினவன் றனியெழி லேக்கிப்
புனைவள் பூத்தொடை மகிழ்ந்தெனப் புகன்றன னிருப
னினைய தேசெய லென்றவ்வா றேகின னன்றே (௩௦)

காசி மன்னவ னிவன்வர வுணர்ந்தெதிர் காணு
வாச முற்றிட வசதியும் வரிசையு மளித்தான்
பேசி யுற்றதன் செயலவண் பெரிதிருந் திடுநாண்
மாசில் செங்கதி ரோறினன் மறியதன் மீது. (௩௧)

ஆய புண்ணிய தினத்தினிற் கங்கையி னாடிச்
சாயன் மன்னவன் சிலரொடுங் கரையிடைச் சார்ந்தான்
போயி றங்கினன் றனிமையிற் புரவலன் புதல்வன்
மேய நற்பொழு தேகின்ற தென்றுபின் விரைந்து. (௩௨)

மூர்ந்து மன்பொடு மூழ்கினன் மூழ்கலுங் கங்கை
பந்த பாசநீக் கிடைமரு தருட்புனல் படிவா
னந்தர் வாகினி யாய்விரைந் தவனொடுஞ் சென்று
ளந்த வாவியி லெழுந்தன னங்குமூழ் கினன்போல். (௩௩)

மிகவு நீடெழி லெய்திவன் கரையிடை மேவிச்
சகம ளந்திடு தவளமால் விடைமிசைத் தயங்கும்
பகவ னின்னருட் டிருவடி பணிந்தவற் றுதித்து
மகிழ்வு றீஇயெதிர் நின்றனன் மன்னவர் வியப்ப (௩௪)

---

* பகவன்=சிவன். ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறிற்கும் பகம் என்னும் பெயருண்மையின், அவ்வாறினையும் உடையர் என்பது அப்பகவன் என்னும் பெயருக்கு அர்த்தமாதல் அறிக.

காம னேயிவ னெனச்சொல்வார் காமரு மென்னிற்
பூமன் வார்சிலை கொளுமஃ தின்மையாற் போதின்
மாமனே யெனக் கூறுவா ரவனெனின் மலர்க்கை
நேமி யுற்றிடு மென்பர்மற் றியாரென நினைவார் (௧௫)

இந்த நீர்மையிற் சிலருறச் சிலரரு கெய்தி
யெந்த வூருனக் கென்றன ரிலங்குமப் பதியின்
முந்து தித்ததூஉ மகன்றதூஉம் பகீரதி மூழ்கி
வந்து வாவியி னெழுந்ததூஉம் வகைப்படச்சொன்னான். (௧௬)

சென்னி யித்திற முணர்ந்துறு சிறுவனைக் கூவித்
தன்னி லுற்றிட விருத்தின னங்கவன் றுரைத
மன்னு கங்கையின் மூழ்கிய மகனெழுந் திலனென்
றின்னல் வாரியின் மூழ்கினா னிரங்கிமெய் பதைத்து. (௧௭)

தேடு வான்விரைந் தநேகரை விடுதலுஞ் சென்று
நாடு மன்னவர் பாதலத் தளவுமுன் றேடி
வாடி வந்தன ரதுகண்டிம் மடுவிடை நாளுங்
கூட வீழ்வனென் றெழுந்தனன் குறிக்கு மப்போது. (௧௮)

வேறு.

நீதுயர் தவிர்தி மன்னநின் புதல்வ னிலவுசீ ரிடைமரு திடத்து
மாதனித் தீர்த்த மாடுதற் கேகும் வளர்புகழ்க் கங்கைதன் னுடனே
பாதல நெறிக்கொண் டேகின னங்குப் படர்ந்திடிற் காணலா மென்ன
மீதலத் திறையோ னருளினா லெவரும் வியப்புற வெழுந்ததோர் வாக்கு.

எழுதரு மொழிதன் செவிப்புகுந் திடலு மிருகரங் குவித்துள மகிழ்ந்து
செழு நகர்க் காசிப் புரவலன் றனக்குச் சென்றுவந் திடுதுமென் றுரைத்
துத், தழுவுறுசேனை யொடுஞ்சில பகலிற் *சயிலமா தியவெலாங் கடந்து
பொழில்புடை யோங்கு திருவிடை மருதிற் பொருந்தினன் புதல்வனை.
கண்டான். (௨௦)

தன்னெதி ரணைந்து பணிந்திடு மகனைத் தடக்கையா லெடுத்துமார் பணை
த்து, வன்னியிற் படிந்த மெழுகினுள்ளுருகி மற்றவன் றனைப்பிரிந் ததனாற்
றுன்னிய துயரு மவனிடத் தன்புந் துலங்கிட வெளிப்படு கின்ற,
தென்னநீ ணயனபங்கயங்களினின்றெழுந்திடுபுனலின்மூழ்குவித்தான். ()

வளவனுங் கணைந்து தேற்றிடத் தெளிந்து மகிழ்ந்துபின் மகனொடு மேகி
யளவில்சீ ருறுகா ருண்ணிய வமிர்த மணைந்துதோய்ந் தியற்றிநன்னியமங்
கிளர்வுறு மணிப்பொற் கோயிலு ளெய்திக் கீற்றிளம்பிறைநறுங்கண்ணி
யொளிர்சடை மருத நாயகன் பாத வுபயபங் கயம்பணிந் தெழுந்து. ()

---

*சைலம்=மலை. சிலையால் ஆயது. [ சிலை=கல். ]

வேறு.

அன்றுனைப் பிரிந்த பின்னு னம்புய மலர்த்தா டன்னை
யொன்றுசிற் றறிவு தன்னு லுன்னல ளுகி யாங்கு
நின்றவென் னிலைமை கண்டு நினைவுதந் தருளாற் கூவி
யின்றெதிர் காட்சி தந்த விடைமரு திறைவ போற்றி. (௪௩)

மருவிடை மலர்த்தண் கொன்றை மதிவளர் சடைய போற்றி
கருவிடைப் புகாம லென்னைக் காத்தருள் கடவுள் போற்றி
பொருவிடை யூர்தி போற்றி பூரண புராண போற்றி
திருவிடை மருதில் வாழுஞ் செய்யபொற் சோதி போற்றி. (௪௪)

என்னநின் றேத்துங் காலை யீசனு காச வாக்கான்
மின்னுவேன் மன்ன நம்பால் வேண்டுக வரங்க ளென்றான்
மன்னனின் பதத்தை யென்று மறந்திடா மனமு மன்புந்
துன்னுறத் தருக வென்றான் சோதியு மவற்க ளித்தான். (௪௫)

தகர்மதிப் பிறப்பி லீசன் றனக்கெழில் விழாவுஞ் செய்தாங்
ககமகிழ் மணிப்பூண் செம்பொ னளவில வுதவி செய்து
பகருட் டீர்த்தஞ் சூழப் படித்துறை யமைத்துப் பின்னர்
மகனொடு மகிழ்ச்சி கூரு மன்னவன் மிதிலை யுற்றான். (௪௬)

அங்கவன் வார ணுசி யடைந்தநா ளவன்றன் மைந்தன்
பொங்கெழி லினிது கண்ட புரவலன் புதல்வி யன்று
னிங்குவந் துற்ற பின்ன ரியானவன் றனக்கே வேய்வன்
கொங்கலர் தெரிய லென்னக் கூறின ளிருந்தா ளன்றே. (௪எ)

உற்றிடத் தீர்த்த மெய்தி யோங்கெழி லடைந்து கன்னல்
விற்றனிக் காளை யென்ன விளங்கிடு மகனே டோங்கு
கொற்றவன் வந்த செய்தி குலவுறு மொற்றர் கூறக்
கற்றவர் புகழுங் காசிக் காவல னுவகை யெய்தி. (௪அ)

கதுமெனப் புதல்விக் கோதி மற்றவள் களிப்பு நோக்கிப்
புதுமண வோலை திட்டிப் பொலிவுறு மிதிலைக் கேவி
விதுமுக மருகன் றன்னை மேவுற வழைந்து நன்கு
மதுமலர்க் கோதை தன்னை மணம்புரிந் தளித்தான் மன்னே. (௪௯)

இன்னுமித் திறமத் தீர்த்தத் திடைப்படிந் தெண்ணி லார்கண்
மன்னிய துயர நீக்கி மனத்தினிற் குறித்த வெல்லாந்
துன்னினர் பெரிதும் மீது சொல்லுதும் பானதீர்த்த
மென்னவோர் தீர்த்த மாங்கே யிலங்கிடு மதன்றன் மேன்மை. (௫0)

காருண்ணியா மிர்தச்சருக்கம் முற்றும்.



சிவமயம்.

# பாணதீர்த்தச் சருக்கம்.

வாணி நாயகன் முதலினோர் வணங்கிடை மருதந்
தாணு வின்வட கீழ்த்திசைத் தங்குமோர் தீர்த்த
நீணி லத்தரு விற்கிடை நிகழ்த்துமீ ரெட்டிற்
பாண தீர்த்தமென் றதன்பெய ருலகெலாம் பரவும். (௧)

தெரிக்கு மப்பெரு வாவியின் றேவதை யிராமன்
விரிக்கு நீழலோ ரரசதன் றனையுடை போலும்
பரிக்கு மன்னனைச் சூரம் பிளந்தவேற் படையோன்
றரிக்கு மந்நடந் தருகினில் வசிட்டனுந் தவத்தோன். (௨)

தண்ட கத்தனி வனத்திடைச் சார்ந்தெழி லிராமன்
பண்டு சஞ்சரிப் பவனொரு பகலிறுங் கடைநாள்
கண்டி லன்புன லருந்திய மஞ்செடக் கையின்
வண்டு தன்னையன் விடுத்தனன் மலர்ந்த†பூமேல். (௩)

அங்க ணீடொரு வாவியா மதனிடை நின்றும்
பொங்கு தண்புன லெழுந்தது பொருந்துமப் புனலின்
மங்க லம்பெறப் படிந்தன னியமங்கண் மற்றும்
பங்க மின்றிநன் கியற்றினன் பரிந்தனன் பின்னர். (௪)

அரசு நீழலுற் றிருந்தன னிருந்திடு மமையத்
துரைசெ யுங்கணை வடிவதா யநாதியா யொளிரும்
பரசி வன்றனைக் கண்டனன் பகரின் வடபால்
விரைசெய் தண்மலர் மருவுற விளங்கொரு தருக்கீழ். (௫)

எழுந்து சென்றனன் பரிவொடும் விரைவொடு மெதிரே
விழுந்து மெய்யுறப் பணிந்தனன் விளம்புதன் கணைசெய்
யழுந்து நீர்கொடு மகிழ்வுட னாட்டினன் கிடைத்த
செழுந்தண் கூவிள மாதிகொண் டருச்சனை செய்தான். (௬)

மேற்றி சைத்திரு முகத்தினின் றித்திறம் விளைத்திட்
டேற்று வெல்கொடிப் பரமனை யிடைமரு திறைவ
தோற்றி யிங்கெனக் குணர்வுறந் தனையெனத் துலங்கப்
போற்றி செய்தனன் செய்துமே லின்னன புகலும் (௭)

* வண்டு=பாணம். † பூ=பூமி.

நீடு வாளியிற் செய்திடு நிமித்தினு னிதனுக்
கீடு மன்னுறப் பாணதீர்த் தப்பெய ரியையுங்
கூடு மன்புட னிதனிடைக் குறுகியா டினர்க
ளாட கத்திரு நாட்டினி லமரரா யவிர்வார். (அ)

இடப மாமதிப் பூரணை யினிலிதின் மூழ்கிப்
படவ ராவணி யித்தனிப் பரமனைப் பணிந்தோர்
திடம தாயுறு மனமுற லருச்சனை செய்தோர்
நடமி யைந்திடு சிவபத நண்ணியின் புறுவார். (௯)

என்று நீடிய வரங்கொடுத் தெழிலருட் புனலிற்
சென்று மூழ்கிமா மருகநன் சிறுவிடைத் திகழுங்
குன்ற வில்லியைப் பணிந்தவ னருளுநீ இக் குலவு
மன்ற *லஞ்சரோ ருகபத மனநிறீஇ யகன்றான். (௧௦)

அனைய னாக்கிய பாணதீர்த் தந்தனி லமரடி
யினிய பாறயிர் நெய்பசு வேதியர்க் கிதால்
வினைகள் யாவையு மகன்றிடும் விளங்கவங் கிருந்து
மனதி லைந்தெழுத் தெண்ணிடின் மருவுநீ டின்பம். (௧௧)

சாற்றி டன்னதிற் றிலங்கொடு தருப்பண மியற்றி
லாற்ற லுற்றிடு கயைதனி லாற்றுமப் பலனும்
போற்றி டன்னதா மத்தடம் பொருந்திய வேற்ற
மேற்ப ராசர தீர்த்தமான் மியமெடுத் திசைப்பாம். (௧௨)

பாணதீர்த்தச்சருக்க முற்றும்.

——):◡:*:◡:(——

உ

சிவமயம்

# பராசரச் சருக்கம்.

வசையில் காருணி யாமிரு தத்தினோர் வடகீழ்த்
திசையி னோர்கணை வீழ்ந்திடு சேய்த்தினோர் தீர்த்த
மிசை வளர்த்திடு பராசர தீர்த்தமென் றிலங்கும்
விசைகொள் வின்மதி மூழ்குதல் விசேடமா மதனில். (௧)

*சரோருகம்=தாமரை. [ஸரஸ்=தடாகம், ருக்=முளை, வளர்.] எனவே தடாகத்தில் முளைப்பது என்க.

வாயு தேவன்மற் றதற்குறு தேவதை மருங்கின்
மீயு யர்ந்துநின் றிலங்குமோர் வேம்பெனுந் தாரு
மேய தன்புடைக் கண்ணுவ முனிவரன் விளங்குங்
காயுஞ் சூற்படை வயிரவ னதைநிருங் காப்போன். (௨)

பொலிவு மன்னதிற் படிந்தவர் புகார் நமக்குத்
திலை வெந்திடிற் றேனமாய்ச் சீரை யகலுங்
குலவு சில்பக லதன்புடை யெதிர்ந்திடிற் கூரு
மேலிவு நீங்கிடும் புனிதமெய் திருமண மிகவும். (௩)

அன்ன தாகிய தீர்த்தமா புரத்ததா யவிருந்
துன்ன திற்படிந் தநேகர்கள் பழவினை தொலைத்தோ
ருன்னு மற்றதைப் பராசர தீர்த்தமென் றுரைத்த
தென்ன காரணத் தாலெனி லஃதெடுத் திசைப்பாம். (௪)

முச்ச கந்திரி புகழுறு பராசர முநிவன்
கச்ச கந்திக ழிளமுலைப் பணிமொழிக் கனிவாய்
மச்ச கந்தியைப் புணர்ந்ததின் வருந்தவ றகற்ற
நச்ச கந்தினம் விளைத்திட நாள்பல கழித்து. (௫)

ஓது மோர்பக லெதிர்ப்படு முரோமச முநிவன்
பாத பங்கயம் பணிந்தெழுந் தன்பொடு பகரு
மாத வத்தனி மேருவே மறையினு கரமே
சோதி தன்னருட் கிரியனே யெனப்பல துதித்து. (௬)

பன்னு தெண்டிரைப் பரவைசூழ் பாருலகிதனுண்
மன்னு புல்லறி வுற்றிடு மனுளர்நெஞ் சென்னுந்
துன்னு மீனினங் களைக்கவர் தொடர்வலை யன்றோ
கன்னன் மென்மொழிப் பொன்னனார் கதிர்முக வலயம். (௭)

*ஊழி னிற்பெரு வலியுள யாவைமற் றொன்று
சூழி னும்மஃ ததற்குமுன் றோன்றிடு மனறே
யேழை யேனெழின் மச்சகந் தியினிடத் தின்பம்
வீழ லுற்றன னதனைமுன் விலக்கில துள்ளம். (௮)

அன்ன தன்பினீண் டதைக்குறித் தருவருப் பெய்தி
யின்ன லுற்றிடு கின்றநி யானுமத் துன்பந்
தன்னின் மூழ்கினேன் புகலுமிக் கொடுந்துயர் தவிர்தற்
கென்னை செய்குவ னென்றன னுரோமச னியம்பும். (௯)

---

*திருவள்ளுவர் குறள். ௩௮-ம் அதிகாரம்,-ஊழ்.
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

## வேறு.

தேறுபொற் பணிகளுந் திகழு மாடையு
மாறிடப் பிரித்திடின் மாத வொன்றிடல்
கூறிடு மலப்புழுக் குரம்பை யேயலால்
வேறுறக் கண்டதென் விளம்பு காலையில். (௧௦)

தோலிது நரம்பிது சோரி நீரிது
கோலுறு தசையிது குடர்மற் றீதென
வேலுறச் சிலபக லெண்ணும் போதினின்
வேல்விழி மகளிர்பால் வேட்கை நீங்குமால். (௧௧)

திருவுறு மகளிர்பால் வேட்கை சேர்ந்திடின்
மருவிடும் வீடெனு மருவு போதினும்
பாசிவந் திடைமனம் பற்றி நிற்பினு
மிருவினை சமனுறு மெனினு மெய்திடும். (௧௨)

நிலைபெறு பரத்திடை நிலவு நெஞ்சனை
யுலகினி லவர்செயும் வினைவந் தொன்றிடா
வலியுறு மந்திர மருந்து வல்லனை
நலிவுசெய் திடுங்கொலோ நஞ்சுந் தீவிடம். (௧௩)

தூயவ நின்மனந் தொடர்ந்து நிற்றலிற்
றீயது நின்னையுஞ் சேர்ந்தி டாதினி
யாயினுஞ் சபலநீ யடைந்த தன்மையான்
மேயது போம்வழி விளம்பு வாமரோ. (௧௪)

இனிதரு ளிடைமரு தடைவுற் றெண்ணில்சீர்க்
கனகதீர்த் தத்தினிற் கலந்து மூழ்கியே
புனிதநீர் வேணியற் பணிந்து போற்றிடிற்
றுனிதவிர்ந் துன்மனஞ் சுத்தி யெய்திடும். (௧௫)

என்றுநீ டருளொடு மினிதி யம்பினா
னன்றென விடைகொடு நவில்ப ராசரன்
சென்றுயர் முனிவரர் சிலவர் சூழுறத்
துன்றெழி லிடைமரு திடத்திற் றுன்னினான். (௧௬)

கலந்துறு வளமெலாங் கண்ணி னோக்கினா
னலந்தரு பொன்னியி னண்ணி யாடினா
னிலங்கருள் வாவியு மெழில்கொள் பொன்னெனத்
துலங்குறு வாவியுந் தொடர்ந்து மூழ்கினான். (௧௭)

மருதிறை யவனடி வணங்கி யேத்தினன்
பெரிதுகந் தேகினன் பிறங்கு மத்தடத்
தருகினிற் சிலபக லமர்ந்தி ருந்துதன்
கருதுநன் மனத்துறு கலக்கந் தீர்ந்தனன். (கஅ)

வேறு.

கனகமா தீர்த்தந் தோய்ந்து கடுவினைதொலைத்தோம் வேளை
முனிபரற் பணிந்து மேலா மொழியவன் கருணை பெற்றே
மினையசீர்த் தடத்தின் பாங்க ரிருந்தகத் தூய்மை யுற்றே
மெனநினைந் தனைப் பின்னு மெழில்பெறத் திருத்து வித்தான். (கசு)

பகருமந் நிமித்தந் தன்னாற் பராசர தீர்த்த மென்னப்
புகழுறு மினிய நாமம் பொருந்திய தினிவெம் பாவத்
துகளறு சோம தீர்த்த மான்மியந் தொடங்கு கின்றோந்
திகழுறு முமையாள் பங்கன் சேவடிக் கன்பு மிக்கீர். (உ0)

பராசரச் சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# சோமதீர்த்தச் சருக்கம்.

இந்தி ரன்முதற் கடவுள ரிசைபெறு குரவன்
சந்தி ரன்றனை யடைந்தெதிர் தாழ்ந்தினி தேத்தித்
தந்தி ரஞ்சில வுணரநீ தருகெனக் கென்ன
முந்தி ரந்திட வினிதென மொழிந்திடு நாளில் (க)

காரை யந்தரத் தலைத்திடு கருங்குழற் பசும்பொற்
றேரை யச்சுறுத் தல்குலா டிகழவன் மனைவி
தாரை யென்பவள் கன்னலந் *தனுத்தனு வில்லோன்
போரை யாற்றிட வல்லிலாண் மிகுமயல் பூண்டு (உ)

அனுதி னந்தரு பழக்கமு மிகுந்திடு மழகு
மினிது மேவுசந் திரனிடத் தியன்றனைக் கொடுநா

*தனு என்னும் பதங்களுள் முன்னது வில் எனவும், பின்னது சரீரம் எனவும், பாணங்களைப் போஷிலுதலும் உணவு முதலியவற்றாற் பெருத்தலினாலும் வில்லிற்குஞ் சரீரத்திற்கும் அப்பெயர்கள் ஆயின எனவும் உணர்க. [தனு=எதிரில் வீசு அல்லது போடு. தனு=விஸ்தாரமாக்கு அல்லது பரப்பு]

மலைய மாரனை வேறுமென் றவன்றனை யழைப்பான்
றுனிகொ ணெஞ்சினுக் கிசைத்துமுன் விடுத்தன னே. (௩)

மேவு மன்புறு தாதையே யாயினும் விளம்புந்
தாவில் காதல ராயினுஞ் சகோதர ரெனினும்
யாவ ராயினு மிளமையு மெழிலுமெய் தினோற்
பாவை மார்மன மவரிடைப் படர்ந்திடு மன்றே. (௪)

விகுதி முன்னிடை நிலைமுத லவற்றொடு மேவப்
பகுதி யின்பொரு ளதனிடத் தவாவுறு பரிசிற்
றொகுதி யுற்றிடு பூண்முலை தொடர்ந்திட மயங்கி
மிகு திடத்துறு முளத்தசந் திரனுமே வினனே. (௫)

கலக வேல்விழி யவர்முகங் காணினு மவர்க
ளிலகு தீஞ்சொல்கேட் பினுமவர் தம்மையெண் ணிடினு
முலகி லாடவர் மனமுரு கிடுமெனி லுவகோ
வலிமை செய்திழுத் திடினவர் மறுத்திட வல்லார். (௬)

முத்த மூரலின் மயற்கடன் மூழ்கிநீ டின்பந்
துய்த்த னன்னுளந் தேறினான் சூழ்ந்துபின் னவளை
யுய்த்த காதலிற் கொண்டுதன் னுலகினி லேகி
வைத்த னன்னினி திருந்தனன் மருவினான் மகிழ்ச்சி. (௭)

அன்ன தோர்ந்துட னெழுந்துசூ ழமரர்க ளோடு
பொன்னும் வெள்ளியுஞ் சதமகன் கொலுவினிற் போகி
மன்னு மித்திறம் புகன்றனர் மற்றவன் வெகுளுற்
றென்னை செய்தன னவன்றனை யழைமினென் றிசைத்து. (௮)

தேவர் கூவிட வெதிருறு திங்களை நோக்கி
யாவரும் பணிந் திடத்தகு குரவனுக் கிசைந்த
பாவை தன்னைநீ விரும்புதல் பான்மையோ விங்குன்
றாவ றன்னையு மவளையும் விடுகென வறைந்தான். (௯)

பற்று பாவமும் பகையொடு பழியுமக் களங்கன்
சற்று மோர்ந்திலன் செருக்கினாற் றழீஇயவெங் காமங்
குற்ற மேற்றிடு மதுவினுங் கொடியதை யன்றோ
மற்றெ னக்கவ டனைவிட மனமிலை யென்றான். (௧௦)

அந்த வாசகங் கேட்டலு மமரர்க ளெவரு
மிந்தி ரன்றமக் கிசைத்திடு மேவலுஞ் சினமு
முந்து றப்படை கொடுசமர் செய்திட முன்னிச்
சந்தி ரன்றனை வளைந்தனர் பரிதிபோற் சார்ந்து. (௧௧)

நின்ற சந்திரன் றன்புடை நிகழ்பரி சனமுந்
துன்று மற்றுள படைகளுஞ் சூழ்ந்திடத் தானுங்
கன்றி முன்னுற வெதிர்த்தனன் கலந்திரு படையு
மொன்று வானவ வீரரு மெதிரெதி ருற்று. (௧௨)

தேரி லேறியும் விமானமேற் றிகழுற நின்றும்
வார்வி லம்புவாள் வேல்கதை மழுவெழுத் திகிரி
கூர்கொண் டாத்தலைச் சூலமா தியபடை கொண்டு
போரி யற்றின ரார்ப்பொடு புணரியோ ரிரண்டின். (௧௩) *

விண்ண திர்ந்தது திகாந்தமு மதிர்ந்தது விளங்கு
மண்ண திர்ந்தது பாதல மதிர்ந்தது மற்றும்
நண்ணு மித்திற மதிர்ந்திடு வேலையி னதிரு
டன்ன லுந்திரு மாலுநான் முகனுமாங் கணைந்தார். (௧௪)

அரனரு ளேவ றன்னு லரவிந்த னருகி னெய்தி
யிருவர்தம் போரு மாற்றி யிந்துவைச் சினத்தி னோக்கி
வருதிவெண் மதியை நீயோர் மதியிலா தீதனைச் செய்தாய்
குருவினி லவண்மேற் காதல் கொள்வரோ வறிஞ ரன்றே. ()

அவடனை யினிமேலேனும் விடுதியென் றறைந்தா னல்லோன்
சவலமீ தூர வந்தத் தாரைதன் காத லாலே
பவமொடு பழியும் வந்து பலித்தன பலித்த போலுங்
கவலையென்னினியோர்பேச்சுங்கைவிடேனவளையென்றான். ()

அந்தணன் பின்னுந் தக்க னாற்றிய வேள்வி தன்னின்
முந்துநீ பட்ட பாடு முழுவது மறந்தாய் கொல்லோ
வந்தது நாமிங் குன்பால் வள்ளலே வலினா லன்றோ
தந்திடா யெனிலன் னாளைச் சபிக்குது முன்னை யென்றான். ()

அயனிது கூறவஞ்சி விடுத்தன னவளை யல்லோன்
வயினுறு கருவினோடு நாணொடு வயங்கு மன்னாள்
பயிலுறு *குருவின் முன்போய் நின்றனள் பார்த்திட் டன்னா
னியல்பிதோ மாதர்க்கென்னக் கொடுமொழி பலவு மீந்தான். ()

வெகுளலும் பயந்து நாணி விதிர்ப்புற வொதுங்கி நின்றான்
மகவினை யுயிர்த்தாண் மற்றம் மகவினை மகிழ்வி னோடுந்
திகழுறு கலையி னானென் சிறுவனென் றெடுக்க வந்தான்
றகவுறு குருவு மென்றன் றநயனென் றுரைத்துச் சார்ந்தான். ()

*குரு=சுராசாரியன். [இரு=சப்தி, பேசு.] எனவே, தேவர்கட்கு ஞானத்தை உபதேசிப்பவன் என்பது பொருளாதல் அறிக.

இருவரு மதியி லாராய்ச் சமரினுக் கெழுந்திட் டார்க
ளருமறைக கொடியி ஞன்மற் றன்னதை மறித்துத் தாரை
திருமுக நோக்கி யிந்தச் சேயினை யெவர்பாற் பெற்ருய்
வெருளுறே லுரைத்தி டென்ரு னுரைத்திலள் வெள்கி யொன்(உ0)

மைந்தனங் கதனை யோர்ந்து தாயுறு வதன நோக்கிச்
சிந்தையிற் கபட மென்னே செப்புதி யுள்ள தென்ரு
னந்தண னவ்னைச் செங்கை யமைத்தி யன்னுனோ நோக்கித்
தந்தையா ரிவனுக் குண்மை சாற்றுதி வெள்க லென்ருன். (உக)

விதுவென நாணி ஞேடு மெல்லென விளம்ப லுற்ருள்
கதுமென மகிழ்ச்சி யோடு கலைமதி யோடி யந்த
மதலையைக் யெடுத்து வந்து மடிமிசை யிருத்தி யன்னு
னிதமுறு மறிவை யோர்ந்து புதனென நாம மீந்தான். (உஉ)

அன்னதை யுணர்ந்த தேவ ரனைவரு மதியை யாசான்
பன்னியைப் புணர்ந்த பாவி யென்றுமுன் பழித்திட் டார்கள்
பொன்னவ னெழுந்து சீறிப் பொருந்திடென் னழகு மங்கி
யின்னலுங் கயமு மெய்தித் திரிதியென் றீந்தான் சாபம். (உ௩

சொற்றிடு முன்ன ரந்தத் தூயவன் சாபம் வந்து
பற்றிய தலைதி ஞேடு பாவமு மருவித் திங்க
ளுற்றுளம் பதைத்துச் செவ்வா யுலர்ந்து தன்மேனி நீடு
பொற்பழி திறத்தி ஞேடு கயமுமேற் பொருந்தி மாழ்கி. (உச)

வேறு.

மெய்த்த வத்துரு வாசனே டிவையெலாம் விளம்பி
யித்தகைப் பெருந் துயரினுக் கென்செய்கே னென்ரு
னத்தவத்திஞ னிவைகள்வெங் கொடுவினை யாகு
மூய்த்தி டின்னவை தமக்குமீண் டொருமருந் துளது. (உரு)

அந்த மில்புக ழிடைமரு தடைந்துபொற் றீர்த்த
மூர்ந்து றப்படிந் தவனுறை முதலவன் றன்னை
வந்த னஞ்செயி னல்லதை மருவுமித் துன்ப
மெந்த வாறெவ னியற்றினு மேகிடா தென்ருன். (உசு)

நன்றெ னப் பகர்ந் தவனுமத் தலத்தினை நண்ணித்
துன்று மன்புட னனையதீர்த் தந்தனிற் ருேய்ந்து
மன்ற லொன்றுகொன் றைச்சடை வரதனைப் பணிந்தான்
கன்று வெவ்வினை யகன்றது கதிரின்முன் னிருள்போல். (உஎ)

உ

சிவமயம்

# உருத்திர தீர்த்தச் சருக்கம்

வன்ப ணிக்குலம் பூண்டிடு மருதவா ணனுக்குத்
தென்பு றத்திலெய் தவன்விழித் திருவருட் டீர்த்த
மின்ப மீந்திடு முருத்திர தீர்த்தமென் றிலங்கும்
பின்பு ணைத்துமப் பெயரதற் கெய்திய பெருமை. (௧)

கருட னன்னதைக் காத்திடு மீசனே கடவு
ளிருடி பிப்பிலன் றமாலமாங் கிலங்கிடு விருக்க
மொருதி னம்படிந் ததனிற்றேன் கம்பல முதவிற்
றிருகு வெம்பவத் தோடுதீப் பிணிகளுந் தீரும். (௨)

முன்னை நாளிடை நிமியென மொழிந்திடுந் திகிரி
மன்ன வன் புரி தவத்தினால் வருதிட்ட கேது
வென்னுங் காவலன் மகவின்றித் தருமமிக் கியற்றிப்
பின்னெ டும்பகல் கடந்தொரு புதல்வனைப் பெற்றான். (௩)

மண்ட லம்பெரு மகிழ்வுற வந்திடப் புதல்வ
னண்டர் நாயக னடியர்பா லன்புட னளித்த
வண்டணிப் பொருட் பயனென வளர்தரு நாளிற்
கண்ட மாலையென் றுரைக்குநோய் கண்டது களத்தில். (௪)

களம திற்பிணி யுறமகன் வருந்துதல் காணா
வளவ னேருறு மருந்தொடு மந்திரச் செய்கை
யளவி லாவகை யாற்றலு மவற்றினீங் கிலதென்
றுளம திற்றுயர் கொண்டவ னுற்றன னன்றே. (௫)

காத்தி யாயன முனிவனக் காலையங் குற்றான்
பாத்தி யாசம னார்க்கியங் கொடுத்தனன் பணிவுற்
றார்த்தி யாதுளத் திடையென வவனுள துரைத்தான்
மாத்தி யானமுற் றான்றனை மாதவ னிசைக்கும். (௬)

மன்ன நின்மகன் பூருவந் தனிலொரு வணிக
னன்ன வன்மனைப் புறத்தா னாலய மொன்று
துன்னு மங்கதிற் சிதைவுறு சிலைகளைத் தொகுத்துப்
பொன்ன தாம்படி விலைசெய்யாக் கவர்ந்தனன் போலாம். (௭)

பிரச மென்மல ரணிசடைப் பிரான்றனை யொருகாற்
றரிச னஞ்செயா வவனடி தலைக்கொளு மதனா

லரச னாயினா னலையச் சிலைவிலை செயாவுண்
டெரிசி னலனன் களத்தினைச் சூழ்ந்ததிக் கொடுநோய். (௮)

வேறு.

கறைமிடற்றோன் பொருள்கவினெனள் ளளவுகொண்டோர் கடும்பிணியுற் றலைந்ததன்பி னிரயந்தன்னி, லுறைதருவர்செங் கதிர்மதிய முள்ளகால முடனுணர்ந்து கவர்தலுறி னடுங்கியுள்ளம், பெறுபொருளி னாற்குணித முதவியேழை பிழைபொறுத்தி யெனப்பணியி லனையபாவ, மிறுதியுறு முணர்கிலராய்க கவர்தல்செய்யி னிருகுணிதங் கொடுத்திறைஞ்சி னேகு மன்றே. (௯)

மறையுணர்ந்தோர் குரவர்பொருள் கவரினோர்ந்து மற்றதனுக் கிரட்டி கொடுத் திறைஞ்சல்வேண்டு, மறிவிலராய்க்கவர்ந்திடினுமபிறபொருளைக் கொளினு மதநிறமீந் திடவேண்டு மல்லல்வேண்டா, ருறுமிவர்கட் கோது பணிசெய்தகண்ணு முறறபரி வர்த்தனைசெய் யிடத்துந்தக்க, முறை மையிற் கொண்டிடலாகு மின்னோர்தத்த முன்னமுகம தளித்தனபோற் கோடலாகும். (௧௦)

எப்பவமு மெய்ப்பிணியுந் தீருந்தெய்வ விடைமருதி லுருத்திரதீர்த் தத்து மூழ்கி, னிப்பொழுதே நின்மகற்கொண் டேகுகென்ன விசைத்திட்டா னிசைத்திடலு மவனுமவ்வா, றப்பொழுதே சென்றந்தப் பதியினெய்தி யத்தீர்த்தந் தனின்மகனை யாட்டுவித்தான், செப்புவதென னவன்மிடற்றுப் பிணியத்தீர்த்தஞ் சென்றுதோய்ந் திடுமுன்னர்த் தீர்ந்ததன்றே. (௧௧)

வேறு.

பணங்கிள ரரவினிங்கும் பனிமதி யென்னவன்றே
னணங்ககன் றின்பமுற்று னஃதறிந் தவனுமூழ்கி
யணங்குல விதழிசூடு மருதரா யகனைவந்து
வணங்கினன் றுதிகள்கூறி மகனொடு மகிழ்ச்சி யுற்றே. (௧௨)

இன்னலெய் திடிற்றம் மைந்தர் தாமுமவ் வின்னலெய்திப்
பின்னது தீருமாறு பேணலு மதனைத் தீர்த்து
மன்னவர் மகிழத் தாமு மகிழ்தலு மியல்பாந் தந்தை
யன்னையர் தமக்கு மைந்தர் புறத்துல வாவி யன்றே. (௧௩)

மகிழ்விற்றன் னுலகிற் பாதி மருதவா ணனுக்கு நல்கித்
தகைமுடி சூட்டி மைந்தன் றனையவ னகருக் கேவிப்
புகழுமத் தலத்திற் பன்னாட் பொருந்தவீற் றிருந்து பின்னர்ப்
பகரொழின் மதியஞ்சூடும் பரனடி நீழல் சேர்ந்தான். (௧௪)

உருத்திரதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பதுமதீர்த்தச் சருக்கம்.

மருவு பின்னிசைத் திடுமதி வாவியின் றென்பா
லருகி னிற்பது மதீர்த்தமென் றொன்றுள ததற்குப்
பரமன் றேவதை போற்றுதல் பணிமுகக் கணங்கள்
பிரமன் மாமுநி விருக்கமோர் பிறங்கெழில் வில்வம். (க)

ஒல்லு மன்னதிற் படிந்துகார்ப் பாசமொப் பில்லா
வெல்ல மூப்புயர் தானியம் விப்பிரர்க் குதவி
னல்ல னீங்கிடு மவர்க்குறு பகைவர்க ளழிவர்
மல்ல லெய்திடு திருவரும் வளர்தரும் வாளுள். (உ)

மாவ லித்தனிப் பெயருறு விரோசனன் மைந்தன்
மேவு மத்தடம் படிந்துமுன் வெம்பவ மகற்றிச்
சேவு றுங்கொடிச் சேவகன் றிருவரு ளடைந்து
தூவி னூர்த்தொலைத் தாண்டனன் சுவர்க்கமும் புவியும். (௩)

மருக் குலாவுமப் பதுமநீள் வாவிநீர் வடிவா
யிருக்கி னுந்தனிற் படிந்துளோ ரியற்றுவெம் பாவத் *
திருக்கெ னும்விற கினுக்கொரு தீயதா மதனிற்
றெரிக்கு.மெண்ணிலர் வினைகளைப் பசுமமாச் செய்தோர். (௪)

ஆண்ட நாதியாய் விளக்கமுற் றமர்ந்திடு பதுமத்
தேண்ட ரும்புகழ்க் கதைசிறி திசைத்தன மினிது
பாண்டு மன்னவன் புதல்வர்கள் பரனடி பணிந்து
காண்ட ருந்தடஞ் சமைத்திடு காதைமேற் கரைவாம். (௫)

பதுமதீர்த்தச் சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பாண்டவதீர்த்தச்சருக்கம்.

*இருமனப்பெண் டிருமதி மயக்கிடுதண் ணறுவதுவு மிழைகுஞ் சூதுந்
திருமகணீக் கிடப்பட்டார் தொடர்பென்றுன் றோர்கூறறெளிந்துமுழாற்
றருமனுயர் வீமனருச் சுனனகுலன் சகதேவன் சாற்றுமின்னோர்
கருதலரோ டுறுசூதிற் புவியிழந்து கரந்துறையக் காலந்தன்னின். (க)

* திருக்குறள், ௯௨-ம் அதி, இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு.

கண்ணனிடை மருதடைந்து கண்ணுதலைத் தொழுமினெனக் கழறக் கேளா, வண்ணமுறு மனையதலத் தடைந்துமையாள் கருணையெழு வாவி மூழ்கித், தண்ணிலவா றணிசடிலத் தனிமருத வாணனடி தாழ்ந்து போற்றி, யெண்ணருமெந் துயர்தீர்ப்ப தென்றெனநின் றிசைத்தனரவ் வேல்லைதன்னில். (௨)

இன்னவினை விடுத்திடுமி னினியின்னுஞ் சிலபகல்பின் னிடனீர் சென்று, துன்னலர்க டமைத்தருமச் சமரதனிற் பொருகளத்திற் றொலைத்துப் பன்னுண், மன்னுபுவித் தலம்புரந்து பின்னுயர்நம் பதத்திதிது மருவுவீர்க ளென்னமரு திறைவனருள் வாக்கிலகு மிருவிசும்பி னெழுந்ததன்றே. ()

அந்தமொழி செவிப்புகலு மைவர்களு மகிழ்ந்துபினு மன்பினேத்திச், சந்தமுறு மனையபதி யிடத்தினிற்றம் பெயரினெவ்வோர் தடங்கள் செய்து, முந்துறுதந் நாடணைந்து பகைவர்பெருங் குலமுழுது முருக்கிவைய, நந்தலில்பே ருவகையொடும் புரந்ததன்பி னண்ணல்பத நண்ணினார்கள்.

பதுமமெனுந் தீர்த்தமதன் றென்புறத்தி லவர்தீர்த்தம் பரத்துவாசர்
முதுதவத்துச் சதுகர்ணர் கௌதமர்மாண் டவிபயிலர் முனிவர்நாவ
விதமுறுமா வாமலக மால்வேம்பு தருதெய்வ மீசனந்தி
கதமுறுவேற்*குகன்பிருங்கி சண்டேச னின்னவரோ காப்பிறேரும். (௫)

மேதகுமத் தடங்களிடைப் படிந்துபுனற் குடங்கவிகை விசிறியாடை
பாதுகையந் தணர்க்குதவி லெண்வகைச்செல் வமுமுளவாம் பகைமைதீரு, மேதமுறு பிணிதவிரு மிங்ஙனமத் தடமூழ்கி யின்பமுற்றோர்
பூதலத்தி லெண்ணிலர்மே லிந்திரதீர்த் தச்சிறப்புப் புகறல்செய்வாம். (௬)

பாண்டவதீர்த்தச் சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்

# இந்திரதீர்த்தச்சருக்கம்

கொந்து றும்மலர்ச் சடையவன் குணதிசை யிடத்தி
லிந்தி ரன்முனஞ் சமைத்திடு தீர்த்தமொன் றிலங்கு
மந்த மன்னனே தேவதை யாமவன் முனிவன்
இந்து சூடிறை காப்பவன் றுருமுள் ளிலவு. (௧)

ஓது மற்றதிற் படிந்திரும் புடனொளிர் வெள்ளி
மேதி யின்சுவைப் பால்கனி வெள்ளிலை கமுகம்
வேதி யர்க்கினி தளித்திடின் வெவ்வினை யதனோ
டேதஞ் செய்பிணி யகன்றிடு மின்பமே லெய்தும். (௨)

ஆற்று மக்கினிட் டோமத்தி னரும்பல னடையு
மேற்றி கழ்ந்திடு மதிற்படிந் தல்லறேய் விடுத்துச்
சாற்றி டின்பமு மகிமையுஞ் சார்ந்தன ரநேகர்
தோற்ற வாமுத லியதவிர் தூயமா தவத்தீர். (௫)

என்று சூதமா முனிவர னிசைத்தலு முனிவர்
வென்றி வச்சிரத் தவனெது வேண்டியத் தலத்திற்
சென்று ரைத்திடு தீர்த்தமாங் கியற்றினன் றெரிய
வின்றெ மக்குரை செய்திடு மெனவவ னிசைக்கும். (௬)

பூச விற்பொரு களத்திடைத் தனதுயிர் பொன்று
நீச ஞரிடத் துறுவர மேற்றிடு திறலோன்
பேசு மன்னவன் வலனெனும் பெயரினு னெதிர்த்து
வாச வன்றனோ டமர்செய மற்றவன் றோற்று. (௭)

இவனை வஞ்சகத் தலைத்திட வேண்டுமென் மெண்ணி
யவனை யுற்றுநீ பொருதிடு மாற்றல்கண் டமரி
லுவகை யுற்றன மிதுவர முனக்களித் திடுவாங்
குவவு மால்வரைத் தோளினுய் வேண்டிய கோடி. (௮)

என்ன வோதலு மவனகைத் தெனக்கெதிர் தோற்ற
வுன்னி டத்தினிற் பெறுவதோ வுனக்கியான் றருவன்
மன்ன கேளென ஈரனொரு மகமியற் றிடுகே
னன்ன தற்குறு பசுவதாய் வருகென வறைந்தான். (௯)

ஈவ தேபெரி தெனவல னெண்ணிநற் பசுவாய்த்
தாவி லாதவம் மகம்புரி சாலைவந் தடைந்தான்
மேவி யிந்திரன் சுருதிசொல் விதிமுறை வதைத்துத்
தேவர் தங்களுக் கூட்டிமேற் செய்தனன் வேள்வி. (௮)

வஞ்ச னைத்திறத் தவன்றனை வதைத்திடு பவமும்
வெஞ்சி னப்படைப் பகன்றனை வீட்டிய பவமும்
நஞ்செ னக்கொதித் தலைத்திட நாடொறு மலைவுற்
றஞ்சி யித்துயர்க் கென்னிழைத் திடுவதென் றுய்ந்து. (௯)

மன்னு சீரிடை மருதடைக் துமையருள் வாவி
தன்னின் மூழ்கிநின் மருதநன் னிழலுறை தாணு
பொன்ன டித்துணை பணிந்துதன் பெயர்கொடு புகலத்
துன்னு சீர்த்தட மமைத்தரு வினைகளைத் துடைத்தான். (௧௦)

அனைய சோதியை யருச்சனை புரிந்தவ னருளு
மனைய மால்வரங் களுங்கொடு பொன்னுல கடைவா

னினைய வாவியிற் படிந்திவை வேதியர்க் கீவோ
ரினைய னீக்கிமற் றிவைபெறு கெனவிசைத் தகன்றான். (கக)

க்ந்த நாண்மலர் மலிதரு கற்பக நிழல்வா
ழிந்தி ரன்றனித் தீர்த்தமான் மியஞ்சிறி திசைத்தாம்
வெந்த ழற்பெருங் கடவுடன் பெயர்கொடு விளங்குஞ்
சந்த முற்றிடு வாவியின் பெருமைசாற் றிடுவாம். (கஉ)

இந்திரதீர்த்தச்சருக்கமுற்றும்.

---

உ

சிவமயம்.

# அக்கினிதீர்த்தச்சருக்கம்.

சாலு மிந்திர வாவியின் சார்ந்திடு தென்பாற்
கோலி ரண்டட னென்றுவீழ் செய்மையிற் குலவுஞ்
சூல காதமொன் றுருதடந் தோன்றிடு மதன்றன்
பால னக்கினி சங்கரன் பகர்ந்திடு தெய்வம். (க)

மயன்மு தற்பகை மாற்றிடு மாதவன் கபிலன்
பயிலு றுந்தரு நெல்லியத் தடத்தினிற் படிந்து
தயிர்நெய் பாற்பசு மறையவர் தமக்களித் தனனோ
லுயிர்வ தைத்திடும் பாதக மொழிந்திடுங் கணத்தில். (உ)

ஆதி யோர்பகல் வயிரவ னாகிய கடவு
ளோது மங்நகர் காவலி னுற்றுலா வருவான்
சோதி முத்தலைக் கைப்படைச் சூலமூ லத்தைப்
பூத லத்தவ னாட்டிமே லெடுத்தனன் போலும். (௩)

எடுத்த பள்ளமோர் வாவியா யிலங்கிய தன்னேன்
பிடித்த சூலமங் கமைத்ததாற் பேசுமந் நாம
மடுத்த தப்பெருந் தீர்த்தமா லதனிடைத் தோய்ந்து
தொடுத்த பாவநீத் தலகிலர் தூயரா கினரால். (௪)

பாண்டு வின்மகன் பற்குனன் பரிவுட னுதவு
காண்ட வப்பெரு வனத்தினைப் புசித்திடு காலை
யாண்டி ருந்தபல் லுயிர்கள்வெந் தவிர்தவெம் பாவம்
பூண்ட *பாவகன் மற்றது போக்கிடக் கருதி. (௫)

---

*பாவகன் = அக்கினிதேவன், சுத்தப்படுத்துவோன் என்பது பொருள்.
[பூ—சுத்தப்படுத்து.]

வளர்த ரும்புக ழுத்தலை மரீஇவை ரவன்செய்
குளர்த னிற்படிந் தப்பெருங் கொலைப்பவ மகற்றி
யுளங்கொ ளோகையி னத்தட மொளிபெறப் புதுக்கிக்
களங்கொள் கண்டனைப் பணிந்துதன் கவினுலகடைந்தான். (சு)

அனைய னோர்பெறப் புதுக்கலா லக்கினி தீர்த்த
மெனவ தற்கொரு நாமமே யெய்திய திப்பா
லினமலர்க்குலம் பொலிதரு மியமதீர்த் தத்தின்
கனமு றுந்தனி மான்மியங் கட்டுரைத் திடுவாம். (எ)

அக்கினிதீர்த்தச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# இயமதீர்த்தச்சருக்கம்.

---

பாவக தீர்த்த மேல்பாற் பகழிபேழ் படுதூ ரத்தின்
மேவுறு மியம தீர்த்தம் விளம்பிய மன்றவத் தோன்
தேவதை யகோரமூர்த்தி பாதிரி திகழுந் தாரு
காவல்செய் திடுவா ரங்கு னிரிரிடர் கணங்களாகும். (க)

திருத்தகு மதனின்மூழ்கித் திலமுட னிரும்பு செம்பொன்
பருத்திகம் பளங்கார் மேதி பகடிவை பனவர் தங்கட்
கருத்தியி னுதவுவோர்கட் கறைதரு மியமன் றன்னால்
வருத்தமீ தின்றுமீண்டும் வளர்ந்திடு மவர்தம் வாணாள். (உ)

வேறு.

துன்பி ழைத்திடு குட்டநோய் பித்தநோய் சூலை
யென்பு ருக்கிடு மேகநோயாதிய விரியு
மின்பு கல்விசெல் வம்புக ழெழினனி யெய்தும்
வன்ப கைத்திறம் விளைப்பவர் வணங்குவர் வந்து. (௩)

கயலை நேர்விழி யுமைதவம் புரிந்திடு காலை
யியலு மத்தவச் சாலைதன் றூதரோ டியமன்
பயிலுங் காவல்செய் திட்டநாட் பகருமவ் வாவி
வியலுறச் சமைத் தாங்கினி திருந்தனன் மேவி. (௪)

(வேறு)

அத்தகைய நெடுந்தீர்த்தத் தென்கரையிற் சிலபகல்பின் னகன்றபின்னர்
முத்தமிழ்த்தென் மலயமுனி மருதநிழ லிடத்தொளிரு மூர்த்திதன்னைப்
பத்திவலை யிடைப்படுமெம் பரசிவனை யன்பினொடும் பணிவுற்றேத்தி
மெய்த்தவர்சூழ்ந் திலங்கிடநீ டருந்தவஞ்செய் திடுவதற்கு மேவுற்றானால்.

வினையகற்று வெண்ணீறுங் கண்மணியு முடன்முழுதும் விளங்கத் தாங்கிச், சினவியெழு மைம்புலனு முள்ளடக்கித் திரிமலமுஞ் சிதைத்து நீடு, கனமுதவு தாமரையா தனத்திருந்தா னுடனுறக்கங் கடிந்து நோக்கந், தனைமுகிழ்த்தல் விழித்தலுறா வொருதிறத்து நாசிநுனி சாரச்செய்து. (சு)

இடையிறெனு பிங்கலையி னிடையினுங்கால் வரவுபோக் கிலங்கிடாது, நடுவினுறு சுழுமுனையிற் றம்பனஞ்செய் துயிர்க்குயிராய் நயந்து வைகுஞ், சுடரினைத்தன் மனத்திருத்தி வழிபடச்சில் பகலாங்குத்தோற்றத்தோடு, முடிவுமிலாக் கடவுளெதிர் தோற்றினனைகோரமா மூர்த்தியாகி.

அலகினுருத் தபனர்களோ ரிடத்தெழுந்த தெனத்தோன்றி டமலன் வேணி, நிலவுமிழு மிளம்பிறையு மலர்முகமும் விழிமூன்று நிகழ்செவ்வாயு, நலமருவு பிறவெழிலுங் கண்டெழுந்து மகிழ்விறெனு நடித்துமுன்னர்ப், பலமுறைவந் தனஞ்செய்து கடல்குடித்த மலயமுநி பரவலுற்றான். (அ)

அணையரவ முடையோனு மரவிந்தக் கண்ணனு மறியொணாத துணைமலர்ச்சே வடிதனியேன் காணவெழுந் தருள்புரிந்த சோதிபோற்றி, யிணையிலிபொன் னிதழிபுனை வேணியரீ னிடைமருதி னெந்தைபோற்றி, பணைமுலைமின் கொடிமருவு மிடப்பாக விடைப்பாக பரமபோற்றி. (கூ)

என்றுதுதித் திடவுன்ற னருந்தவமு மிருந்துதியு மெமதுநெஞ்சஞ், துன்றிமிகு மகிழ்வுறச்செய் தனவுனக்கு வேண்டுவரஞ் சொல்கவென்னக், குன்றுதனை வளைத்தபிரா னிசைத்தனனம் முநிதாழ்ந்து குலவுநின்பா, லொன்றலுறு முயர்முத்தி வேண்டுமென வுரைத்திட்டா னுமைக்குமீசன்.

வேறு.

தென்றமிழ் முனிவமுத்தி வேண்டுமேற் றெரிக்குமன்ன
துன்றனக் கரியதன்று மயேந்திர மென்னுமோங்கல்
சென்றவ ணுறைதிநாமுஞ் சிலபகல்கழிந்திட் டந்தக்
குன்றிடை யணைந்துகாட்சி கொடுத்தரு ளுந் தருதுமென்றான். (கக)

பெரிதுள மகிழ்வுற்றந்தப் பிறங்கல்சென் றுறைந்தானன்றே
னரியயற் கரியவண்ண லனையபே ருருவத்தோடு
தெரியுற வின்னுமாங்கே திகழுற வுறையுநீடு
விரிதரு முலகினோர்க்கு வேண்டிய வரங்களீவான். (கஉ)

அத்தடம் படிவுற்றந்த மூர்த்தியை யருச்சித்தோரு
முய்த்திடு பூசையாற்றற் குரியன வுதவி னோரும்
பத்தியிற் பணிந்திட்டோரும் பாரினு மினிதுவாழ்ந்து
நித்தரா யவன்றுணீழ னீடுவ ரீதுவாய்மை. (கங)

வேறு.

தருமனுக் கியதனித் தடத்தின் மேன்மையும்
பரிசிவ ருண்டினி திலங்கு பான்மையு
மொருவகை பேசினு முமக்கு நாமினி
நிருதிதீர்த் தத்துறு நிகழ்ச்சி கூறுவாம். (கசா)

இயமதீர்த்தச்சருக்க முற்றும்.

---

உ
சிவமயம்.

# நிருதிதீர்த்தச்சருக்கம்.

இயமதீர்த் தத்தினுக் கிலங்கு மேற்றிசை
வயினிரண் டோடொரு வாளி வீழிடைப்
பயிலுறு நிருதியின் றீர்த்தம் பாங்குறும்
மயலறு மாதவன் வசிட்ட னென்பவன். (க)

நேத்திர நுதல்வளர் நிமலன் றேவதை
கூர்த்திடு நிருதியே குலவு மன்னதைக்
காத்திடு நீள்கருங் காலி யென்றிசை
சேர்த்திடெபற் றிடுதரு திகழு மாயிடை. (உ)

மேயதின் மூழ்கிமேல் விளங்கு பூசினிக்
காயுளுந் தெண்ணெயெட் கலந்த போனகந்
தூயவே தியர்க்கிடிற் சுரமுன் னுகிய
நோயகன் றிடுமொரு நொடிப்ப தத்தினே. (ங)

அரக்கரி னலகையி னணுகு மின்னன்மே
னெருக்குறு மின்பமே நீடு நாடொறுந்
தருக்குறு மத்தடந் தன்னின் மூழ்கிமுன்
கருக்குநோய் தவிர்ந்துளங் களித்து ளார்பலர். (ச)

தரணியி லெளியரைக் காக்கத் தானவ
ரரசனத் தடஞ்சமைத் ததற்கு முன்னிசை
வானுமீங் கிட்டனன் மகிழ்ந்து மற்றினி
வருணதீர்த் தம்பெறு வளமை யோதுவாம். (ரு)

நிருதிதீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்

# வருணதீர்த்தச்சருக்கம்.

மருத நாயகன் றனக்குமேற் றிசையினில் வாளி
யொருப தைந்துவீ ழெல்லையி னுறையுமோர் தீர்த்தம்
வருண னாக்கிய தஃதவன் பெயரினால் வயங்கு
மிருடி யின்பரத் துவாசனு மிசைதரு வகுளம். (க)

தீர்த்த பாலனங் கரத்திணேன் றெரிக்குமெவ் வுயிர்க்குஞ்
சாந்தி யப்பொரு ளாயுறு சத்தியோ சாத
மூர்த்தி தேவதை மற்றதின் மூழ்கிவெள் ளடைகா
யேர்த்து ரங்கமே லுதவிடிற் கொடுவினை யேகும். (உ)

பொன்னி ரும்பிர சதங்களிற் பொலிந்திரு விசும்பு
தன்னி டைத்திரி திரிபுரங் களினுறு தகுவர்
முன்ன வன்றரத் தாம்பெறு வரத்துறு மொய்ம்பாற்
றுன்னு வானவர்க் கநுதினந் துயரமே விளைத்தார். (௩)

வான நாடவ ரவர்செயுந் துயரினால் வருந்தி
மாநி லம்புக ழிடைமரு தெனும்பதி மருவி
மேன லம்பெறக் காகமூழ் கியதட மேவி
நானஞ் செய்துமை யருளினு ரத்தினும் படிந்து. (ச)

பொன்னி சூழிடை மருதிறை யவனடி போற்றி
யன்ன வன்மல ரடியையே யகத்தினிற் குறியாச்
சொன்ன வாருணத் தடத்தினுந் தோய்ந்ததன் கரைமேற்
பன்னு மெய்நடுக் குற்றிடப் பரிந்தன ரிருந்தார். (ரு)

முந்து சத்தியோ சாதமா மூர்த்தியா யிறையோன்
வந்து நின்றெதி ரவரைநீ ரஞ்சன்மின் வலிசெ
யந்தவன்கணார்க் கழிவுநா ளடுத்ததா மென்னச்
சிந்தை தன்னொடு மெய்யுறு நடுக்கமுந் தீர்த்து. (சு)

கேச வன்றிரி புரத்துறு கேடர்பாற் கிடைத்தாண்
டீசன் மாலய னிறைவனென் றியம்பல்பொய் யென்றவ்
வாசை நீங்கிடப் பலபல மாயஞ்செய் தவர்செய்
பூசை யுஞ்சிவ பத்தியும் போக்கிமுன் வந்து. (எ)

ஈச நின்பதம் விடுத்திலர் மூவர்மற் றியாரு
நீசராயினர் திரிபுரத் திடையென நிகழ்த்த
வாசு கிப்பெரும் பணியினை நாணென மாட்டித்
தேசு மிக்கபொன் மேருவைச் சிலையதாக் கோட்டி. (அ)

மாய னைக்கணை யாக்கியங் கைக்கொடு மதியோ
டேய செங்கதிர் திகிரியா யிசைமறை பரியாத்
தூய நான்முகன் வலவனாத் துன்றுமே தினியா
மேய தேரினின் றொருதனிச் சிறுநகை விளைத்து. (கூ)

அந்த மென்னகை யெழுந்ததீப் பொறிகளி னுங்கு
முந்து முப்புரந் தீயவு மொழியுமுத் தவரும்
வந்து தன்னடி வணங்கவுஞ் செய்தபின் வானோர்
சுந்த ரத்தம னியநகர் துன்னவுஞ் செய்தான். (க0)

தாரி லங்கணி முடிச்சுரர் தனிமுதற் போற்றிப்
பாரி னீடமித் தலத்திடைப் பகர்புனற் கிறைசெய்
நீரின் மூழ்கினு மிகலினோர் நெருப்புமூழ் கினரொன்
றேரி னேங்கதைப் புகழ்ந்துத மிருக்கையெய் தினரால். (கக)

கடுக்க வின்பெறு கந்தரக் கண்ணுத லிமையோ
ரிடுக்க ணீக்கிய திறத்தினு லின்னுமத் தலத்தி
னடுக்கந் தீர்த்தவ னெனச்சொலு நாமமேற் கொண்டு
வடுக்கண் மாதினோ டமர்ந்திடும் வணங்குமு வுலகும். (கஉ)

தருண வின்மதி மிலைந்திடை மருதுறை தலைவன்
கருணை யுற்றருள் வரம்பெறு நெஞ்சகங் களித்து
வருண னுக்கிய வாவியின் மான்மிய மிதுமே
லருண வாகனன் றீர்த்தமான் மியமினி தறைவாம். (கங)

வருணதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

## வாயுதீர்த்தச்சருக்கம்.

மேய வாருணத் தடவட மேற்றிசை யிடத்தோர்
சாய கம்விழு சேய்மையிற் றயங்குமோர் தீர்த்தம்
வாயு தீர்த்தமென் றதற்கிசை வாயுவே தெய்வஞ்
சேய தைப்புரந் திடுமுனி திறங்கொள்கண் ணுவனும் (க)

கேச ரத்தனித் தருவொன்று கெழுமலர் கொண்டு
வாசஞ் செய்திடு மாவயின் மற்றதின் மூழ்கி
யாசில் கன்னிகை கவிகைபொன் னந்தணர்க் குதவிற்
பேசும் வாயுநோ யகலுமே வின்பமும் பெருகும். (உ)

ஒளிரு மத்தடந் தனிற்படிந் துயர்கதி யடைந்தோ
ரளவி லாரவர் தமிலொரு வன்றனை யறைதுங்
கிளரும் விப்பிர குலத்திலோன் கிருகலப் பெயரோன்
களவு கைதவம் படிறிவை யளவில கற்றோன். (ங)

அந்த ணாளர்பாற் பயிலுரு னருமறை யறையான்
மந்தி ரப்பெரு மயலினும் வடுவகிர் நெடுங்கட்
கந்த மென்மல ரோதியர் காமவே லையினுஞ்
சந்த தம்படி மனத்தொடு சரிப்பவ னொருவன். (ச)

வந்து சத்தமா முநித்தலத் திடைநளி மதியி
லிந்து வாரநா ளிரவினி லீசன்மீ திலங்குஞ்
சந்த நீள்பணி கவர்ந்திடச் சார்ந்தது தெரிவா
னந்து தீபத்தைத் தூண்டிமேற் கொண்டன னடந்தான். (ரு)

நடக்கும் போதினி லியமகிங் கரர்சிலர் நண்ணி
யடுத்தி டங்கொரு பணியெயிற் றமர்தருங் கொடிய
விடத்த வன்றனைக் கொண்டுபோய் விளங்குகூற் றுவன்பால்
விடுத்து நின்றன ரன்னவ னுய்ந்திது விளம்பும். (சா)

தராத லத்திடைப் பனவநீ யிழைத்தபா தகத்தாற்
கிராத னுவுதித் தெழுமுநித் தலத்தினிற் கிடைத்தங்
கிராவி லிந்துநா ளீசன்முன் னிருந்திடு சுடர்வில்
விராவ நீட்டலா லிடைமரு தெனும்பதி மேவி. (எ)

அனில னுக்கிய வாவியிற் படிந்துமற் றனைய
புனித வாவியிற் படிந்திடு புண்ணிய வசத்தாற்
பனிமதிச்சடை நுதல்விழிப் பரம்பொரு ளுலகத்
தினிதி ருஞ்சுக மெய்துவான் பிறத்திபோ வென்றான். (அ)

அவனு மத்திறற் கூற்றுவ னறைந்தவா றீண்டுச்
சவர னுவுதித் திடைமரு தெனும்பதி சார்ந்து
தவல ரும்புகழ் மருத்தெழிற் றடத்தினிற் றோய்ந்து
சிவப ரன்றனி யுலகிடைச் சென்றுவீற் றிருந்தான். (கூ)

தளமி குந்திடு மலர்பொலி * சமீரண தீர்த்த
வளமை மற்றிஃ தாமினி மகிழ்வுறு தவத்தீர்
களமி டற்றவன் றுணைவனுக் கட்டொத் திடுதென்
னளகை மன்னவ னமைத்ததீர்த் தப்புகழ் முறைவாம். (௧0)

வாயுதீர்த்தச்சருக்க முற்றும்.



உ

சிவமயம்.

# குபேரதீர்த்தச் சருக்கம்.

தீர்க்க முற்றிடும் வாயுவின் றீர்த்தமென் றதற்கே
கூர்க்க டுங்கணை யைந்துசெல் சேய்மையிற் குணபாற்
றூர்க்க வின்முடி நிதிபதி சமைத்திடு தீர்த்த
மார்க்க டேயனு முனிவரன் மற்றதற் கிருடி. (௧)

கொண்ட புட்பக வூர்தியே குலவதின் றெய்வங்
கண்டை யுற்றகண் டாகர்ண னன்னதைக் காப்போன்
வண்டு ணுமலர்ச் சண்பக மதிலுறு விருக்க
மண்டு வெள்வளை யுலவுமவ் வாவியின் மூழ்கி. (௨)

வேத மாகம மாதிய வுணர்ந்தவிப் பிரர்க்கு
மோத கங்கழை சருக்கரை மொழிதரு சுகந்தங்
கோது மைக்குலங் கொடுத்திடிற் குலவுமன் னவர்க
ளோது தீவினை குறைந்திடு முயர்ந்திடுஞ் செல்வம். (௩)

அத்த டத்தினை யமைத்துவெவ் வினைதவி ரருத்த
னித்தி றப்பெருஞ் செல்வமுற் றிடவிடை மருதி
னித்த னைப்பணிந் துறுவர மேற்றனன் னீர்தோய்
மெய்த்த வர்க்குத வெனவதற் குதவினன் மேனாள். (௪)

மேவு மத்தடந் தனிற்படிந் தித்திறம் வெய்ய
பாவ நீக்கிநற் செல்வமேற் பற்றின ரநேகர்
சேவு கைத்திடு சானனுந் தேவனு ரமைத்த
வாவி யின்றனிச் சிறப்பினி வழுத்துது மன்றோ.

குபேரதீர்த்தச்சருக்க முற்றும். (௫)

*சமீரணன் = வாயு. நன்றாய்ச்செல்கின்றவன் என்பது பொருள். [சம் = நன்றாக, ஈர் = போ, செல்.]

சிவமயம்.

# ஈசானதீர்த்தச்சருக்கம்.

இயக்கர் நாயக னமைத்திடவ் விலஞ்சியின் கீழ்பால்
வயக்க டுங்கணை யிரண்டிலீ சானன்முன் வகுத்த
வியக்கு றுந்தனிப் பொற்றட மேவுறு மிருடி
மயக்கின் மாதவ வசிட்டனும் வார்தரு விளவே. (௧)

மாணி பத்திர னென்பவன் மற்றதைப் புரப்போன்
றாணு வென்றுல கிசைத்திடு சங்கரன் றெய்வங்
காண திற்படிந் துருத்திரக் கண்மணி கலைகள்
சேண ளித்திடின் மகவுறும் ஞானமுஞ் சேரும். (௨)

மேலை யன்னதிற் படிந்தெழில் மிருகண்டு மைந்தன்
சூல பாணியை யனையபொற் பதியிடைத் தொழுது
கால னென்பவன் றனைப்புகழ்க் கடவையில் வென்று
சால வின்புற வாழுநா ளெய்தினன் றனித்து. (௩)

உரிய வன்பினம் மறையவ னிதிற்படிந் துலகிற்
பெரிது வாழ்பக லெய்தின னென்பது பெரிதோ
வரிய ஞானமொன் றெய்திடு மெனச்சொலி னதனுற்
கரிய கந்தரன் றிருவருள் கலந்திடு மன்றே. (௪)

இன்னு மத்தடந் தனிற்படிந் திடைமரு திறையோன்
பொன்ன டித்துணை பணிந்தரு ளெய்தியிப் புடவி
தன்னி டைப்பல யுகமுறச் சித்திசார்ந் தவரு
மன்னு வீடுபெற் றவர்களும் வரையில ரன்றே. (௫)

ஈச னாற்றிய வாவியின் மான்மிய மிதுவாம்
மாசி லந்தணி ரினியவன் மலரடி வணங்கி
வாசு தேவனென் றுரைத்திடு மாதவ னமைத்த
தேசு மிக்கதீர்த் தக்கதை சிறிதெடுத் திசைப்பாம். (௬)

ஈசானதீர்த்தச்சருக்க முற்றும்.

சிவமயம்.

# கிருஷ்ணகூபச்சருக்கம்.

ஆலயத்தினி லீசதிக் கதனிடைக் கண்ணன்
மேலையத்தலத் தெதிர்ந்தநாள் விளைத்ததோர் தீர்த்தங்
கோலமுற்றினி திலகிடுங் கூபநீ ருருவாய்ப்
பாலினட்டமி தனிலதிற் படிதலுத் தமமால். (க)

தரிக்கு மன்னதிற் பரிவொடு தானமுன் னியற்றிற்
றெரிக்கும் வெவ்வினைக் கணத்துட னிரணமுந் தீரும்
வரிக்கண் மாதுறும் மகவுறு மதியிள நிலவு
விரிக்கு மின்சடைத் தனிமுதல் கருணையு மேவும். (உ)

தான வர்க்கிறை யாகிய மாவலி தன்பாற்
றூன மூன்றடி தருகெனத் தகையரி வேள்வித்
தான மெய்திநின் றிரந்திடப் * பார்க்கவன் றனித்துத்
தான வற்கியற் குரவனுந் தன்மையாற் சார்ந்து. (௩)

மேவு வஞ்சமீ தெனக்கொடா வகையெதிர் விலக்க
மாவலிப்பெயர் மானவன் வந்திரந் தவர்கட்
கீவ தேபெரி தெனவுளைத் தளிப்பதற் கிசையக்
† காவி யன்பினர் மேனெறி யாதெனக் கருதி. (௪)

பொழித ரும்புனற் கமண்டலச் சிறுதுளை புகுந்துள்
வழிய டைத்தனன் வாமனன் மற்றதை யறிந்தவ்
வுழியி ளோர்பசுந் தருப்பையிற் குத்திட வொளியோன்
விழியி னொன்றிடைப் பட்டது வியன்மணி சிதற. (௫)

ஆங்க வன்றுயர் ஒருமுகம் பெயர்த்தன னதனிற்
றூங்கு தண்புனல் விடுத்தவன் சொன்னவா றளித்தான்
வாங்கி மாயவன் றலைக்கொள மலர்ப்பதங் கொடுத்தா
னீங்கு வெள்ளியின் னேகநேத் திரத்தொடு நின்றான். (௬)

ஈதல் வேண்டும் வந்திரந்தவர்க் கிசைந்தன வில்லையே
லோதல் வேண்டுமற் றொருவருக் குதவுமா றின்றேல்
யாது மோதுறு திருந்திட வேண்டுமன் றீதல்
பேத முற்றிடச் செய்பவர் பிணியுறல் வியப்போ. (௭)

* பார்க்கவன்=சுக்கிரன். பிருகுவின் சந்ததியிற் பிறந்தோன்.
† காவியன்=சுக்கிரன், கவினது புத்திரன்.

கொடுக்கு மானவ னின்பமேற் கூட்டிடு முன்ன
ரிடுக்க ணெய்தினு மதனெறு புகழுமொன் றெய்துந்
தடுக்கி னார்க்கொரு புன்கணுஞ் சாற்றிடு வசையு
மடுக்கு மென்பதம் மாவலி சவிகள்பா லறிந்தாம். (அ)

நின்ற வெள்ளிபொன் னிடைமரு தெனும்பதி நேர்ந்து
துன்று சீருறக் கூவனீர் தோய்ந்துடன் பெற்றான்
சென்ற கண்மணி பிறர்க்கிவ னீதலைச் சிதைத்தோ
னென்று காட்டிலைச் சினையின்முன் போலவே யிலங்கும். (கூ)

பாவு மோகையி னுமையொடு மருதுறு பாங்கின்
மேவு சோதியைத் தன்னிரு விழியினு னோக்கித்
தூவி யொண்மலர் பணிந்தெதிர் துதிபல விசைத்துத்
தேவர் தங்களுக் கின்னல்செய் தீவினை தீர்ந்து. (கய)

தன தெழிற்றனி யுலகிடைச் சார்ந்தனன் றயங்கு
மனைய தீர்த்தமான் மியஞ்சொலற் கரேகமுண் டின்னுஞ்
சினவு மால்விடைத் தாணுவின் றிருவிழி யமைத்த
கனக தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத் திடுவாம். (கக)

கிருஷ்ண கூபச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# கனகதீர்த்தச் சருக்கம்.

---

மாக வின்மதி சூடிகண் வந்தபொற் றீர்த்தங்
காக தீர்த்தமென் றுயது காகமுன் மூழ்கி
யேக நாயகன் றிருவரு ளெய்திய துரைக்கிற்
பாகு றன்னதை நோக்கிடிற் பழவினை பறியும். (க)

அங்கை யாலதைத் தொடின்வினை யாவையு மகலுந
தங்கி டன்னதி லொருதுளி தலைமிசைத் தெளிப்பிற்
பொங்கு வேள்வியைந் திரட்டியா யிரப்பலன் பொருந்து
மங்கு வெம்பிணி தொலைவுறு மருவுறுஞ் செல்வம். (உ)

துங்க முற்றிடு மதனிடைத் தோய்ந்திடு மவர்க
ளிங்கி தம்பெறக் குறித்தவை யாவையு மெய்தித்
திங்கள் சூடிய சிவனுருப் பெறுவர்மேற் றெரிக்கும்
பங்கு னிக்கண்முன் னாளதிற் படிந்திடல் விசேடம். (கூ)

முன்னு இத்தவ ளேவல்செய் திடுவது முறையன்
றென்ன வோதின னவளிதா பணிகளுக் கிசைத்தாள்
பன்ன கங்கள்வா னமிர்தமக் குதவிடிற் பரிவி
னன்னை யேவல்செய் வினையினை விடுகென வறைந்த. (அ)

ஒல்லு மவ்வுரை கருடனுக் கன்னவ ளுரைக்க
நல்ல தென்றவ னிசைந்துவர் தகத்தினு ளுடிச்
செல்வ மோங்கிய விடைமரு தெனும்பதி சேர்ந்து
சொல்லி டத்தனிச் சிறப்புறு வாவியிற் றோய்ந்து. (கூ)

பணைமு லைக்கொடிப் பாகனை வலங்கொடு பணிந்து
தணிவி லன்பொடு துதித்துவா னுலகினைச் சார்ந்து
துணிவொ டியாவரு மனுகுறு வகையெதிர் சுழலுந்
திணிய சக்கரத் தசப்படா தணுவெனச் சென்று. (கல)

உண்ணு மைந்துமெல் லெனவவ னுறைந்திடு மமிர்த
வண்ண வொண்மணிக் குடந்தனைக் கைக்கொடு வருங்கால்
விண்ணு ளாரறிந் தெதிருற வெஞ்சமர் விளைக்க
வெண்ணு மன்னவர் தம்மைவென் கண்டன னேக. (கக)

துன்னி மற்றவர் சூழ்ந்துபின் றுதித்திட முன்னர்ப்
பன்ன கங்களுக் கிசைத்தசொற் பழுதுறு துதவி
யன்னை யேவலை மாற்றவ னுங்குநீ ரடைவுற்
றின்ன தைக்கொடு சென்மினென் றிசைத்தவ னெய்தி.

ஓத ராவினங் கட்குமக் கமுதுகொண் டுற்றேன்
சீத நீர்படிஇத் தொடுகெனத் தெரித்தொரு தருப்பை
மீது வைத்தனை யேவலை மீட்டனன் சென்று
ளுத ரத்தவை மூழ்குமுன் சுரர்கள்கொண் டகன்றார். (கங)

வந்து பார்த்தன திகைத்தன மணிக்குட மிருந்த
நந்த வில்லதோர் தருப்பையை நக்கின விருப்பான்
முந்து நாவிரு பிளவுறப் பிளந்தன முழுதுஞ்
சிந்தை நொந்தன சென்றன சீறுமப் பணிகள். (கச)

பொருந்து மித்திறமுநி விர்காள் பூருல முமக்குந்
தெரிந்த தேயமிர் தெடுத்தவன் வந்திடு திறனும்
வருந்து தாயினை மீட்டதூஉ மருவுறு மினைய
பரந்த வாவியிற் படிந்திடு பயனென லாகும். (கரு)

இசைக்குந் தென்றிசைக் கோனுறு தீர்த்தத்தி னீச
திசைக் கணுவிரு வசுக்களின் றீர்த்தமொன் றினிது

வசிக்கு மற்றதின் வளர்பிறை யட்டமி மருவி
யசைக்கு மன்பொடு படிந்தவர் வேண்டிய தடைவார். (௧௬)

விரவுறும் வசுதீர்த்தத்தின் விளம்பு முத்த ரத்தி
னிரவி தீர்த்த மொன்றிலங்கிடு மிதனின் மற்றனையோன்
பரவு வார நாளவனெழு காலையிற் படியின்
மருவு தீப்பிணி யாவையு மாய்ந்திடு மன்றே. (௧௭)

மன்னு மாதவன் றடத்தயன் மருத்து கடீர்த்த
மன்ன தோங்கிடு வாதநோ யகற்றிடு மதனின்
முன்ன ரம்மருத் துக்கள்போய் மூழ்கிநீள் கருவிற்
பொன்னி லத்திறை குறையுடல் பூரண முற்றார். (௧௮)

வட்ட வாருண வாவியின் றென்புடை வயங்குஞ்
சிட்டர் போற்றிடு நரசிங்க தீர்த்தமொன் றதனைத்
தொட்டு வந்துடன் குட்டநோய் தொலைத்தன ரநேகர்
கட்டு ளைப்பதென் மூழ்கினோர் கலந்த பேரின்பம். (௧௯)

அந்த வாருண வாவியின் குணதிசை யமர்ந்து
நந்தி தீர்த்தம் வந்தாடினோர்க் களித்திடு ஞானஞ்
சந்த பீடத்தின் குடக்கினிற் றுரோணன் செய்தடாகம்
முந்த வன்றனக் கீந்தது மொழிந்திடு மதலை. (௨௦)

இராவ ணன்றன் மீதேகு நாளிராகவக் குரிசில்
விராவு மன்புட னுமையவள் மேவுசந் நிதிக்கட்
டரா தலம் பணிந்தேத்திடச் சமைத்ததோர் கூபம்
பராவு தன்வயிற் படிந்தவர் பகைமை தீர்த்திலங்கும். (௨௧)

வருண தீர்த்த வுத்தரந்தனில் வாளிமூ வாறில்
வரமுறுஞ் சுரதீர்த்த மொன் றிலங்கிடு மருதப்
பரமன் றென்புடை யுலகெலாம் பகர்முனி தீர்த்தம்
விரவு மொன்றிவை யிரண்டுமேல் விமலன் மூளுதவும். (௨௨)

கூறிடும் முரகாரி தீர்த்தாதி யாக் குலவு
மாறு நாலும்வெம் பவத்தொடு துயரமு மகற்றும்
மாறில் செல்வமீண் டுதவிடு மன்னியா டினர்கட்
கீறில் சீருறுகச் சபதீர்த்த மேலிசைப் பாம். (௨௩)

கருடதீர்த்தாதிச்சருக்க முற்றும்.

---

சிவமயம்.

# கச்சபதீர்த்தச் சருக்கம்.

விலையிலா மணிக்குல முறுசைய மால் வெற்பின்
மலைய மாதவன் கமண்டல வயிற்றினின் றெழிற்கு
வலைய மேற்குண திசைக்கொடு மகரநீ லெவு
மலையி னுற்ற பொன்னியிற் சிலதீர்த்த முண்டாங்கு. (க)

சந்த முற்றிடக் காவிரி வாரணந் தாங்கிச்
சுந்தரந் திகழ ரம்பைகள் சூழ்வுறப் புலவோர்
வந்திறைஞ்ச வச்சிர மெடுத்தே கலின் வானாட்
டிந்திரன் றனக்கிணை யெனப்புவி யிடையி லங்கும். (உ)

பெருமை மேவித்தென் கீழ்த்திசை யடைந்து மேற்பிறங்கல்
விரவு சோதி கண்ணுற்றொரு பூதமாய் வெந்தீப்
பொருவுந் தன்னிடத் தடைந்துளோர் கொடுவினை போக்கி
யுரமுறும் பகரேந்தி கலியமனை யுறழும். (௩)

பொருவில் காருருக்கொடு நிசியலை யுறப் போந்து
நிருதியாகி மீனிவர்ந்து வாருண முறநிலவி
மருவுபாசி யென்றிடல் கொடு வருணனாய் மண்மே
லருண மூர்ந்துயிர்க் குயிரதாய னிலமா யோங்கும். (௪)

ஈசன்றன் பதிமருங்கி னுற்றுயர் தன மெய்திப்
பேசலுற்றிடு மளகையோன் புரைதரும் பெரிது
வாச நீடறு கணிந்து காமதகன நிரப்பித்
தேசின் மிக்கவீ சானனிற் சிறந்திடு மன்றே. (௫)

துன்னினோர் தமக்க சோகத்தோ டஞ்சுகந் தோன்ற
மன்னிவேங்கை நீடிபங்கொடு குறிஞ்சியாய் வழிக்கோள்
பன்னிடும் பொருள் பறித்து மேல்விடலையும் பறித்துக்
கன்னியுந் தரித்தோதிடு பாலையைக் கடுக்கும். (௬)

மால டைந்துசிற் றிடைச்சியர் பயின்றுமான் மருவிக்
கோல முற்றிடு கலுழியும் பூவையுங் கூடி
யேலு முல்லைதா மரைவயல் வஞ்சிநீ டிலஞ்சி
பாலி சைந்தருச் சுனமுறு மருதமாப் படரும். (௭)

கடல் ணைந்துழுத் தரும்பிடு கடிமலர்ப் புன்னை
மடல் விரித்தெழு கேதகை பட்டின மருவித்
தடமி சைந்திடு நெய்தலாய்த் தயங்கிடு மினைய
புடவி மீதுளோர்க் கமுதமாய் விளங்குமப் பொன்னி. (௮)

கலை யறிந்தன மேற்கொடு கலைமக ளாகி
மல ரணைந்துவண் டிகிரிசங் கேந்திமே லவண்முற்
றில கெழிற்றிரு வாகிவெற் பிடத்தினிற் றோன்றி
யல கினீடறம் விளக்கலி னம்பிகை நிகர்க்கும். (௯)

புனையு மஞ்மண வியாழையும் புகல்பர னுருவாய்த்
தனையொத் தோங்கிடு காவிரி தலிற்றவழ் காற்றுங்
கெனையர் மேற்படிந் திடினும்பட் டேகிடுங் காலை
யனையர் வெம்பவ மனைத்து மேற்றகன்றிடு மன்றே. (௰)

போற்று காவிரி பொருந்துகால் பொருந்திவெம் பவங்கண்
மாற்று மேலதை நோக்கினோர் மலர்க்கைதீண் டினர்க
டோற்ற திற்படிந் துளோர்பவந் தொலைவுறு மென்னச்
சாற்ற வேண்டுமே யெவர் தரிசனத்தினுஞ் செலுமால். (௧௧)

பன்னு கங்கையின் மூன்றுநாட் படிந்திட யமுனை
தன்னி லைந்துநாட் டோய்ந்திடத் தணந்திடும் பாவ
முன்னு காவிரி யொருதின மூழ்கிடி லகற்றும்
பின்னு மவ்வுட லளவுசெய் பிறங்குவெம் பவமும். (௧௨)

வன்ப கைப்பிணி தவிர்த்திடு மருவுமெய் ஞ்ஞான
மின்ப மெய்திடுந் திலத்துட னப்புன லேற்றுத்
தென்பு லத்தவர்க் குதவிடிற் றிகழவர் மரபிற்
றுன்ப மார்நிரை யத்துளோ ரடைகுவர் சுவர்க்கம். (௧௩)

இயல்கொள் சையமா தியவிட மெவற்றினு மிசைத்த
பயனு றத்தரு மவற்றினிற் பகருமா னைக்கா
பய லகற்றுமை யாறுதென் குடந்தையொண் மருதூர்
வியலு றும்புகழ் மயிலையா தியதலம் விசேடம். (௧௪)

கூறி டுந்துலா மதியினிற் கூடிநீ டுறுபத்
தாறு கோடிதீர்த் தங்களும் பொன்னியி னமரும்
மாறி லம்மதி யன்னதின் மருவியா டினர்க
டேற வற்றெலாஞ் சென்று தோய்பயனதூஉஞ் சேர்வர். (௧௫)

கந்த மார்தொடைக் கவேரன்றன் கன்னிகை யாகிச்
சிந்து மன்னவன் றனக்கொரு துணைவியாய்த் தெரிக்கு
மிந்த வையகத் துயிர்களுக் கன்னையா யிலங்கு
மந்த மாநதி மான்மிய மநேகமுண் டின்னும். (கசு)

மேவு மந்நதி தனில்வட புறந்தனில் விளங்குந்
தாவில் கச்சப தீர்த்தமாந் தனித்துறை யதற்கு
மாவி லங்கிடு தருமுநி மருவுகச் சபனே
காவ லன்புகழ் வீரபத் திரனெனுங் கடவுள். (கஎ)

வாம தேவனங் கதற்கிசை தேவதை வயங்கக்
காமர் வண்டுறை மூழ்கியெட் கலந்தபோ னசநற்
றூம முற்றிடு பவிகை தானியந்தரு தகையோர்
பூமி காவல்செய் திடுவர்மேற் கொடுவினை போக்கி. (கஅ)

அவமில் சீருறு கச்சப னத்துறை மருங்குத்
தவமி யற்றினன் சிலபகல் பிறைமதிச் சடையோ
னுவமை யில்லதோர் வாமதே வத்தனி யுருவோ
டவ னுதித்தன னேரிடத் தலகிலா தவரின். (கசு)

ஆன்ற மாதவன் பணிந்தெழுந் தேத்திடு னமல
னேன்ற நீபெறு வரங்களென் னென்றன னனையோன்
வான் றயங்குனை யநுதினம் வணங்கநா னிறைவ
தோன்று மிவ்விடங் கொண்டுறைந் தருள்கெனச் சொன்னான்.

தாது லாமலர்க் கூந்தன்மால் வரைக்கொடி தன்னோ
டாதி நாயக னத்திற னுண்டினி துறைந்தான்
மாத வத்தனு மனமகிழ்ந் துறைந்தனன் வைகு
மேது கொண்டவன் பெரியனு லத்துறை யிலங்கும். (உ0)

பேசு மத்துறை படிந்தவன் பெரிதுகந் துறையு
மீச னைப்பணிந் தளவில ரின்பநீ டுற்றார்
மாசின் மாதவக் கவுதம முனிவரன் மகிழ்ந்து
வாச முற்றிடு தடந்துறை வளமினிப் புகல்வாம். (உஉ)

கச்சபதீர்த்தச்சருக்க முற்றும்.

———:※:———

உ

சிவமயம்.

# கௌதமதீர்த்தச் சருக்கம்.

தோற்று கச்சப தீர்த்தத் துறைக்குமேற்
காற்றல் சாலு மடகேணை யொன்றினிற்
றேற்றுங் கோதம தீர்த்தத்து றையொன்று
போற்று மாங்கதைப் போற்றுசண் டேசனே. (க)

கட்டு ரைத்த கவுதம ஞனிப
சிட்ட னுங்குறுஞ் சென்றதி னுடியே
விட்டி டிற்புவி கோதனம் வேதியர்க்
கிட்ட மாமனத் தெண்ணிய வெய்துவார். (உ)

வடங்கொள் கொங்கை யகலிகை மற்றதிற்
படிந்த புண்ணியத் தாலோர் பவத்தினுற்
றிடங்கொள் சாபச் சிலையுருப் போக்கியுற்
றடைந்த னள்கண வன்றனை யாதிநாள். (௩)

இன்னு மெண்ணில ரேந்துமப் பூந்துறை
தன்னின் மூழ்கித் தரணி புகழ்ந்திட
மன்ன ராகி மகிழ்வோ டிருந்துபின்
பொன்னி லத்திற் புலவர்க ளாயினர். (௪)

ஆற்றல் சாலு மருந்தவக் கோதமன்
போற்றி டுந்துறை மாண்பு புகன்றனஞ்
சாற்றி டொண்புகழ் சாருல கெங்கணுந்
தோற்று பூசத் துறை வளங் கூறுவாம். (௫)

கௌதமதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கல்யாணதீர்த்தச் சருக்கம்.

காவிரித்தென் புறமதனிற் கல்யாண தீர்த்தமதைக் காப்போ னந்தி
தேவனெந்தம் மருதீசன் முனிவனுமோ மசனாசு தெரிக்கு மூல [வென்ப
மேமவிரண்டோ டொன்றுறுசேய்த் தத்துறையின் குணக்குமேற் கெல்லை
மேவதனிற் படிவற்கு நினைந்தெழுமுன் சிலவினைகள் விட்டுநீக்கும். (க)

பரவுமந்தத் துறையிலறிந் தேனுமறி யாதேனும் படியினோர்காற்
பிரமகத்தி முதலான கொடுவினைக ளுடனகலும் பிணிபினீங்குங்
கரமதனாற் பசுவொடுபொன் முதலியவே தியர்க்களித்தோர் கயிலைசேர்வர்
திரமுறுமஞ் செழுத்தினையங்கிருந்துவிதிப்படியுரைப்போர் சிவனேயாவர்

கின்னரர்கள் கிம்புருட ரியக்கரிராக் கதரசுரர் கிளைகொள்வானோர்
பன்னகர்பா ரிடத்தலைவர் கந்தருவர் தவமுனிவர் பயிலுஞ்சித்தர்
பின்னுமுறு மனிதரொடு பிறர்களுமத் துறைப்படிந்து பெரிதுமாங்கே
நன்னியம முடித்திறையோன் பதம்பணிந்து மகிழ்வுறுவர் நாளுமன்றே·

வளந்தருமத் துறைபடிதற் கநுதினமும் விசேடமதா மதியின்வார
மளந்திடுமன் னவற்றதிக மதற்கதிக மதிமுதனா ளதற்குமேலாய்த்
தெளிந்ததுநீ டமாவாசை யதற்கதிக மெனலாகுஞ் சீறுதிக்கொள்
விளங்குமிரு சுடர்தொடுநா ளவற்றினுக்குந் தைப்பூசம் விசேடமாகும்.

பூசமதிற் படிந்திடுதல் விசேடமதா லத்துறைக்குப் புகலுநாமந்
தேசமுழு வதும்பூசத் துறையென்ன வெவ்வுயிருஞ் சென்றுமூழ்கி
மாசுறுதீ வினையகற்றிப் பரனருளாற் பேரின்ப மருவலாலே
பேசலுறுங் கல்யாண தீர்த்தமென வொருநாமம் பெரிதுமன்றே. (ரு)

திடமுறுகார்க் கோடனெழிற் பரிச்சித்து தனைக்கடித்த தீமையந்தத் [தி
தடமுறுதீர்த் தந்தனிற்றோய்ந் தகன்றதுவெங் கலியலைக்கத்தளர்ச்சியெய்
யிடமுறுமே தினியிடத்தி னலைந்திடுநா ளத்துறையுற் றினிதுமூழ்கி
நிடதநெடு நாடுமனை மகவடைந்தா னளனென்னு நிருபனம்மா. (சு)

வந்துபெருஞ் சேனையுட னெதிர்நின்று நான்வணங்கா வயிரமேற்கொண்
டிந்தநெடு நைமிசத்திற் றருப்பையினா லெளியேனை யெறிதலுற்று
முந்துயிர்கொண் டிடுபாவம் புகல்பூசத் துறையினிடை மூழ்கியன்றே
யந்தமில்சீ ருற்றபல பத்திரன்வீ டுற்றின்ப மடைந்தானீடு. (எ)

தண்ணிதழி வேணியனுக் கன்புடையீர் பகீரதனுந் தவத்தின்மிக்கோன்
விண்ணிலுறு கங்கையினைப் பூதலத்தின் வரவழைத்து மேலைநாளி‹
லண்ணலுறு தனதுகுலத் தறுபதினா யிரவர்கதி யடையுமாறு
பண்ணியதத் துறையினிடைத் தைப்பூசந் தனிற்படிந்த பயனாலேயன்றே.

சிவசிசியி லொருகொடியோ னத்துறையிற் படிந்தெழுந்து சென்றுகோயி
லவணுறுசில் பொருளிரவிற் கவர்ந்துபுறத் தணைந்திடுங்கா லவனைத்தூதர்
கவனமுறக் கொண்டியமன் முன்விடலு மவனிறையோன் கங்குறன்னி,
புவிபுகழ்பூசத்துறையிற்படிந்திட்டாய்கயிலையிடைப் போவென்றுய்த்தான்.

வேறு.

முன்ன ரொத்துணை யோர்களத் துறையிடை மூழ்கி
யின்ன நீர்ந்தின்ப முற்றன ரித்தகை யோரு
மன்ன திற்படிந் தெய்திய தறைதலுற் றனமீண்
டின்று முண்டுபல் கதையதற் கேய்ந்துழி யறைதும். (கO)

கல்யாணதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# சேடதீர்த்தச் சருக்கம்.

ஆடனாக மணிபவற் கன்பினீர்
நாடு பூசத் துறையி னலந்தரு
பீடு சால்கதை பேசினு மினிச்
சேட தீர்த்தச் சிறப்புப் பகருவாம். (க)

ஆதி காலத் தரவின் குலத் திறை
பூத லத்தைப் பொறுக்க வலியிலா
னேத முற்றுட லொல்கி யினிச்செயல்
யாதெ னப்பிறை சூடியை யெண்ணி னான். (உ)

இன்ன செய்து மெனத்தெளி வெய்தினான்
மன்னு மிப்படி மீது மருவினான்
பொன்னி யங்கிடு பொன்னியி னத்தலத்
தன்ன தண்டுறை யாடின னாடினான். (ங)

மகித லத்தைப் பரிக்கும் வலியலா
தகில லோகமு மாற்றிடு மாற்றல்பெற்
றிகல்வின் மேரு விடைமரு தீசனை
மகிழ்வு றப்பணிந் தானெதிர் வாழ்த்தினான். (ச)

நற்றி றச்சிவ ஞானத் திருவொடு
மற்று நீடு வரங்களு மின்புறப்
பெற்று னன்விடை கொண்டு பெயர்ந்தன
னுற்ற னன்ற னிலகு முலகிடை. (ரு)

மன்னு சேடன் மருவிமுன் னாடிய
தன்மை யாலத் தடந்திரைப் பூந்துறை
யன்ன வன்றிரு நாம மணிந்தது
'துன்னு மெவ்வயி னோருந் துதித்திட (சா)

சேடதீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# கந்ததீர்த்தச் சருக்கம்.

அந்த மில்லவன் பெயரினோ டமர்ந்துதன் னிடத்து
வந்து மூழ்கினோர் பவந்துலைத் தெதிர்வலி வழங்குஞ்
சந்த முற்றிடு தீர்த்தத்தின் றனிச்சிறப் புரைத்தாங்
கந்த தீர்த்தமான் மியமினிக் கட்டுரைத்திடுவாம். (௧)

கூறி டத்தகைச் சேடதீர்த் தத்துறைக் குணபாற்
றேறு சீர்பெறு கந்தமா தீர்த்தமொன் றுளது
மாறில் செல்வமும் விசயமுங் கீர்த்தியும் வழங்கு
மாறு மூன்றெனுந் திதியினு ளினிலணைந் தாடின். (௨)

ஆர மேருவைப் பறித்தெடுத் தம்மனை யாடும்
பாரி டங்களீ ராயிர வெள்ளமும் பரவுங்
கூரி லங்குவச் சிரத்தனுங் குலவுபல் சுரரும்
வீர வாகுவே முதனவ வீரருஞ் சூழ. (௩)

வண்ண வேற்படை முருகவேள் கயிலைமால் வரைநின்
றெண்ண ரும்புகழ்ச் சேய்ஞ்ஞலூ ரெய்திமுச் சுடர்க்க
ணண்ணல் பாசுப தாத்திர மளித்திடக் கொள்ளா
வுண்ம கிழ்ச்சிமிக் கிடைமரு தெனும்பதி யுற்று. (௪)

மன்னு றுஞ்சர மருங்குதித் திலங்குமீன் வளர்த்துக்
கொன்ன வின்றிடு மயில்கொடு தானெனக் குலவும்
பொன்னி மாநதித் தென்புடை புகுந்தெழி லுறையு
முன்னி சைத்திடு துறையிடை மூழ்கினு னினிது. (௫)

மருத வாணனைப் பணிந்தெதிர் வரஞ்சில வேற்றுக்
கருது தென்றிசை மயேந்திரங் கலந்துசூ ரனைநேர்
பொருது வென்றவன் படைஞர்கள் போற்றிடு மிமையோ
ரிருதி றத்தரும் விசும்பினிற் குடிபுக விழைத்தான். (௬)

அந்த வாண்மயி லூர்திவந் தாடிய திறத்தாற்
கந்த தீர்த்தமென் றிசைப்பர்கள் கருதுமத் துறையைச்
சந்த நீடயி ராவதஞ் சாற்றுமத் தலத்தில்
வந்து சோதியைப் பூசித்த வாறினி வகுப்பாம். (௭)

கந்ததீர்த்தச்சருக்க முற்றும்.

உ

சிவமயம.

# ஐராவததீர்த்தச் சருக்கம்.

——:(*):——

செஞ்சலசப் பொகுட்டிலிருந் தருண்மடந்தை புகழ்வாக்கின் செல்விக்கங்கோர், விஞ்சு கதிர் மணியெழிற்பொன் னரிமாலை யுகந்தளித்தாள விளங்குமன்று, ளெஞ்சலில்சீர்ந் துருவாசற் கீந்தனளன் னவனிமையோ ரிறைவற்கீய, நெஞ்சினிடைக குறித்துறுபொன் னுலகடைந்தா னவன் சென்ற நேரத்தன்றன். (௧)

கனிமொழிச்செந் துவர்தழ்ப்பொற் கலசமுலை மேனகைவெண் கவரிவீச நனிமலர்ப்பூங்குழற்கயறகட் டிலோத்தமைமென்சதிமுறையி னடிபபமீது தனிமதித்தண் குடைநிழற்றக் கடங்கவிழ்வெள ளானைமிசைத் தகைமந்தரப், பனிமதுததண் மலர்சொரிந்து வானவர்போற றிடமறுகிற் பவனி போந்தான். (௨)

ஆங்கவனைக் கண்டுமுனி வரன்சிலவா சிகள்கூறி யதனையீந்தான்
றீங்குவரு காலமதி கெடுமன்றே யன்னவனோ செங்கைநீட்டி
வாங்கிமத யானையின்மேல் வைத்தனன்மற்றது உம்விலங்கினமரபதன்றே
தாங்கிலதாய் மறுகினிடை வீழ்த்தியெதிர் தேய்த்தததுதன் றாளினானே. (௩)

கண்டதனைத் துருவாச முனிவரனிந் திரற்சீறிக் கரியநஞ்ச
முண்டுலகங் காத்தபர னடியவர்கள் விருப்பமுறு தொதுக்குஞ் செல்வங்
கொண்டுமெதங் கொண்டொருகை கொண்டெதிர்நான் கொடுத்ததனைக்
கொண்டுநீடு, மண்டுகளி யானைமிசை வைத்தனையாங் கதுசிநத மதித்திடாது. (௪)

நீயிவணித் துணையிறுமாப் பெய்தியது செல்வமதி னிலையினன்றே
வாயதுதெண் டிரைக்கடலிற் சிந்திடுக யானையுங்காட் டானையாகிப்
பாயபுவி மீதுழல்க வெனச்சபித்தான் சபிதிடுமுன் பரவைமீது
மேயபெருந் திணிச்செல்வஞ் சிந்தியதீ சனைக்கண்டோர்வினைகளென்ன.

துறந்திடக்கண் டெழிற்செல்வ மிந்திரன்மா துயரினொடு துனுங்கிநின்று ணிறந்தமைந்த சால்புடையா ராயினுமென் றும்வெருளி னிசைக்கு மேலோர், சிறந்திடுசெல் வமுமமிர்து மனையகடல் கடைந்துகொண்டார் தேவர்பின்றூண், மறந்தநும்பு வெண்களிறுங் கிரியுருவா யுலவியது வையது. (௫)

வேறு.

தன்னுயிர் தனையும் புரந்துதம் சார்ந்தோர் தம்மையும் புரந்திடுங் கொற்ற
மன்னனைச் சேர்ந்து வாழ்வதே பெருமை வறுமையாற் பிறரினுற்றுயருந்
துன்னிடு விதிர்ப்புந் தான்மிகமருவித் தொடர்புறத் தனையடைந்தவரு
மின்னல்கூர்ந் திடக்கண் டிருக்குமே மையைச்சேர்ந் திருந்திடலேழமை
த்தன்றே. (௭)

வேறு

பூவலயத் தலேந்திடுநா ளொருபகலோங் கிடைமருது பொருந்திக்கோடு
மேவிமணி யுருக்கொண்டு துதிக்கைகொடு தனைப்போல விளங்குநீடு
காவிரிக்க ணுறுகந்த தீர்த்தமதின் றென்றிசையிற் கதழ்விணேகு
மேவிரண்டின் வளர்விக்கி னேசுரதீர்த்தந்தனைச்சென் றெய்திற்றம்ம. (அ)

சென்றபுனல் படிந்திடலு மணிமாசு கழுவுற்ற திறமேயென்னத்
தொன்றிலகு தனதுருவந் தோன்றிடக்கண் டுவகைமனந் துளும்பவுற்றுக்
கொன்றையறு கணிதருசெஞ் சடையவனை மருதடியிற் குடியுற்றானைத்
தன்றிருக்கண் களிகூரக் கண்டுபணிந் தேத்தியது தகைமைதோன்ற. (௯)

வேறு.

கருவினிடைப் புகாதபடி யெளியேன்மீது
காத்தியென நின்றிரந்து கருத்துங்கண்ணு
மொருவகைமீண் டிடக்கொண்டு குணபாற்சென்றுங்
கொருபதியை யுறைபதியாக் கருதிவைகித்
திருமருவு நிறத்தன்முத லெவர்கள்வாழ்வுஞ்
செஞ்சடைவா னவனடியைப் பூசைசெய்து
பொருவிலவன் றரப்பெற்ற தென்னத்தேறிப்
பூசிப்பான் றுனுமுறப் பொருந்திப்பேசி. (௧0)

கைகலுறு முப்பொழுதுந் தனக்குத்தூய
வடிவருள்கா விரித்துறையின் மருவிமூழ்கிக்
கைகலந்த புனலினொடு நறுமென்போதுங்
கருத்தில்வள ரன்பினொடு களிப்புங்கொண்டு
மைகலந்த தனிமிடற்று மருதவாணன்
மலரடியைப் பூசித்து வணங்கிப்போற்றப்
பைகலந்த வரவினொடு மதியஞ்சூடு
பரன்சிலநா ளணைந்திடுமு னதிரேதோன்றி. (௧௧)

ஈண்டுறுமெய் யன்பினொடு நமைநீபூசை
யியற்றியதான் மிகமகிழ்ந்தோ முனக்குநம்பால்
வேண்டுவதென் னிசைத்தியெனப் பணிவுற்றம்மா
வெய்யதரு வாசமுநி கொடுத்தசாப

மாண்டதெழிற் பொன்னியிடைப் படியுமுன்னர்
மன்னிடுகின் னருளதனு லினியெந்நாளுங்
காண்டலுட னின்மலர்த்தாள் பூசித்தீண்டே
கலந்திருக்க வருள்கவென வுரைத்தேத்தி. (கச)

இன்னணமக் களிறுரைப்ப மருதவாண
னித்தலத்தி னமையொருகா லருச்சித்தோர்கள்
மன்னுதனிச் சிவலோக மெய்துவார்கள்
வச்சிரத்தோ னமதிடத்தி லன்பனாகு
மன்னவன்பாற் சென்றிருநீ சின்னாள்பின்ன
ரணிமருவு சிவபுரியி னடையலாகு
மென்னவுரைத் தானதுமா றரைப்பவஞ்சி
யிமையோர்கள் போற்றவிண்ணு டுற்றதன்றே. (கரு)

நினைவரிய புகழ்விக்கி னேசுரதீர்த் தத்துறைமுன் னிலவுநாற்கோட்
டனையகளி றுடுதிறத் தாலயிரா வணத்துறையென் றறையுநாமம்
புனைதரலுற் றிட்டதம் துறைபதியு மதன்பெயராற் பொலிந்ததம்ம
வினியினிய நெடுஞ்சீர்த்தி வீரசே னன்கதையீண் டெடுத்துச்சொல்வாம்.

ஐராவததீர்த்தச் சருக்க



உ

சிவமயம்

# சருக்கவகராதி.



சருக்கவகராதி முற்றும்.

சிவமயம்

# வீரசேனச் சருக்கம்

மலைப முறுசந் தெழிற்கோடு மலையு மதவா ரணக்கோடு
நிலைகொள கடலின் பெருவயிறு நிறையத தூர்க்குந் தனைபொருநை
யிலகு கரைமேற் பரிவேட மினிது சூழ வொளிருமதி
வலைய மென்னத திரையகழி சூழவுறுமோர் வளமபதியே. (௧)

பார முறுமவ் வளமபதிவீற் றிருந்து முறையிற் பார்புரப்போன்
கூர்மை தோன்றி யெழிறழைதது மதுகை மலர்ந்து கோபங்காத்
தாருங் கொடிய கொலைபழுததிட் டிலகுநெடுவே லங்கையினான்
வீரசேன னெனும் பெயரா னொருவன் கணைவில் வேளெழிலான். (௨)

அன்றொருநா ளடவிபுகுந் தடல்வெஞ் சேனை தன்னோடுஞ்
செந்நாய் கவரி புலிகரடி திரிகோட் டிரலை மரைகளிறு
முன்னா மிருகம பலநாடி முடுகிவேட்டஞ் செயுங்காலை
மன்னான் மறையோன வேட்டைவியப் பறிவா னொருவன் மருங்குற்றான்

வருண னெனவே குடதிசைநாட் டரசன் வண்கார் முகம்வளைத்திட்
டுரைசெய் யமபின் றானைமிக வுய்க்குங் காலை யொருவாளி
பொருவில் விலங்கா மொருகேழல் வயிறறுட் புகுந்து புறத்துருவி
யருகு விலஙகா மறையவன்மேற் பட்டசவனும் பட்டானால்.

வேந்த னதுகண் டுளநடுங்கி விரைவி னெய்தி யருமறையோன்
சோர்ந்து கிடத்தல் கண்டுடலஞ் சோர்ந்து விழிநீர் சோர்ந்திடநின்
றார்ந்த விலங்கின் குழுமறைவி லனையா னின்ற தறியாமே
கூர்ந்த கணைவிட் டிவன்றன்னைக் கொன்றே னந்தோ வென்செய்தேன்()

என்ன விரங்குற றிடுங்காலை யெதிரோ பிரம கத்திதனி
மன்னுங் கரிய பெருவடிவும வளைவெள ளெயிறுஞ் செம்மயிரு
முன்னுங் கொடிய குரலுமிருப் புலககை யோங்கு நெடுங்கரமுந்
துன்ன வணைந்து பழிதருதி யென்ற தரசன் றேள்பற்றி. ([illegible])

வேறு.

என்ற போதிறை யேங்கின னிலகுமெத் திசையு
நின்றி டவ்வுரு நோக்கின னிடுகணை முகிழ்த்தான்
றன்று பேய்பிடித் திட்டினை மத்தர்கள் சுவைக்கண்
மன்ற லம்பருந் தினமொன விளங்கினன மாதோ. (௭)

ஏங்கி மன்னவன் சிலபக லுழன்றிடு மேல்லை
பாங்க ருற்றிடு குரவரும் பனவரும் பாராத்
தாங்கு மிவ்வினை புண்ணிய தீர்த்தங்கள் சாரி
னீங்கு மன்றிமற் றெவற்றினு நீங்கரி தென்ன. (அ)

பார்த்தி பன்றனைச் சிவிகையிற் பரிவொடுங் கொண்டு
சூர்த்த வாட்படைப் படைசில சூழுற வெய்திக்
கூர்த்த புண்ணியத் தலங்கள்சென் றவற்றிடைக் குலவு
தீர்த்த மானவை மூழ்குவித் திங்ஙனஞ் செல்வார். (கூ)

நலங்கொள் செம்பிய னுடனைந் தன்னதி னுப்ப
ணிலங்கு பேரிடை மருதெனு மெழிற்பதி மேவித்
துலங்கு காவிரிப் பூசநீர்த் துறையிடை விடுத்தா
ரலங்கல் வேலினு னெல்லைசென் றுடினை னந்நீர். (க0)

முழுகி மேனிமிர்ந் திடுதலு மூழ்கின மூரிப்
பழவி னைக்குலம் பனவனைப் படுத்திய பழிமற்
றெழுத லுந்தொரு கருவரை யெனவெதிர் நின்ற
தெழில்கொள் பூந்தொடை யவன்சுமை யெறிந்தவ னெத்தான்

காவன் மன்னவ னோடிமுன் பணிந்தது காணு
யாவ ரும்வியப் பெய்துழிக் கொடும்பழி யெழுந்து
தாவி யோர்புறஞ் சென்றதூஉந் தார்பதி தெளிவு
மேவி னெங்கினர் மிகுமகிழ் வெய்தினர் மேலும். (கஉ)

வைய கத்தினித் தலநிகர் வளந்திகழ் தலனுந்
துய்ய பூசநீர்த் துறைநிகர் துறையுமே றிலையென்
றுய்ய யாவருந் தெளிந்தெங்க ளறிவித்த வுனக்குச்
செய்வ தென்னநா னீயுமித் தலத்திடைச சேர்ந்தாய். (கங)

வருதி யாலென வுரைத்தன னுலைய மருவி
மருத வாணனைப் பணியவுள் புகுந்தனன் வாட்கைத்
திருகு வெஞ்சினக் களுதிபர் தடைகொடு தியங்கி
விரவு மப்பழி நின்றது வாயிலின் வெளியே. (கச)

அன்ன மென்னடைப் பணைமுலை யம்பிகை யகத்து
முன்னு மத்திறஞ் சோதியா யெழுந்தருண் மூர்த்தி
தன்னை நீள்பெருங் கயிலையார் தனிமரு தோர்பான்
மன்னு தாணுவைக் கண்டெதிர் மன்னவன் பணிந்து. (கரு)

அகில காரண நிற்குண நிராமய வமல
சகுநி ரஞ்சன நித்திய தற்பரா னந்த

## வீரசேனச் சருக்கம்.

சகள நிட்கள சங்கர சதாசிவ மருத
மிருநி ழற்கண்வீற் றிருந்தருள் வித்தக சரணம். (கசு)

தரணி மீதுணர் விலாதுசெய் கொடும்பவந் தன்று
னரகெ லாமுழன் றிடத்தகு நாயினன் றன்மேற்
கருணை வைத்துநின் னடிமையாக் கியபெருங் கடவுண்
மருத நாயக பணைமுலை மணாளனே சரணம். (கஎ)

என்று நெஞ்சநெக் குருகிட விருகையுந் தலைமேற்
றுன்று மஞ்சலி முகிழ்த்திட விழிகணீர் சொரியக்
குன்று ருதவன் புருவமாய மொழிகளங் குழற
நின்று பற்பல துதித்தனன் களித்தன னீடு. (கஅ)

பின்னு மித்தலத் திவ்வுட லளவுநாள் பிறைகொண்
மன்னு வார்சடைப் பரமனை வணங்குவே னிருந்தென்
றுன்னி நேரிய னொடுமெகிழ் துறைந்துபன் னாட்பின்
வன்னி சூடிதன் னருள்கொடு மருவினான் கயிலை. (கசு)

வீர சேனனென் றிசைபெறு பெருந்திறல் வேந்தன்
கோர மாகிய பழிதொலைத் தரனருள் கூருந்
*தார நீடெழிற் றனிவரை சார்ந்தமை யுரைத்தேம்
பார சித்திர கீர்த்திதன் காதைமேற் பகர்வாம். (உ)

வீரசேனச்சருக்க முற்றும்.

---

உ
சிவமயம்

## சித்திரகீர்த்திச்சருக்கம்.

முத்தமிழ் மணக்குங் கூடன் முதுபதி யிடத்தில் வாழ்வோன்
கொத்துறு வேம்பின் கண்ணி குலவுறு குவவுத் தோளான்
சித்திர கீர்த்தி யென்னத் தெரிக்குமோர் தென்ன னேரி
னித்திலஞ் சொரிவில் வேலை நேருமெய்க் கல்வி மிக்கான்

இன்னவ னகரின் பாங்கோ ரெழிலுறு மலர்ப்பூஞ் சோலை
தன்னிடை யொருநா ளேய்ந்து தனிமையி னுலாவுங் காலை
மன்னுறு தோழி மார்பின் வந்திட முந்து மேவித்
துன்னலர் பறித்திட் டாண்டோர் துடியிடை மயிலைக் கண்டான். (உ)

---

*தாரம்=வெள்ளி.

கண்டிவ ளங்கன் வாழ்வோ கமலமேல் லியலோ வன்றி
யண்டர்கட் கின்ப நல்கு மரம்பையோ சசியோ விந்த
மண்டலத் தணங்கோ வென்ன மனத்திலே யைய முற்றான்
கொண்டிடு மிமைப்பு நோக்கிக் குறிக்குமவ் வையந் தீர்ந்தான். (௩)

அன்னவள் சிறப்பு நோக்கி யகத்துறு வேட்கை நோக்கித்
துன்னுநம் மகத்த வாவுஞ் சொற்றுமிங் கிவட்கென் றெய்திப்
பின்னர்நின் றணங்கென் னெஞ்சம் பேதுறத் தகைத்த தந்தக்
கன்னல்வே ளம்போ வுன்றன் கண்ணம்போ பார்த்தி டென்றான். (௪)

என்னைநீ தனியே நிற்ற லிருளையர் வரவு பார்த்தோ
மன்னுமென் வரவு பார்த்தோ வாய்மலர்ந் தருள்க வென்று
முன்னிலை யாக்க வெண்ணி மொழிந்தனன் மொழியு முன்ன
ரன்னமென் னடைப்பூங் கோதைப் பாங்கிய ரணுக வந்தார். (௫)

அன்னவர் தமிலோர் பாவை யரசனை நோக்கி யைய
வின்னளுன் கிளைஞர் தம்மு ளின்னவர் புதல்வி யன்றே
மன்னவ ரிடத்திற் பேசி மணம்புரிந் திவளை யின்பந்
துன்னுக முறையி னென்றாள் சொல்லிய திசைவென் றுற்றான். (௬)

கதுமென விருக்கை யெய்திக் காதன்மந் திரிகட் கோதி
முதுவரக் கிளைஞர்க் கோத மொழிதரு மனைய ரந்த
மதுமலர்க் கோதை மின்னை மனமகிழ்ந் தினிது நல்கப்
புதுமணம் புரிந்து கூடிப் புகலுறு மின்ப மார்ந்தான். (௭)

தறைபுக ழனைய மாதின் றன்பெயர் சுகுணை யன்னாள்
பொறையினிற் புகல்பூ மாதும் பொற்பினிற் பூவின் மாது
முறழ்பவ ளவர்க ளாவி யொன்றுட லிரண்டின் வாழ்நா
ளறமிகப் புரிந்து மைந்தர்ப் பேறிலா தலக்க ணுற்றார். (௮)

நணிபகல் வருந்திப் பின்னர் நடபதி மதலை யெந்தத்
துணிதரு வினையா லின்றே தொழுதுமுப் பொழுது மோர்ந்த
முனிவரை வினாது மென்ன மொய்குழ லணங்கி னோடுந்
தனிமுத லடியுட் கொண்ட சாபாலி யிடத்திற் சென்றான். (௯)

சென்றடி பணிந்து கையிற் செய்யவாய் புதைத்து முன்னர்
நின்றனர் கருணை கூர்ந்து நெடியபொன் மேரு விற்கொண்
டொன்றில ரிருக்கு மூன்றா ரிருந்தழ லொருங்கு கூட
வென்றவன் றன்னை முன்னி மேலவ னினிது கூறும். (௧௦)

மன்னமுற் பவத்தி னீயோர் வணிகனின் றனக்கப் போது
மின்னனே யுரிய காந்தை யினையள்பூ மடந்தை யானு

ளன்னதாங் குணர்ந்து நீமா லாகிமற் றணைந்தின் புற்றாய்
தானனுமப் பவத்தி னாலே தோன்றலிப் பவத்தி னில்லை. (௧௧)

திங்கடோ றினிது மேவுஞ் சிவநிசி விரத னோற்றாய்
பொங்குமத தவத்தி னாலே புரவல னாகி வாழ்தி
யிங்கென திடத்தி னீவி ரெய்திய திதற்கு நம்பாற்
றங்கிடு துயரந் தன்னை தகர்த்தனுப் புவன்கே ளீது. (௧௨)

இலங்குமங் கிரங்க டம்மி விசைக்குமஞ் செழுத்து நீடு
நலந்தரு நூல்க டமமி னவின்றிடு மறையு மெண்ணும்
பலந்தரு தேவர் தமமிற் பரமனு மதிக மென்னத்
தலங்களி லதிக மாகுந் தனியிடை மருது மன்றே. (௧௩)

மின்னிடை யிவடன றேடும் விளங்கிடை மருதி னெய்திப்
பொன்னியல் வாவி பொன்னி புகழுமை கருணை வாரி
யினனவை படிவுற் றீச னெழிற்பதம வணங்கிப் போற்றிற்
றுன்னுறு பவமு நீங்குந் தோன்றலும் விரைவிற் றேறனறும். (௧௪)

அங்கதன் பின்னர் மீனத தாதவன் புணரு நாளிற்
றிங்கள் சூடிறைக்கு நீடு திருவிழாப் புரிதி யென்றான்
செங்கதிர் வடிவேற் றென்னன சென்றவன் விடைபெற் றாங்குத்
தங்குமத் தீர்த்த மெல்லாஞ் சார்ந்தனன் மகிழ்ந்து மூழ்கி. (௧௫)

பெருநல மூலையா ளென்னப் பேசிடு வனிதை யோர்பான்
மருவுறு மிறையோன் செய்ய மலரடி வணங்கி யந்தத்
திருநக ரிடத்திற் சின்னாள் செலுத்தினன் செலுத்துங் காலைக்
கருநெடுங் கணணி னாளோர் காதலற் பெற்றாண் மன்றே. (௧௬)

அத்திற முணர்ந்த வேந்த னனந்த வெள்ளத் தூடு
மெய்த்தவர் புகழும் பொன்னி வெள்ளத்து மூழ்கி வேத
வித்தகர் தமக்கு மியார்க்கும் வெங்கன னயன மோங்கு
மத்தகன் றனக்கு மம்ம வளாயிலாப் பொருள்க ளீந்தான். (௧௭)

சித்திரத் துவச னென்னத் தெரிந்திடு நாம மந்தப்
புத்திரற் களித்தன் னானும் புகழுறு மனையுஞ் சூழச்
சித்திர நிழற்றத் தானை தழைவுறக் கூடல் சார்ந்தான்
பத்திர முறவீ சாகருப் பங்குனி விழாவுஞ் செய்து. (௧௮)

வேறு.

கைத்தி டுந்தொடைச் சித்திர கீர்த்திதன் காதை
யித்த கைத்தினித் திகழொரு மறையவ னெய்தி
யத்த லத்திறை தனைப்பணிந் தருள்கொடு விசுவா
மித்தி ரப்பெருங் குரிசிலா [illegible]யகதை [illegible]ரிப்பாம். (௧௯)

சித்திகீர்த்திச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்

# விசுவாமித்திரச் சருக்கம்.

பரவுதென் டிசைநீர்த் துங்க பத்திரா தீரந் தன்னிற்
சீர்புகழ்ச் சத்த கோடி சுராலய மென்ன வோரூர்
திருவள ரனைய வூரிற் றிகழுமோ ரந்த ணாளன்
தருமசிந் தனையு மீசன் றன்னடிக் கன்பு மிக்கான். (௧)

புலருமுன் னெழுந்து மூழ்கிப் புனிதநீ றணிந்து தும்பை
குலவுமல் லிகைவெண் முல்லை கோங்குமந் தாரை சாதி
நலனுறு நீல மாதி நால்வகை மலரும் வில்வம்
பொலிதுள வாதி யுங்கொண் டீசனை பூசிப் பானால். (௨)

காதலிற் பூசிப் போர்கள் கலந்திடு முலர்ந்த போது
கோதுறு சிலந்தி யெச்சங் குறையிதழ் சுருங்கல் வாட
லோதிடு மயிர்ச்சிக் குண்ட லூறுபுழுக் கடிக ளாதி
சோதியா தருச்சிப் பாரேற் குருடராய்த் துலங்கு வார்கள். (௩)

பூசனைக் குரிய மற்றைப் பொருள்களு மினிது சோதித்
தாசுள தகற்றல் வேண்டு மனையவன் சோதி யாது
தேசுறு பூசை செய்தான் றெரித்திடு மலர்க டம்மி
லேசுறு புழுவெட் டுண்ட மலருமொன் றிருந்த தோர்நாள். (௪)

விளம்புமக் குற்றந் தன்னால் விழிகளின் விடைய மேக
வுளம்பதைத் திரங்கி யேங்கி யுற்றவா றிஃதென் றோரான்
வளந்தரு வசிட்டன் றன்பான் மருவியீங் கெளிய னேற்குக்
களந்தரு குருடு வந்த காரண மென்ன வென்றான். * (௫)

மாதவ னிமயச் செல்வி மணாளனை யிதயத் தெண்ணி
யோதுவ னந்தணாள வுறுபொருள் சோதி யாமற்
சோதியர்ச் சனைசெய் தாயத் துணரினோர் பழுது போந்த
தாதலி னாத னாகி யரந்தையுற் றிடுகின் றாயால். (௬)

வேறு.

வூடன் மீதுநீ விழியொளி மருவுறு மெழில்செய்
மாட மீதுறு கொடியினான் மதிமறுத் துடைக்கு
மீடு தங்கிய விடைமரு தெனும்பதி யெய்தி
யாட கப்புன லாடுறி னையமின் றுறைய. (௭)

ஆண்டு றைந்திடு மருதநா யகனிவனை யடி[illegible]
காண்டல் செய்துநீ டன்பொடு கைதொழு [illegible]த்தில்
வேண்டு மியாவையு முதவிடும் விளைவிதே யென்றான்
பூண்ட காதலன் விடைகொடு போயினன் மறையோன். (அ)

ஏய்ந்த சிறிடை மருதிடை யிலங்கிடு வாளை
பாய்ந்து டெக்கலை யலைத்திடு பசும்பொனீர் வாவித்
தோய்ந்தெ ழுந்தனன் விழியொளி தோன்றிய தாங்கே
சூழ்ந்த காரிருள் நீங்கிடத் தோன்றுமா தவனைபோல். (கூ)

மனங்க ளித்தன னியாவரும் வியந்தனர் மதனை
யனங்க னாக்கிய விழியினு னடிமல ரிறைஞ்சி
யினங்கொ ளுண்மலர் சொரிந்தருச் சனைமுறை யியற்றிக்
கனங்கு லாஞ்சில வரங்களுங் கரங்கொடு சென்றான். (கO)

அத்த னுத்தனைச் சிலபக லகன்றபின் னகற்றி
நித்த னைபபணிந் தருச்சனை நிரப்பின திறத்தா
லித்த லத்துமேற் பிறப்பினி லிசைபெறு விசுவா
மித்தி ரசதனிக் குரிசிலாய்த் தவத்தினு மிருந்தான. (கக)

தவத்தின் மேலவ னுகிய காலையிற சலச
பவத்தி னுனினி தியற்றிடு படைப்பினுக் கவன்முன்
புவிக்கண் மாறுறு விதிதனை புரிந்தன னிவையு
நவிகக ரத்திடை மருதிறை வனைப்பணி நலனே. (கஉ)

சுருதி வல்லவ னுமொரு தூயவன மேவி
மருத வாணனைப் பணிந்துமேன் மாதவத் துயர்ந்த
விரிவி னைப்புகன் றனமினி விளங்குதென் கூடல்
வரகு ணப்பெருந் தென்னவன் மாண்பெடுத் திசைப்பாம. ()

விசுவாமித்திரச் சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்

# வரகுணதேவச் சருக்கம்.

எழில்கொள்பங் கயமாந் தொட்டி லிடைத்திரி கயல்க ளாட்டப்
பொழிலுறு மலாப்பூந் தாது போர்த்துவண் டிசைகேட் டாமை
விழிதுயில் குளனுஞ் செந்நெல் விளைதரு வயலும் வைகைச்
சுழிதரு புநீர் பாய்ந்து துலங்கிடுந் தென்னர் நாட்டில், (க)

தென்னர்நா டென்[illegible] திருநாதற் றிலக மாகிப்
பொன்னினி திருக்கு[illegible] புதுமலர் மாட மாகித்
தன்னுசீர்த் தொல்லை ய[illegible] புருடன்மா தவாத சாந்த
மென்னுநற் றூனமாகி யில[illegible] மதுரை தன்னில். (உ

திகழ்மதிக் குலத்தின் மேவு [illegible] லொவருஞ் செய்த
புகரில்சீர்த் தருமமியாவும் பொரு[illegible]தொரு வடிவு போல்வான்
பகர்தருஞ் சுந்த ரேச பாதசே கரன்றன் மைந்தன்
புகழ்வர குணநா மத்தான் புரவல ெனொருவ னன்னுன். (௩)

வன்பகை யரச ரியார்க்கு மடங்கலாய் வறுமை கூர்ந்தோர்க்
கன்புரு வாகி விண்ணி லமர்ந்திடு தருவா னுகி
யின்புறு மடநல் லார்கட் கின்மணக் கோலஞ் செய்யு
முன்பின ஞகி வைய முறைசெயு நாளி லோர்நாள். (௪)

மேவிய கழற்கா லொற்றர் விரைவின ரிருவ ரெய்திக்
காவத மனையின் மேல்பாற் கடத்திடைக் கவரி யேனக்
தீவிழி யுழுவை யெண்கு திரிமருப் பிரலை யாதி
மாவின மிடைந்த தின்று வாய்த்திடும் வேட்டை யென்றூர். (௫)

என்றலும் வேட்டஞ் செய்தற் கிசைவன செய்ய முன்னஞ்
சென்றிடு வோரை யேவிச் சிறந்தவாம் பரிமேற் றூனும்
துன்றிருஞ் சேனை சூழத் தூரிய முழக்கங் கேட்டு
மின்றயங் கெழிலி யஞ்ச வெய்தெனச் சென்றுன் மன்னே. (௬)

ஒற்றர்க ளுடன்முன் சென்ருே ருணர்சுவ டொதுங்குங் கானிற்
பற்றுயிர்க் கியமன் காட்டு முடலெனப் பார்வை வைத்து
மற்றவன் வீசு பாச மானவார் வலைசூழ் போக்கிச்
சுற்றவன் றூத ரென்ன நிறுத்தினர் தொடக்கு நாய்கள். (எ)

மன்னனும் வேட்டைக் கான மருவவங் கூற்றோர் வந்து
பன்னுதம் முயற்சி யாவும் பணிந்தெதி ரிசைக்க நோக்கித்
துன்னுறு விலங்கி னீட்டந் தொடர்ந்தினி யெழுப்பு மென்று
னன்னவ ருவகை துள்ள வமைந்தன ரனைய தாற்ற. (அ)

வேறு.

பம்பை தடாரி வலம்புரி பேரிகள் பாடுறு துடிநீடு
கொம்பின மாதி கடந்திடு மோதைகள் கூவிளி தருமோதை
யம்புவி மாதிர மண்டக டாகமு மார்தர வெழலோடும்
வெம்புலி மான்மரை பன்றிகு டாவடி மேவின வெதிர்சீறி. (௯)

கோலிச் சிலைமழை யோர்விட் டனரடு கோலுய்த் தனர்வளை யதன்மீதே
காலற் றனசில வீரிட் டனசில காதற் றனசில மிகநீடார்
வாலற் றனசில வோடுற் றனசில வாடுற் றனசில குடர்சோர
மாலுற் றனசில நாய்பற் றினசில மாய்வுற் றனசில விறன்மாவே. (௧0)

விரவிய மறவர்க ளெழுதரு படைகளின் மெலியுமு ளுதர மிகநீடுங்
கருணையின் வலைபல விடுபவ னெனவொரு கணைகொடு கானிடை வெகு
மருவுற விடவுழை புலிமுத லியபல வாளிகள் சிலவேவி [நூர
நிருபனு நினைவினை நிறுவினன் வனமதி னிலவின சோரியி னதியோடி.

இத்திற மச்செயன் முற்றிய தக்கண மெத்திசை விரு மெதிராக
மொய்த்தனர் மற்றவர் சுற்றிட மெச்சிடு முத்தமிழ் மாறனு மகிழ்நீடி
யுத்தம நித்தில வட்டம திக்குடை யுற்றிடு நீள்கதிர் மிசைசூழ
நத்தலை யுற்றக ழத்தியின் முற்றிடு நற்பதி சார்தர வருவேலை. (௧௨)

வேறு.

மதிவழி மன்ன னுற்று மாவியல் வேட்டஞ் செய்யக்
கதிரவ னுக்கித் தானுங் கலந்துநீள் குடபால் வெற்பி
லெதிருறு மரக்க ரொன்னு மிகலுமா வேட்டை யாடி
வதியுமத் திசையி னெங்குங் குருதியாய் வயங்கச் செய்தான். (௧௩)

மருளுற நமைத் துரத்து மதிக்குல மதனிற் றோன்று
நிருபனு மிவனுக் கின்றோர் நெடும்பழி யெய்ளிதி னீண்டு
வருதலைச் செய்து மேலம் மதிக்கியற் றியதா மென்று
கருதிவந் தடைந்த தென்னக் காரிருள் சூழ்ந்த தன்றே. (௧௪)

இருளெதிர் கலக்கு மாலை யெனச்சொலுங் காலை தன்னிற்
குரகதந் தனது மேற்கொள் கொற்றவன் றன்னோ டெய்யுஞ்
சரகதி கொண்டு சூழுந் தானைபின் றொடரத்தான் முன்
விரைவொடுஞ் சென்ற தந்த வியனகர்ப் புறத்து மாதோ. (௧௫)

மன்னெறி யிடைக்கி டந்தோர் மறையவன் றுயின்றான் மாலுற்
றன்னவன் றனக்கோர் கால னுமென வணைவுற் றம்மா
தன்னடி யுரத்தின் வைப்பத் தளர்வுகொண் டிறந்தா னாக
வின்னதென் றறியான் வேந்த னெழின்மனை புகுந்தான் சென்று. (௧௬)

மித்திர னெடுநா னில்லா வேலையென் வழிநீ தாற்றச்
சித்திர மிழைத்தி டல்லைச் சிதறிடத் துணித்தல் செய்வே
னெத்திசை யவருங் காண வெனச்சிவந் தெழுந்தான் போல
வத்திமீ தெழுந்தா னல்லோ னமர்தரு கரவாள் வீசி. (௧௭)

இறையவன் றேன்ற முன்ன ரிகலுறு குறும்பு செய்த
குறுநிலத் தவர்க ளோடுங் கொள்கையி னிருட்கு மூஞ்சென்
றுறுமொளி யிலாது வைகு முழைதொறு மொளித்த தந்த
மறையவன் கிடக்கை பின்னர் வந்தணைந் தவர்கள் கண்டார். (கஅ)

நம்புறு மவன்றன் கேளிர் நரபதிக் குறுசென் றேதக்
கம்பமுற் றவன்யா னீது கண்டிலே னென்று வேண்டுஞ்
செம்பொனீந் திறந்தா னுக்குச் செய்வன செய்மினென்றான்
வெம்பழி தானும் வந்து பிடித்தது விலக்கு வார் யார். (கக)

மட்டவிழ் வேம்பின் றேரோன் வன்பழி மருவி யெங்கு
நெட்டுயிர்ப் பெறியும் வாளா நின்றிடு மார்க்கும் வண்மை
கொட்டும்பற் கடிக்கு மாடுங் குலவுமப் பழிமுன் வந்து
கிட்டியச் சுறுத்த வஞ்சுங் கிடைக்குநல் லறிவுஞ் சற்றே. (உO)

பொருந்திடர் தீர்க்கப் பின்னர்ப் பூசுரர்க் கம்பொ னுதவித்
திருந்திடு தான மீந்துந் தேறுவிற் கறுகு கொய்தாங்
கருந்திடக் கொடுத்து நீடு மகமரு டணைத்தி ஞேமம்
புரிந்துமற் றதுசெய் பெய்த தழலின்மேற் பொலிந்த தன்றே. (உக)

பின்னும்பல் விதங்கள் செய்தும் பெயர்ந்திடா தொழிதல் கண்டு
நன்னெறிக் கலைவல் லோர்க ளேழுபதி தன்னை நோக்கி
யின்னநான் மாடக் கூட லிறைவனை வணங்கிச் சின்னாள்
மன்னுற வலஞ்செய் தன்பின் வந்திடிற் றீரு மென்றார். (உஉ)

அங்கவ னவ்வா றெய்தி யத்திற னெழுகு நாளிற்
றுங்கமால் வரைவிற் சோம சுந்தரக் கடவுள் விண்ணின்
றிங்குவந் தார்த்தார் வேந்த னெதிர்த்துநின் னொடுபோ ராற்றிப்
பங்கமுற் றேடு வான்மேற் படர்குவை தொடர்ந்து நீயும். (உங)

அவ்வழி நம்மை நாமே யருச்சனை புரிந்து வைகுஞ்
செவ்விய மருதூர் சேர்வாய் சேர்தரு முன்ன ருன்றன்
வெவ்வினை யகலு மென்ன விளம்பின னதுகேட் டன்னான்
றிவ்விய வருளை வாழ்த்தி யிருந்தனன் செங்கோன் மன்னன். (உச)

சிலபக லகன்ற பின்னர்ச் செம்பிய னனைய வாறே
புலிவளர் துவச மோங்கு பொருபடை கடலிற் சூழ
விலகுதூ ரியங்கள் வேனி லிடியென முழங்கச் சென்று
குலவுறு தென்னர் நாட்டிற் கூடலின் மருங்குற் றுஞல். (உரு)

தென்னனு மதனை நோக்கிச் சேல்விழிக் கன்னி பாகன்
றன்னருள் கருதிப் போற்றித் தடங்கடற் சேனை சூழத்
துன்னுற வேம்பி னோடு தும்பையேய்ந் தெழுந்து நீடு
பொன்னகர்ப் புறத்தி னுற்றான் பொன்னியந் துறைவன் முன்னர். (உசு)

வேறு.

உற்ற காலையிற் செம்பிய னுறுபடை வீரர்
வெற்றி வார்சிலை வளைத்தனர் விடுத்தனர் பகழி
யெற்று நேமிகள் செலுத்தின ரெறிந்தனர் கவண்கல்
முற்று நாளுல கழித்திடச் சொரிதரு முகில்போல். (உஎ)

முன்ன ராங்கவ ரடல்வினை தொடுத்தலு மூரிக்
கன்னி நாடவன் சேனைசூழ் கடுஞ்சின மறவோர்
கொன்ன வின்றிடு சிலையொடு புருவமுங் கோட்டி
மின்னு தீப்பொறி விழிவிட வாளிகள் விடுத்தார். (உஅ)

சகர மற்றன புலிக்கொடிச் சில்லியந் தடந்தேர்
புகர்மு கக்களி றலகில வுருண்டன புவிமேற்
பகர் பரிக்குலந் திசைதொறும் பாய்ந்தன துணிந்து
தொகையில் வீரர்கள் புகுந்தனர் துறக்கநன் னாடு. (உகூ)

மீனகே தனன் படைத்தனி மந்தரம் விரிதன்
சேனை யாந்தடக் கடலினைக் கலக்கலுஞ் சினந்து
மான மீக்கொள விடமென வெழுந்திசை வளவன்
ரூனு றுங்கடு வேகத்தின் விடுத்தனன் சரங்கள். (௩0)

உந்தும் வாளியி னளவையின் றெங்குநன் சேனை
முந்தும் வீரர்கண் முடிவது முடிநெடுந் தேர்கள்
கந்த டுங்கரி பரியிவை மடிவதுங் காணு
வந்தனன்னுருத் திரனென வெழுந்தனன் வழுதி. (௩க)

மேவு வெஞ்சினத் தெழுந்தவன் வீரனை நோக்கி
நீவி ரஞ்சன்மின் சிதைப்பன்யா னிடுமப் படையைத்
தேவர் மன்னவன் மணிமுடி சிதறிடு மெம்மு
னேவர் நின்றுபோ ரிழைத்தனர் பிழைத்தன ரொன்று. (௩உ)

வில்லை வாங்கினா ணிசைத்தன னெறிந்தனன் விசும்பு
மல்லன் ஞாலமுந் துணுக்குற வளவனீள் கரத்திற்
புல்லும் வார்சிலைக் கொருகணை முந்துறப்போக்கி
வல்லதானைமேற் செலுத்தின னலகில் வெவ்வாளி. (௩௩)

நீடு வெஞ்சரஞ் சென்றெதிர் நேரியன் படையி
லாடும்பரி மதக்கயம் வீரர்களங்கத்
தூடுபுக்குயிர் தேடியங்கோடிடு முயிர்ப்பி
னோடுமற்றினி விடேமெனவும்பரி னளவும். (௩௪)

தலைமுறிந்தன மறவர்தோண் முறிந்தன தடக்கை
மலைமுறிந்தன பரிக்குல முறிந்தன வடிவே
லிலைமுறிந்தன தூரியமுறிந்தன வெடுத்த
சிலைமுறிந்தன முறிந்தன செம்பியன் சேனை. (௩௫)

சின்னநீள்பிண மலைகள்புக் கொளித்தனர் சிலரோ
பன்னுபல்படை வனத்தினிற் பதுங்கினர் சிலரோ
முன்னரோடுதி ரத்திடை மூழ்கினர் சிலரோ
சென்னியோடுகால் சோர்ந்திட வோடினர் சிலரோ. (௩௬)

வாய்ந்த பொன்மதிற் கூடல்வாழ் வரகுணத் தென்னன்
சாய்ந்த தெவ்வர்மேற் படர்ந்திடான் றடங்கடற் பிறந்த
காந்துநஞ்சமர் மிடற்றினான் றிருவருள் கருதி
வேய்ந்துவாகைபின் றூரத்தினான் மிகுபடையோடும். (௩௭)

தூரத்தினான் விசும்புல வியசுர நதிப்புனலைக்
கரத்தினாலெடுத் தாம்பலுண் வளைகளுங் காணுஞ்
சிரத்தினார்மதி தரித்தவன் றிகழ்பல பதியு
முரத்தினாற்கடந் தெய்தின னுயர்புன னாடு (௩௮)

திகழுந் நாட்டிடை யிடைமரு தணிமையிற் செலுங்காற்
ககனமுற்றெதிர் கதிர்பொலி கவினமர் கனகச்
சிகரகோபுரங் கண்டனன் றேரினின் றிழிந்து
மகிதலத்துறப் பணிந்தனன் மாற்றினன் விதிர்ப்பு. (௩௯)

நீடுகோபுர சிகரத்து நிலவுவெண் கொடிக
ளாடநோக்கிநங் குலத்தினி லவதரித் திட்டோன்
கூடுவெம்பழி தொலைந்ததின் றீண்டெனக் குறித்து
நாடுதண் பிறை நடித்தலொத்திடு மென நயந்தான். (௪௰)

மங்கலம் பொலி மாளிகைமண்டப மியாவும்
பொங்குதண் சுடர்க்கனகமாய்ப் பொலிவள நோக்கித்
தங்கு பொன்னுருக் காகதீர்த்தத்தினுக் கென்று
றொங்கும் பொன்னுரு வங்கொலோ வெனத்தணி வியந்தான். (௪௧)

கஞ்சமேல்வளை யீன்றிடு கதிர்கொணித் திலத்தை
யஞ்சமென்பெடை முட்டையென் றடைகிடந் திடுநீர்

விஞ்சுவாவியும் வண்டுறை விரிமலர்ப் பொழிலு
மஞ்சுலாவிய புரிசையும் பார்த்துள மகிழ்ந்தான். (௩உ)

குலவுதண்பொழில் கனிவளங் கொண்டுமுன் காட்ட
நிலவுகார்மயின் மாதரி னின்றெதிர் நடிப்ப
வலகில் பூவையுங் கிளிகளும் வருகென வழைப்பப்
புலவுவேலினன் கண்டுகேட்டின்புறப் போந்தான். (௩௩)

மறைமுழக்கமு மங்கல முழக்கமு மாறு
மறுகினெய்தினன் வலங்கொடு சென்றனன் மலரின்
பொறைசுமந்திடு பொன்னியி னிலங்கெழிற் பூசத்
துறைபடிந்து வேதியர்க்கிரு நிதிமழை சொரிந்தான் (௩௪)

சென்றுசத்திதன் னருட்புனல் படிந்தனன் செம்பொற்
குன்றமொத்தொளிர் குணதிசைக் கோபுரவாயி
லொன்றியுட் புகுந்தான் றொடர்கொடும் பழியொருபா
னின்றநந்தகன் விழிகெட நிற்பது போல. (௩௫)

துன்னிலிவ்விடை மருதினெவ் வினைகளுந் தொலையு
மென்னயாவரு மறிந்திடற் கிலகொரு கரியா
யன்னவெம்பழி சோர்ந்துநின் றிடுதலு மாங்குப்
பன்னுவேந்துவன் றனை விடுபட்டவ னுத்தான். (௩௬)

பின்னர் நோக்கினன் கண்டிலன் பழியினைப் பெரிதுந்
துன்னுமானந்தக் கடலிடை மூழ்கினன் சுருதி
யென்னும் வண்டுசூழ்ந் தொலித்திட மருதிடத்திருக்கு
மின்னுவார்சடைத் தேனினைப்பருகினன் விழியால். (௩௭)

தொழுதெழுந்துள முருகிட விழிகணீர் துளும்பச்
செழுமலர்க் கரசரோருகஞ்சென்னி மேற்குவிய
முழுதுமாகிய கடவுட னருளினை முன்னி
யெழுதுசித்திர மாமிதெனும்படி நின்றான். (௩அ)

பொன்னிசூழிடை மருதுறை பூரண புராண
முன்னமொய்த்திய பவங்களின் மொழியுமீன் டெய்தி
யுன்னடித்துணைத் தாமரை யொளிர்மலர் காண்டற்
கென்னபுண்ணியஞ் செய்தன னேழையே னம்ம. (௩௯)

வேறு.

ஒலிகடலெழுந்த நஞ்சை யொளிர்மிடற் றடக்கியாஞ்ஞோர்
குலமுதல் புரந்ததென்னக் கூற்றினை யுதைத்தோர்பால

ளிலகிடக் காத்ததென்ன வேழையன் றனையுமிந்நாள்
வலியுறு பழிதீர்த்தாண்ட மருதநா யகனே போற்றி. (௫0)

அளவையென் றிசைப்பதாலு மரிமுதற் றேவராலுந்
தெளிவுற வுணரவொண்ணாச் சிவபராஞ் சுடரோதிங்கட்
பிளவுறு சடையாய் வேற்கட் பெருநல முலையாள் பாக
வளரிடை மருதின்மேவு மருதநாயகனே போற்றி. (௫௧)

தொல்லைவன் பிறவியென்னுந் தொடுகட லிடையின் வீழ்வுற்
றல்லலி னழுந்துவேனை யருளெனுந் தோணிதன்னில்
வல்லைவந் தேற்றிக்கொண்டுன் மலரடித் துணைகளென்னு
மல்லலொண் கரையிற்சேர்த்த மருதநாயகனேபோற்றி (௫௨)

என்றெதிர் நின்றுபோற்று மிலங்கிலை வேலினானைக்
குன்றினை வளைந்தோன் மன்று குணதிசை வாயிலின்பா
னின்றது பிரமகத்தி நீயந்த நெறியினேகல்
சென்றிடு மேலைவாயிற் சிறந்திடு நெறியா லென்றான். (௫௩)

விண்ணிலங் கிதனைக் கேளா மீனவன் மகிழ்ந்துமீண்டு
மண்ணுற வணங்கிப்போற்றி வலவயி னிமையச் செல்வி
நண்ணுபூங் கோயிலெய்தி நளினமெல் லடியில் வீழ்ந்தா
னெண்ணுள முருகினான்மற் றெழுந்திவை துதிசெய்வானால். (௫௪)

வேறு.

தெரித்திடு மளவிலண் டங்களீன்று திகழ்பெருங்கருணை மென்சிறகா
விரித்தணைத் தவற்றைக் காத்தினி திலங்கும் வியலுறு பனிவரைமயிலே
பரித்திடு மினியபொருட் பிரணவமாம் பஞ்சரத்துறை பசுங்கிளியே
வரித்தட நெடுங்கட் பெருநலமுலையே வயங்குபெண்ணமுதமேபோற்றி

குருமணி விளக்கே யிசைதருவேதக் கொம்பரிற் படரிளங்கொடியே
வரமுறு பலன்மிக் குதவுமாகமத்தே மாவில்வாழ்சிறு கருங்குயிலே
பரவிடு மிமையோர் மணிமுடி யுரிஞ்சு பதயுகத்தொரு சுவைக்கரும்பே
மருதிடத்திறையோன் மனத்தடத்துலவுமடப்பெடையன்னமேபோற்றி

போற்றியென் றினைய வகைபல துதித்துப் பூதநாயகனுரைப் படியே
மேற்றிசை வாயினெறிக் கொடுமறுகின் மேவினான் விளம்புமத் தலத்தே
விற்றிருப் பதனுக் குளத்தின்மீதூரும் விருப்பினா லுயர்நெடு மறுகின்
பாற்றனி வசதிசெய் தினிதிருந்தான் பார்த்திபர் திறைகொணர்ந்துதவ.()

இன்னவ னிலங்கு மிடைமரு தணுகி யிகலுறு பழிதொலைத் துவகை
மன்னியாங் கிருக்கும் வகையுணர்ந்தார்த்தார்வனைந்திடுவளைப்புய வளவன்

றன்னூறு முதுவர்தமை விடுத்துற வுசாற்றிமுன் னிசைவுற வடைந்து
கன்னியைமணஞ்செய்திடக்கொடுத்திடலுங் களிப்புற வதுசெய்தன
னால். (௫௮)

படிபுரந்திவ்வா றுங்கினிதிருக்கும் பஞ்சவனிலங் கெழின்மருதக்
கடவுளைத் தினமுஞ் சதவலம் புரிந்து காலங்கடொறும் பணிந்தேத்திக்
குடதிசை வாயிற் கோபுர மியற்றிக் கூடல்வா ழிறைபவன் றனக்கு
வடதிசை வயினோ ராலய மிழைத்து வணங்கிப்பி னரும்பணி செயுநாள்

பாகுறு கங்குல் பகலிரு பொழுதும் பயின்றிடு தவத்தினால் மெலிந்தி
டாகமுன் னேக்கி மருதிறை யொருநா ளரசனுங் கிறைஞ்சிடு வேலை
வாகுறு குமுதவாய் மலர்ந்தீண்டு வருகுண வருகென மகிழ்வுற்
றேகநாயகனே போற்றி யென்றிறைஞ்சி யிருகையுங் குவித்தெதிர் நின்
றான். (௬௦)

மருதிறை யவனை நோக்கிநங் கயிலை மணிதிகழ் கொடுமுடி கடுக்கு
மொரு மதில் வகுத்து நமதுரைப்படி நீயொரு வலம்புரியி னுள்ளஃது
பரவுமா யிரநேரா மெனவுரைத்தான் பாவிமற்றவன் சிலபகலில்
விரவுமத்திறஞ்செய் திறைஞ்சினு னரனுமீனவ கொண்டநா மென்றான். ()

வேந்தனித்திறமீங்கென்னையெஞ்ஞான்றும்விமலபுரத்தியென்றிரந்தான்
பாந்தளம் பணியானத் திறம்புரக்கப் படுதியென் றிசைத்தனன் மகிழ்ந்து
தேந்துளித்திடு தண்கற்பகத் துணர்கள் சிந்தினர் தேவர்தங் கணங்கள்
வாய்ந்தபேருவகைக் கடலிடைத்திளைத்து மன்னவன் றுதிபல புரிந்தான்

துட்டரு மொருகள் வனைச்சிரந் துணிப்பான் றுணைப்புயமிணைப் புறக்
கட்டிக்
கட்டுடனகர் காவலர்கொடுசெலுங் காற்கரவடன்றிருவெணீறணியப்
பட்டிடுமினைய திறனறிந்தவனைப் பரிந்தழைத்தனைய கட்டவிழ்த்துச்
சிட்டர்போற்றிறையோனடியனீமொன்றுசிலநிதிகொடுத்தனன் விடுத்தான்.

ஓடிடு நரியினூளை கேட்டொளிரு முடுபதி தொடுமதில் சூழ்ந்த
கூடலங்கயற் கணுமையிடத் திறையைக் கூவினவெனவெழுந்திரவிற்
றேடிமற்றவற்றைக் கொடுவர வுரைத்துத்தெரிக்குமன்னவற்றி னுக்கிலகு
மாடைகளுடுத்து விடுத்தன னமைத்த னடிமையாக் கொண்ட தென்ன
வர்கோன். (௬௩)

குவளையும் பொலியுஞ்சலசமு நிறைந்த குளிர்புனற் றடத்தொரு பகலிற்
றவளைகளரற்று மோதை கேட்டிமஞ் சூழ்தடவரைத் தோற்றுவேற்
கண்ண
ளவளையோர் புறத்திலிருந்து மெங்கோனை யரகர வென்றன வென்னத்
திவளைவின் மணியுங் கனகமும் வாரிச்சிந்தினன் பைந்தமிழிறைவன்.௬௫.

வழிபடு மொருவன் மஞ்சளக் குலரு மணிவிளா வெள்ளிலை நுகர
விழிதனிற்கண்டு பிடித்திதே தென்ன வினவிமற் றவனிடை மருதின்
மழுவலான் றனக்கே யடிமையாய்ப்பின்னும்வந்துதித்திடவெனப்புகலத்
தழுவிநின்னுளாய்ப் பிறந்திடற் கெளியேன் றருகென் றேற்றவ னச்சி
னுகர்ந்தான். (௬௬)

மறந்திகழ் சிறிய குலந்தனிற் பிறந்து மற்றொரு களவினால் வெட்டுண்
டிறந்தவன் றனதூன் றவிந்தவெண் டலையையிடைமருதெல்லையினோக்கி
யறந்திகழ் கரத்தா லெடுத்திழி விழிநீராட்டி யென்றலையு மூன்றலை
போற்
சிறந்திடிப் பதியிற் கிடந்திடுங் கொல்லோ சிதைந்தொரு நாளெனப்
பகர்ந்தான். (௬௭)

பாலுறச் சிலர்கள் கருணையந்தடத்திற் படிந்துபோய் வலன்வரு போழ்தி
லாலயமுன்றிற் கிடந்தநாய் மலங்கண் டகற்றினோற் கிதனைநம் முலகி
னலிலொன் றிரண்டுமூன் றொடு முழுதுநல்குவ மெனமுறை குறித்தாங்
கேலுநால்வலங் காறெடுத்திடக்காணு னெனது நாடெனக் கொடுத்
தான். (௬௮)

தேம்பனுண் ணிடையா ரிசைத்திடுமிசைகள் செல்பவர் தமையெலா நிறு
[த்து
மேம்படு மருதின் வலன்வரு பொழுது வீழ்ந்தபொற் கனியுருக்கண்டு
பாம்பணி சடையோன் படிவமே முழுதும் பழுத்து நின்மன வெனப்ப
ணிந்து
வேம்பு கட்கெல்லாங் கதிருமிழ் மணிசூழ் விதானமேற் சமைத்தனன்
மன்னே (௬௯)

மற்றொரு தினத்துக் கங்குலிற் கணிதர் வகுத்தநல் லோரையினூர்த் தார்க்
கொற்றவனளிக்கவதுவைமுன் புரிந்த கோமளப் புதுமலர்க் கொடியைச்
சிற்றிடை நெடுங்கட் சேடியர் செழியர் திருமக னினிதுவீற்றிருக்கும்
பொற்றிருமனையிலுய்த்துமீண்டனர் பூங்கொடி யெழில்சிறிதெடுத்திசை
ப்பாம். (௭௦)

கெண்டையங் கணினாள் கூந்தலுக்குவமை கிளத்துதற் கியாதுளததுநீள்
கொண்டலின் குழுவைக் காலினாலுதைத்துக் குலவிவண் டினத்தைநா
ணுறுத்தித்
தண்டருபிரச மலர்க்கடுக்கையினைச் சைவலத்தினை வனத்தகற்றி
யண்டிநள் ளிருளியா னிகரெனப் புலவோ ரல்லெனச் சொல்லிநின்றிடி
னே. (௭௧)

கனிதரு சுவையு மமிர்தமு நிகர்சொற் காரிகை யெழிற்றிரு வதனம் பனிமதி யொளியுந் தருப்பணத் தெளிவும்பங்கயப்புதுமலர்ச்சியுங்கொண் டினிதுநான் முகத்தோன் காத்திறலன்றி யிலங்குபற்பலதினங்கருத்தாற் றனியிருந் தமைத்தா னெனிலதற் குவமை சாற்றுதற் கெளிதினெய் திடுமோ. (எக)

மின்னுசூற் படையோன் விரிசடைப்பிறையின் விளங்கெழிற்றிலத மொன்றுளதே, லன்னவ னுதலிற் குவமைபாம்புருவ மதற்குநே ரணங்கிவள் குனிக்குங், கன்னல்வெஞ் சிலையைக் கருதமெய் முள்ளங் கருதலினிய தோபிறிதோ, வின்னெழி லுறிக் கிணைந்திடா தன்றோ வெள்ளலரான தெண் மலரோ. (எஉ)

கயலினிற் பிறழ்ந்து குவளையின் மலர்ந்து கடுவினிற் கறுத்துநீண் டரியுற் றியமனைத் தருமெ னனைவுயிர் வாட்டி யிசைவரி கணைச்சிறைப் படுத்தி மயலுறுபிணையின் பார்வைகொண்டிலகு மடக்கொடி கூர்விழிக்குவமை முயலுறு கணைவேல்வாளெனச்சிறிதுமொழிவதோ முன்னிறும்பிழையே.

முத்தினத் தளவை வடிவிறு லன்றி மொழிநிறத் தானுமொவ் முறுவ லொத்திடுந்தேனூறிசழிணைத் துவரொன்றுணைக்கவவ் வுரையுமொவ்வாது நத்திணைக்கமுகைக் கந்தரமுறமு நவிலவள் கந்தரமெனவே யத்தகைச் சங்குங் கமுகும் வீற்றிருக்கு மவையித வேதரமுறவே. (எச)

கனைகடற் பிறந்த வமிர்தனாள் வரிக்கட் கயல்பொருங்குழையெழிற் காது தனையெதிர் நோக்கு மினைஞரா வியைக்கத் தரித்திடு சுருவியே யாகு நனைமலர்ப் பகழி தொடுசிலைக் காளை நளினபங் கயமலர் பூத்துப் புனையெழிற் றெளிநீர் நிறைவுபெற் றினிதாய்ப் பொலிந்திடு வாவியேக போலம். (எரு)

மீனெனுக் தடங்கட் பிறைநுதற் றிருவின்மென்மொழிதனைக் கரும்பிரதந் தேனுயர் கனிபா லமிர்தமென் றுரைப்பர் சிலர்சில ரிசைவசெவிக் கின்ப மானதுற் றுதவுந் திறந்தவோ கலைப்பெ ணங்கையிற் பரித்திடு மியாழின் கானமென் றுரைப்ப நாமினிவேறு கட்டுரைத் திடுவதென் னைம்ம. (எசு)

கனங்குழை மடந்தை பெழில்கனிந் தொழுகுங் கதிரிளந் தடமுலை வரிவி லனங்கவேண் மனம்வைத் திடுமணிச் செப்பு மவன்புனை மகுடமு நிகர்க் கும், இனங்கொள் புற்புதந்தோற் றுடன்குலை வதுவும் வனசமென் முகை யுடைந் திடலு, மினங்கிள ரவையிற் ற ... மான் றொடொன்றுற் றிகல்வது மிதினுரு விளைவே. (எஎ)

கோலமுற் றிலகு வயினதற் குவமை குலவுபா லிலையெனச் சொலினவ் வாலிலையொருநீள் கருமயி ரொழுங்கு மடியிலோர் சுழியுமுற் றிலதா லேவுறு பசுந்தோ ளிணையையுட் புனைகொள் வெதிர்நிகர்த திடுங்கொல்

பைங்கன்ன, லேனுமென் றிடிணைத் திடுமொரு வகைமற் றிருகையுங்
காந்தளை யேய்க்கும். (எஅ)

வடிநெடுங் கண்ணி யிடைக்குநே ரொன்று வந்திடு நிமித்திரு லின்னுந்
துடியினம் பலர்பா லடிபடு மின்னுந் தோற்றுமுன் னொளிக்குமெம் மனத்
துங், கொடியிழை மதவே ளுடல்பணி மலர்ப்பூங் கொம்பிவை சிறப்பில
செங்கைப், பிடியென லதுவோர் பிடிமடங் கலினைப் பேசலா மறியமே
லிரண்டும். (எகூ)

பங்கயப் பரும வல்குலுக் குவமை படிசுமந் திடுமராப் படமுஞ்
செங்கதிர் மணிப்பொற் றேருமா மென்னத் தெரிக்கலாந் தெரித்திடப்
பெறினு, மிங்கிவையிரண்டி னுயர்ந்துளதொன்றே யிலங்கவள்கவானினை
நிகர்க்கு, மங்சனிங் திடுநீ டரம்பைக டலைகீழாகநின்றிடு மஃதிலையே. (அ0)

அன்னமென்னடைச் சிற்றிடைமலர்க்கோதையணிமுழந்தாளினைநோக்கி
னின்னது முழந்தா ளலவனென் பவற்று ளியாதுகொ லெனவரு மையம்
பொன்னியந்துறையிற் பயில்சினை வராலும் புகன்றிடு மிவள்கனை காலும்
மன்னநு தினமும் விரோதமுற்றெதிர்த்து மல்லிழைத் திடுநிகராகி. (அக)

மயிலின மெவையும் பிணிமுக மாகி வனையிடைத் திரிந்திட வவற்றி
னியல் கவர்ந்திடுமின் சீரடித் தளிர்தன் னெழிலெலாங் கவர்ந்ததென் றன்
றே, பயிலுறு வனசம் பங்கமுற் றின்னும் பன்னுதன் றலைவனென் றிசை
க்கும், வெயில்விரி பகலோன் முகனெதிர் நோக்கி மென்கணீர் ததும்பநிற்
பதுவே. (அஉ)

இன்னண மியம்பு மவயவ மெவையு மிலக்கணத் திசையெழில் கனியப்
பொன்மணிச் சதங்கை சிலம்புமே கலைவிற் பொலிதொடி குழைதனிச்சுடி
கை, வன்னவெண் டரள வடமுத லணிகள் வனைந்தவர் தவனியி னுல
வோர் மின்னெனக் கமலப் பொகுட்டில் வீற்றிருக்கு மெல்லிய லென்ன
முன் னின்றாள். (அங)

கண்டன னரசன் கடலமு தனையாள் கச்சினைக் கிழித்தெழு தனமும்
வண்டமர் விழியுங் கூந்தலுங் காமு மதிதனை மயக்கிடு முகமுந்
தொண்டையங் கனியிற் சிறந்தசெவ் வாயுந் துலங்கிடு பிறவுறுப்பெழிலு
ங், கொண்ட னனிவண்மற் றிறையவன் றனக்கே கொடுத்திடத்தகுவளெ
ன் றெண்ணம். (அச)

வேறு.

அன்னநடைப்பெண் ணமுதை யுடனழைத்துக்கொண்டுபிறரறிந்திடாது
சென்னிமதி தொடுமெழிற் றன்மனையொடு வீதியுங்கடந்துசென்றுகோயி
ன், மன்னுகடைத் தலைநின்று மருதநா யகவென்றான் வல்லை யாங்கே
யென்னிறைவன் மணிக்கதவு திறந்துவர குணவருதி யென்றான்மன்னே.

வையைவள நாடனெங்கண் மருதிறைவன் முன்னணுகி வணங்கி நின்றான், கையவுனக் கிவட்குமென் றுளத்தினிடைக் குறித்திட்டே னடியேனிங்ஙன், னுய்யும் வகை கொண்டருணீ யின்றேன்மற் றுய்யேனென் றுரைத்தாரேர்முன், கையொழிந்த வுருவனைத்துந் தனதுருவிற் கரந்திட்டான் கருணை மூர்த்தி. (அசு)

அத்திறமீ னவனோக்கி யிஃதெளியேன் றெரட்டதென வகற்றி விட்ட கைத்தலங்கொ லென்றனங்கண் ணுதலிதுவு முனதன்புங்காலைப்போதின் முத்தமிழோ யுலகறியக் கோடுமென்று னவன்மகிழ்ந்து முன்றி லுற்றான் மொய்த்தமணிக் கதவமெலாங்கடிதுகாப்பாயின வான்முன்புபோல. (அஎ)

மாதினையு மன்னனையுங் கண்டிலராய் மனைக்கணுற்றோர் மருண்டு தேடிக் காதியல்வே லிறையைவந்து கண்டுதனித்தேவியெங்குங் காணேமென்றார் சோதியிடத்தின ளென்று னிதுவென்கொ லெனவவர்க ணுணுங்கி நின்று ரோதிமைப் போதுபுலர் போதாகப் பூசிப்பா ணுரியோர் சூழ்ந்தார். (அஅ)

அன்னவர்பொற் கதவுதிறந் துள்புகுந்தா ரரசனைச்சூழ்ந் தவருமந்த மன்னவன்ற னுடன்புகுந்தா ரியாருமிறை யோன்முடிமேன் மலர்க்கை கண்டார், பன்னுபர னங்கதனைக் கரந்திட்டான் மகிழ்ந்திட்டான் பார்த்து வேந்தன், றுன்னுபிறர் விதிர்ப்புமிறும் பூதுமுற்றார் மலர்மாரி சொரிந்தார் விண்ணோர். (அகூ)

இந்துபுனை வேணியனைப் பணிந்தரச னினிப்பணியா தெனக்கீண் டென்றான், கந்தமலர்ப் பொழில்புடைசூழ் மதுரைதனக் கேகிடினீ சடிதி னுங்குத், தந்திடுது நம்பதமென் றுரைத்திட்டான் மருதிறைவன் றனக்கவ் வேலே, செந்தமிழின் றொடை புனைந்து தென்னன்விடை கொண்டுபுறஞ் சென்றனன்றே. (கூ0)

கனகமணிக் குலநெருங்கு கவிகைநிழன் மிசைநெருங்கக் கனிந்தகாட்சி மனமதனிற் புகழ்மருத வாணன்மலர்ப் பதநெருங்க வாக்கிலோங்கு புனிதனிசைத் திருநாம நெருங்கவிழி முன்னவன்றன் பொருவில்கோல மினிதுநெருங் கிடச்சேனை புடைநெருங்க மதுரைநக ரெய்தினனால். கூக

பொங்குமகிழ் வுடனுங்கு வைகிடுநா ளாகமநீள் புராணமியாவுந் திங்கள்முடிப்பரன்மகிழுஞ் சிவபுரியின் பெருமையுரை செய்யக்கேட்டுத் தங்குமதைக் காண்பதற்குப் பெருவிருப்புக் கொண்டுதனிச் சாருமீசன் கங்குலினிற் றிருக்கோயி லடைந்துமையாள் மணாளனைமுன் கண்டுதாழ்ந்து. (கூஉ)

மண்டுபுக ழன்பருட னுயர்சிவ லோகத்திடைநீ வைதுங்காட்சி [முன் கண்டுபெணிர் திடற்கெளியேன் மனத்தினிடை யுதித்ததொரு காதலென்

வண்டவள மதிச்சடையோன் மகிழ்ந்தனையவுலகுபுவி வருவானெண்ணங்
கொண்டனன்மற் றதுகோடி மதிச்சுடரி னொடுபுவியிற் குதித்ததாங்கே.()

அவ்வுலகி னெழிலுநெடு மான்முதலா னவர்பதமு மதனிலன்பாற்
செவ்விதினெம் பிரானருள்பெற் றிருப்பவர்கள் றெப்புமுயர் தேவர்போ
ற்று, நவ்வியங்கைப் பரமனுறை கோலமுமன் னானருளா னந்திகாட்ட
வெவ்வினைத்திண் கடல்கடந்தான் கண்டுபணிந் தானந்த வெள்ளத்தாழ்ந்
தான். (௯௪)

முன்னிறைஞ்சி நின்றிடக்காற் சிவலோக மதுவாயதாய் முன்புபோல
மின்னிடைமா துடனிறையோன் வீற்றிருப்பக் கண்டுநனி வியந்து வாழ்
த்திப், பின்னரும்பல் பகல்செங்கோல் செலுத்தியுல காண்டிருந்து பின்பு
மற்றைத், தென்னுலவு சிவபுரியுற் றானுருவா யினிதிருந்தான் றேவர்போ
ற்ற. (௯௫)

வாதனாச்சருக்க முற்றும்.

உ

சிவமயம்.

# பிரதக்கிணமகிமைச் சருக்கம்.

சாந்த மாகிய வேலிசூழ்ந் திடந்தவப் பயினா
வாய்ந்த சிருற வளர்த்திடு மாமுனி வீர்காள்
காந்த மோதிய சோதின மீங்கிது காறு
மேந்து மெம்புக ழிலிங்கமோ துவதினி யிசைப்பாம். (௧)

வேறு.

கருதத் திருவிடை மருதென் றிடுநகர்க் கண்வாழ் வுறநுதற் கண்ணன்
மருதக் கடவுளை யிமையோர் முதலினர் மலர்தே ரிணையடி பணிவுற்று
வருதக் கனமவை தமின்முன் மதிலினுண் மருவுற் றிந்தலச் சுவமேதப்
பிரதக் கிணமென வெவரும் புகழுறு பெயரிற் பொலிவுறு மினிதம்ம. (௨)

அதினுற் றிசைவலம் வருவோர் பெறுவர்க ளணிநீ டிலகிடுமுயர் செல்வம்
மதிநன் குறுவர்சண் மகவுற் றிடுவர்கள் மருவார்தமைவென் றிடுவார்கள்
சதிர்பெற் றிடுவர்கள் பிணியற் றிடுவர்கள் சகமெச் சுறுவர்க ளிவையன்றிப்
பதமொன் றவணுறு மதனுக் கியல்புறு பரிமேதப்பல னடைவார்கள். (௩)

மகரா லயம்வளை தருமிப் புவிதனை வலம்வந் திடினுறு வதுமெய்தும்
புகழ்வா ரணமுக விறைவே லவன்மறை புகல்வோ ரதுமதி முனமெய்தி
மிகுமா தாவொடு செயினெய் திடுபயன் வினைவெய் திடுமெங் கோலை
யாதி, யிசழ்பா தகவினை யவர்செய தனவுள யாவுந் தெருமா லுடனேகும்.

வருநா ளொருமண் டலமனை மண்டல மருவொரு கான்மண் டலவெல்லை யொருநா ளிருபதின் மேலா திருநோகை யோரே ழெனுமூன் றினுளொன் று, கருதா வவரவர் வன்மைக் கிசைதரு கணிதம் பெறவந் திடல்வேண் டும், ஒருவா றதில்வல னுர்ரோர் களைவந் துழிவந் துழியறை கிற்பா மால். (௬)

சையா மிணைமலர் குவியா மனமொடு கருணைத் திருமுக மலர்வெய்த மெய்யா லொருவலஞ் செய்வா ரதனிடை வினைநீக் துளமெண் ணியவெ ய்திப், பையா டரவணி யெம்மா னுறைதரு பதியுற் றுறைவர்கண் மகிழ் வோடு, தையா மதியினில் விழவிற் புரிதரு தகையோர் பெறுபலன் புகல் வார்யார். (௫)

வேறு.

இத்த கைத்தனிப்ப தக்கிணைத் துள்ளுற விமையோர்
சித்தர் சாரண ருரகர்கந் தருவர்பா ரிடங்கள்
சுத்த மாதவர் முதலினோர் சூழ்ந்துவெண் கயிலை
யொத்தி லங்கிடுங் கொடுமுடிப் பதக்கிணை மொன்று. (எ)

தெரித ருங்கலின் மருவுமற் றதைவலஞ் செய்வோர்
விரித ரும்பிணி வறுமைவெம் பவங்களும் வெருளுற்
றிரித ரும்பொருள் புகழொடு மசவுநன் கெய்தும்
புரித ருந்தனி யறிவுறும் பொலிவுறும் வாணாள். (அ)

கயிலை மால்வரை தனைவலங் கனிந்திடன் போடு
செயிலை ணைந்திடு பயனவை யவையெலாஞ் சேரு
மியலி தென்னவே யுதவிடு மிசைபல னிதற்குட்
பயில லுற்றிடும் புகழுறு பதக்கிணம் பலவும். (௯)

இறைவன் முன்னரட் டாங்கமைங் காற்பணிந் தேத்தித்
துறையி னீடுமத் துதியொடு துணைக்கைமார் பணைத்து
† மறைமு தற்பத மனத்துற மெல்லென வருதன்
முறைமை யாமுறு வலமென மொழியுமா கமமும். (௧௦)

அன்ன தன்மையி னோங்கிடு மணிவலஞ் செய்து
மன்னு றுந்துயர் தீர்ந்தின்ப மருவலுற் றவர்க
ளின்ன ரின்னவொன் றியல்புற வெடுத்துமக்கினிது
பன்னு துஞ்சிலர் தமைப்பரன் பதமுறு மனத்தீர். (௧௧)

பிரதக்கிணமகிமைச்சருக்கம்
முற்றும்.

---

† மறைமுதற்பதம்—பிரணவம்.

சிவமயம்.

# யுவனாசுவச் சருக்கம்.

அறங் குலாவிய மனத்தினா னயோத்திமா நகரான்
மறங் குலாவிய பகைஞர்பான் மடங்கலே றனையா
னிறங் குலாவுசெங் கதிர்வழி நிருபன்மற் றொருவன்
பிறங்கு கீர்த்தியான் புகல்யுவ னாசுவப் பெயரான். (௧)

மைந்த னின்மையான் வருந்துறா வசிட்டனை யணுகி
யெந்தை யேயினி யெந்தநாண் மகவெனக் கெய்துஞ்
சுந்த ரக்கனி வாய்மலர்ந் தருள்கெனத் தொழுதா
னந்த மாதவ னிசைக்குதும் வருந்தலென் றறையும். (௨)

வெண்ண கைத்துவ ரிதழ்மனை மெல்லிய லுடனே
புண்ணி யப்பொலி யிடைமரு தெனும்பதி புகுந்தாங்
கெண்ணு றுந்தனி மகப்பெறு மகமினி தியற்றிற்
கண்ணு தற்பிரா னருள்செயுங் கடிதினே கென்றான். (௩)

காயி ருங்கதிர் வேலினான் கருதுள மகிழாத்
தூய மாதவ நீயும்வந் தருள்கெனத் துதிசெய்
தேயு மன்னவன் றன்னொடு மில்லவ ளுடனும்
பாய சேனையி னுடனுமுற் றெழுந்தனன் படர்ந்தான். (௪)

படரும் போதினி லெதிர்ப்படு பரனுயர் பதியுந்
தடமி குந்திடு நதிகளுந் தபோதன ருறைய
மிடனு மொண்புகழ்ச் சயிலமு மிலங்கமன் னவற்குத்
திடனு றுந்தவ வசிட்டனா முனிவரன் றெரிக்கும். (௫)

தன்னி டத்திறந் திடுமுயிர் தனையடு கேசன்
மன்னு சூலம்வைத் துயர்கதி வழங்கிடுந் தலனீ
துன்ன ருந்தவம் புரிபகீ ரதனுளத் துவகை
துன்ன மேலையிப் புவிவரு துறையிது காண்டி. (௬)

இயமன் றன்னுட னுதித்ததா மிந்நதி சிலந்தி
யுயருங் காளனோ டத்திநின் றருச்சனை யுஞற்றுஞ்
செயலி னாற்பெயர் பெற்றதிச் சயிலமச் சிலம்பு
பயிலு மாதவக் கழுகினாற் படித்திடும் பெயர்த்தால். (௭)

முந்து சத்திசெய் பூசையை முடித்திட வெள்ளம்
வந்த வாறிஃ தஃதெழின் மாநிழ லிடத்து

நந்த லில்லதோர் தவமவன் புரிந்துறை நகர
மந்த நீள்வரை யரியய னுற்றன்மாற் றியதால். (அ)

இவணி லங்குதல் பாதிரி மேற்புவி யிலகூர்
நவமி சைப்பகர் நீதமார் நகரியீ தெதிர்த்த
குவளை வாள்விழிக் காளிதன் மதிமுகங் குனியத்
தவர்கள் போற்றிடத் தனிமுத னடித்ததித் தலமே. (௯)

தொக்க வேலையின் டொடர்ந்திடத் தோணியாய் மிதந்த
மிக்க சீருறு புரமிது வெவ்வினை தொலைக்கு
முக்குளந் திகழ் பதியது மொழியுமை மயிலாய்த்
தக்க தண்புன லாடிய தனித்துறை யிவ்வூர். (க0)

அன்ன தாங்கலை மறலிறை யடியடைந் திடுமூ
ரின்ன தானைதன் னுரியிறைக் கிந்தவூ ரிவ்வூர்
சொன்ன வாறுணர் பரம்பொரு ளிலங்குமூர் தோன்று
முன்ன தாலயத் தரசிருந் தரசுசெய் மூதூர். (கக)

என்ன வோதுறு தலங்களும் பிறவுமாய் கிசைத்திட்
டன்ன வற்றிசை தலங்களுற் றரும்புன லாடிப்
பன்ன கம்புனை பரமனைப் பணிந்தனர் படர்ந்து
பொன்னி நீடுபூ சத்துறை படிந்தனர் பொருந்தி. (கஉ)

மீத லத்துறு மதிலிடை விரைவினிற் படருஞ்
சீத வண்முகின் மோதுறீத் திகைத்துநின் றலறு
மோதை கேளுறு தோங்கிய வொலிமறைத் திலங்கும்
பூத லம்புக ழிடைமரு தெனும்பதி புகுந்தார். (கங)

புகுந்து ளாரொடு மன்னவன் புகழ்மரு திடத்தி
னுகந்த சோதியை வணங்கிநு னுயர்மரு திடத்து
மிருந்த பொற்புறோர் வசதியுற் றுறைந்தனன் வேதம்
பகர்ந்த வாமக வேள்வியாங் கிழைத்தனன் பரிந்து. (கச)

அன்ன வேள்வியி லனையவன் மனையவட் கருத்த
மன்னு புத்திர நிமித்தமா வைத்தபொற் கும்பந்
தன்னி லுற்றிடு புனலினைத் தாகமேற் கொள்ள
வுன்னு மோரிரா வெடுத்தனன் குடித்தன னுற்று. (கரு)

தீங்கி டாலமுங் குடித்திடச் செய்திடுந் தாக
நீங்க லுற்றதென் செய்தன மெனத்தனி நின்று
ளோங்கி டுங்கரு வயிற்றினி லுற்றதப் பொழுதே
பாங்கி னுற்றுளோ ருணர்ந்திது பருவர லடைந்தார். (கசு)

உதித்தி டும்பதம் வரிற்கரு வொருகண மாங்கு
வதிக்கு மோவிசை வயிற்றினைக் கிழித்துமுன் வந்து
குதித்த னன்றனிக் காதலன் குவலய மீது
விதிர்ப்பு மின்னலு மடைந்துகீழ் விழுந்தனன் வேந்தன். (கஎ)

கருத்த ழிந்துகீழ் விழுந்திடுங் காவலன் றனது
வருத்த மாறிடக் கிழிபடு வயிற்றினை யினிது
பொருத்தி மற்றதின் மருவுறு புண்ணினை யுலர்த்த
மருத்தி னங்கண்மேற் குவிந்தனர் விரிந்திடு மதியோர். (கஅ)

ஆய செய்கையி லனையபுண் ணுறிடா தோங்கத்
தூய மாதவ முனிவர்கள் சோதியா லயத்தின்
மேய வான்பரி மகவல மேவிநீ யியற்றிற்
காயு மேலிதை யுலர்த்திடக் காணும்வே றென்றார். (கக)

வெற்றி வேந்தனுங் கவரொடு மெல்லெனச் சென்று
மற்றை யோர்வலம் வந்தனன் வருமுனம் வயிற்றி
லுற்ற புண்ணுலர்ந் துயர்திரி வினைகளு முலர்ந்த
கற்று ளோர்களை யிகழ்ந்துறை கயவர்தந் திருவின். (உ0)

பின்னு மூவிரு பதக்கிணம் போர்தனன் பெரிதுந்
தன்னு ளங்கொளா மகிழ்வொடுந் தவளமால் விடையோன்
பொன்ன டித்துணை பணிந்தனன் புவிமுதற் பொருள்க
ளன்ன வற்கும்வே தியர்க்குமாங் களித்தன னநேகம். (உக)

அந்த நீண்மனை யெய்தினு னருமருந் தனைய
மைந்தன் வாண்முக நோக்கினுன் மகிழ்ந்துபொன் வருடஞ்
சிந்தி னுனதி லிருந்தனன் சிலபகல் பின்னர்
வந்து ளோரொடு மகனொடு மருவினுன் றன்னூர். (உஉ)

சந்த தம்புக விடைமரு திறையவன் றாள்கள்
சிந்தை யுற்றிட விருந்துபின் பலபகல் செலுத்தி
யந்த மார்சிவ புரியடைந் தானவன் புதல்வன்
வந்து வெம்பழி போக்கிய வாறினி வகுப்பாம். (உ௩)

**யுவனாசுவச்சருக்க முற்றும்.**



உ

சிவமயம்

# மாந்தாதாச்சருக்கம்.

வெயிலவ னிகரு மேனி விறல்யுவ னாசுவன்றன்
வயினிடை யிருந்து வந்த மைந்தன்மாந் தாதா வென்று
மியலுறு நாம மெய்தி யெழிலினின் மதனை வென்று
பயிலுறு கல்வி தன்னிற் பார்பரிப் பவனை வென்றான். (௧)

திடமதின் மேரு வென்னுந் தெய்வ தவரையை வென்று
கொடையினிற் சலதி முற்றுங் குடித்தெழு முகிலை வென்று
வடிதரு நெடிய வேலின் மருவலர் தம்மை வென்று
சுடர்மணி மகுடஞ் சூடித் தொன்னிலம் புரக்கு நாளின். (௨)

திறல்கெழு கலிங்க வேந்தன் றிறையெதி ருதவா னாக
மறமலி சேனை யானை வாம்பரி நெடுந்தே ரென்ன
நிறைதரு வேலை தன்னி னின்றெழு தூளி தன்னா
லறைகதிர் மறையச் சென்றாங் கவனொடு மடுபோர் செய்தான். (௩)

நவிலுறு மவனு மோங்கு நால்வகைச் சேனை யோடு
முவகையோ டெதிர்த்து வெம்போ ருடன்றுசில் பகல்பின் னேர்நா
ளவலமுற் றனிகத் தோடு மோடினா னதனை நோக்கி
யிவனையான் றுரத்து மாறீண் டியல்பல வென்று மீண்டான். (௪)

அன்னவன் சேனை வீர ரடர்ந்துசெல் கலிங்க நாடன்
றன்னைமுன் வளைந்து நீடு சமர்செய்தார் தானை யோடு
பன்னிடு மவனு மிந்தப் பாரிடை நிற்க வஞ்சிக்
கொன்னுறு கணிச்சிச் செங்கைக் கூற்றினூர் புகுந்தொ ளித்தான். (௫)

வன்படை வீர ரெய்தி மலைவினில் விதிர்ப்பு மேவி
வெங்கொடுத் தவரைக் கொன்ற வெம்பழி மாந்தா தாவைத்
துன்புறச் சூழ்ந்த தன்னான் றொழுதிசை வசிட்டன் றன்னை
யன்பொடு நின்றா னன்னா னஞ்சலென் றிதனைக் கூறும். (௬)

பொருதிரைக் கடல்சூழ் வையம் போற்றிடு மன்னர் மன்ன
கருதலன் றனைநின் சேனை கலக்கநீ மருவு பாவஞ்
சுருதிசூழ் மருதா ரெய்தித் துதிபெறு புரவி மேதத்
தொருவலம் வருமு னம்ம வொருவலங் கணையு மன்றே. (௭)

மருதநகன் னீழன் மேவு வரதனைப் பணிந்து போற்றிக்
கருதிடு பணிக ளாற்றிக் கலந்திடு விசாக நாளிற்
றிருவுறு விழாவுஞ் செய்து திகழவ னருள்பெற் றீண்டு
வருகவிப் பொழுதே செல்க மருவுறு தானை யோடும். (அ)

என்றெதி ருரைத்தான் வேந்த னினிதென மகிழ்ச்சி யெய்தித்
தன்றிருஞ் சேனை சூழத் துலங்கிடை மருதி னெய்திக்
குன்றவில் லிறைவற் போற்றிக் குலவொரு வலஞ்செய் முன்னர்ச்
சென்றன தீமை யாவுந் தீயுறு பஞ்சி யென்ன. (கூ)

ஆங்கதை யுணர்வுற் றெய்து மகமகிழ் வோடு பின்னும்
பாங்குறச் சூழ்ந்துள் ளேகிப் பரமனைப் பணிந்து முற்று
மீங்கெனைக் காத்தல் வேண்டு மித்திற மென்ன வேத்தி
யோங்கிடு மறுகி னெய்தி யுறைந்தனன் வசதி யொன்றில். (க0)

பற்றிடு சேனை யோரும் பருத்திடு மிடங்க டம்மி
லுற்றனர் பின்ன ரெண்ணி லுயர்விலை நிலனுங் காசும்
பொற்றிருப் பணியு மீந்து புகன்றிடு மண்டபாதி
கற்றிருப் பணியுஞ் செய்தான் காவலனுதிக் காங்கே. (கக)

திருப்பணி பலவுஞ் செய்து திசழ்விழா வினிது செய்வான்
விருப்புறு மனத்தி னோடு மேவினன் மேவுங் காலை
யருப்பிள முலைமென் மாத ரடிபெடைக் கனனல் விற்கை
மருப்பயில் கணையா னோடும் வந்தது வசந்த காலம். (கஉ)

சலதியி னமுது நஞ்சுந் தனித்தனி யன்றே வந்த
மலையவெற் புதவு மந்த மருத்தொன் றேமனைந் திட் டோர்சட்
கலகிலின் பமிர்த மாகித் தணந்தவர்க் கடனஞ் சாகி
யிலகிடு மினையோர் வைகு மிடந்துரீஇ யெழுந்த தன்றே. (கங)

மறுவறு கலைக ளாய்ந்தோர் மடனெனத் தருக்க ளியாவு
முறுபழுப் பிலைகள் போக்கி யோதவ ருணர்வு மானக்
குறைவறத் தளிர்த்தன் னோர்தங் குணத்தின்மெல் லரும்பு தோற்றி
நிறைபுக ழென்ன வெங்கு மலர்ந்தன நிறைபூஞ் சோலை. (கச)

பத்திர முதவு பொன்னிப் புதுப்புனல் பாய்ந்து காவுஞ்
சித்திரத் தடமுந் தேமா முதலிய பூத்த செய்கை
சத்திர மதிகொண் டோனுக் கவன்பரி சனங்க ளன்று
னத்திரங் களையங் கங்கே யமர்செயற் கிட்ட லொக்கும். (கரு)

வந்திடு வசந்தஞ் சோலைத் தருவொடு வல்லி கட்கு
மந்தளிர்ப் புதிய தூசு புனைந்தரும் பணிகள் பூட்டி

முந்துற வழகு செய்து முகமலர் வித்துக் கின்னை
மந்திர மிசைய நீடு மன்றல்செய் வித்த தம்ம. (கசு)

அன்னதன் பொழில்செய் மன்றல் காண்பதற் கணைவா ரென்ன
மன்னுறு தானை வீரர் வளவனீள் சேனை வீரர்
மின்னிடை மகளிர் சில்லோர் வியன்பொழிற் போது கொய்து
நன்னர்நீ ராடல் செய்ய நயந்தன ரெழுந்து செல்வார். (கஎ)

சிலரெழிற் றுரங்கம் யானை தேர்மிசை யேக லுற்றார்
நலனுறு சிவிகை மீது நண்ணினர் சிலர்கள் சில்லோர்
பலனுட னெய்த வேதம் பதிகளாய் நடந்தார் நீடு
தலனுறக் குழுவிற் சில்லோர் தனித்தனி சில்லோர் சென்றார். (கஅ)

காரிகை யொருத்தி கன்றோர் காளையுற் றெவரு மியானை
தேரொடு சிவிகை மீது செல்கின்றா ரியானுஞ் சோலை
சேருதற் கொருதே ரேனுந் திகழுறக் களிற தேனு
மாரிவ னுதவ வல்லா ரவனுட னேகவென்றாள். (ககூ)

சுந்தர மகளிர் சில்லோர் தொடர்பி னோர் விடலை யெய்திப்
பைந்தொடி யவர்கட் கெட்டாப் பனிமலர் பறித்து நல்கி
முந்தவர் பணியு மாற்ற முன்னியிங் கெழுந்தே னந்த
நந்தன மறியேன் சற்றே காட்டுமி னல்லீ ரென்றான். (உ0)

வல்லவ னொருவ னங்கோர் மடந்தைமுன் னேனது நெஞ்ச
மல்லுறள் கூந்த லாற்ற றென்றன னவிழ்த்தாள் கூந்தல்
வல்லுறத் தனத்த தென்றான் வனைதுகில் சிறிது நீத்தாள்
புல்லிய தல்கு லென்றான் போவென நடந்திட் டாளால். (உக)

அன்னமென் னடையோர் பாவை யணிந்திடு துகிலி னூடு
வன்முலை சிறிது தோன்ற நோக்கியோர் மைந்தன் மாலாய்
மன்னவ னிற்கி னின்று செலிற்செல்வன் மற்று நோக்கான்
பின்னுற வருவோர் தள்ள விடித்திடப் பெரிது நொந்தான். (உஉ)

சீதள முறு பூஞ்சோலை சேர்ந்தன ரசோகு முல்லை
தாதகி மயிலை சூதஞ் சாதிமந் தாரங் கோங்கு
பாதிரி செருந்தி புன்னை மல்லிகை பன்னி வெட்சி
மாதவி யாதி பூத்து நெருங்கிய வளமை கண்டார். (உ௩)

நீடின வேற்க ணல்லார் நேர்தலுஞ் சோலை தன்னு
ளாடின மயில்க ளீட்ட மகன்றன வெகின மெல்ல
வாடின மழையுண் போகின் மகிழ்ந்தன குயில்க ளோடு
பாடின கிளிகள் பூவை பதுங்கின குடம்பை யுற்றே. (உச)

தேசிழை யொருத்தி யங்கோர் செண்பக மலரைக் கொய்து
நாசிமுன் னீட்டி மோப்ப நவிலுறு காளை நோக்கி
வாசநீ டவைகள் நேரோ மற்றிதை நிகர்பா றொன்றே
ராசில்கோங் கரும்பைக் கொய்து நீட்டின னணுக வந்தே. (உரு)

ஊடலுற் றவள்பின் காத லுயர்தலு மொருத்தி கேள்வன்
மாடுற நிற்ற லோக்கி நோக்குறா தவள்போல் வாவி
நீடொறு மலர்ப்பூங் கொம்பை நேருறப் பற்றி யீர்த்திட்
டாடவ ரொளிவிவ் வேலை யறவிளைத் திடவ வென்றாள். (உசா)

விடையனு ளொருவன் கொய்யு மென்மலர்க் கோட்டின் மீது
படிதரு கொம்பின் மென்பூப் பறிக்கவோர் பாவை பின்வந்
திடையுறு தநின்மேற் கால்வைத் தேறிடன் றேண்மே னின்றாள்
கொடிகளோர் கொழுகொம் பேறிக் குலவிமேற் பிடித்தல் போலும். (உள)

ஒருவிடன் றோளின் மேலின் றொருத்திபூப் பறிக்க வோர்மா
துரியவ ளெனையுஞ் சற்றே பரியென வுறுகின் றானவ்
வரிவைமுன் குதித்துச் சென்றா ளவனுந்தூழ்ந் தகன்றாள் பின்னுந்
திருவரு மிவர்மி னொன்றுந் தெனவிவ மூந்தி நின்றான். (உஅ)

சுடர்த்தொடி மகளிர் சில்லோர் வளைந்திடோர் துணர்ப்பூங் கொம்பைப்
பிடித்தலு மொருத்தி மற்றோர் பெயர்ந்தனர் நிமிர்ந்தி டந்தக்
கடித்தடஞ் சினைப யன்னாள் கைவிடா தந்தி நின்றா
ளடித்தவன் கணவன் கண்ணுற் றணங்கெனக் கருதிச் சென்றான். (உகூ)

உரமிசை மெல்கொல் சொற்க முயரற மியற்றி னோர்கள்
பரிவிற் சேரிடமே யோங்கு பயோதர மின்ப மாரி
தருவதே தனமிங் கேழைத் தனிய னேற்கு தவலாமென்
றொருவிற லோனும் வாட்க ளொருத்தியு மிசைத்து நின்றார். (௩0)

மற்பொலி தொடிக்கை நீயார் மகளெவன் மனை மணாள
னற்புறு மனையீ தண்மை யடியனேன் மனைனே யாஞ்
சொற்பயி லுனக்குநானம் மனையென்றோர் சுடர்வே லோனுங்
கற்புறு மாதும் பேசிக் கலக்கமுற் றனையன் சென்றான். (௩க)

வன்மதக்களி றன்னனோர் வயவனோர் வனிதை முன் போய்த்
தன்மை முன்னிலைப் பேரியார்க்குத் தருமமே துரைக்க வேண்டு
மென்ன மற்றவ ளனக்கு முனக்கு மீங்கிசையு மென்றா
ளன்னவன் போதுமீ தென்றகத் திடையுவகை பூத்தான். (௩உ)

அருத்தி யோரெரி யாடன் பேரினி தறைந்தவளை யங்கோர்
திருத்தகு விறலோன் கூவத் தெரிக்குமப்பெயராண் மற்றோர்

முருத்தன மூரலாளுங் கேள்வி யின் முன் னருற்று
வொருத்தி நாணேடுநின்றுளொருத்திவெஞ் சினமேற்கொண்டாள்.

வெற்றிவேற் றடக்கை யாமேற்ார் வீரனேர் கரிய வாட்கண்
முற்றிழை சென்னி மீதோர் முல்லைமென் மலரைக் கொய்தாங்
குற்றிட வெறிய வன்று ளுயர்கழைச் சிலையெங் கென்றாள்
பற்றறி னிசைநாண் மற்றுறு ணைப் பறந்த தென்றான். (௬௪)

மெல்லி யன்மக ளிராயம் விரவொரு மடந்தை கொங்கை
புல்லுதற் கலகில் காதல் பூண்டவ னொருவ னாங்கு
வில்வமென் கனியி தென்று தொடுதலு நோக்கி மேவு
மல்லிகை முகையி தென்று மலரொன்று கொய்து நின்றாள். (௬௫)

விரும்பின ளொருத்தி சேனேர் விறலினன் விழியை மூடக்
கரும்பெனு மொழியோர் பாவை கண்டுகண் சிவந்து நின்று
வரும்புறக் கேள்வன் முன்னூற் றென்னென மலிநா ளுற்றுச்
சுரும்பு கணவரின் மூழ்கித் தூற்றிய துகளை யென்றாள். (௬௬)

தென்னுறு சோலை யெங்குந் திரிந்தொரு மடந்தை நீடு
நன்னர் மாதவித் தண்ணீழ லணுகலு மொருவ னெய்திப்
பன்னி மென்மலர்க ளீண்டுப் பறித்தளித் திடவோ வென்று
னன்ன வளியான் வண்முல்லை யலர்கொள் ளௌடந்தி டென்றாள். (௬௭)

சேறரிக் கயற்கணேளோர் சேயிழை மலர்கள் கொய்தாள்
வீறுசெந் நிறத்தண் போதிதென் றுதன் மென்கைக் கொண்டாங்
கேறன கொழுநன் முன்ன வெய்தலு மொருமின் னன்னாள்
வேறொரு வனிதையின்றே வென்றனள் வெள்கி நின்றாள். (௬௮)

இத்திற மயிலன் னாரு மிளைஞரு மினிதி னீண்டிக்
கொத்துறு முகையும் போதுங் கொய்தனர் புனைந்து மோந்து
மொத்திட வொருவராகத் தொருவர்க ளெறிந்தும் முன்னர்த்
துய்த்தக மகிழ்ச்சி யுற்றார் தொகுமலர்க் காவி னின்பம். (௬௯)

மற்றரு மிவ ரிவ்வாறு மருவலர் தம்மை யெல்லாம்
பற்றி முன் பிணைத்துக் கட்டிக் கொண்டு பின்பகரு நன்னூல்
கற்றிலோர் மனம்போல் வைகுங் காவுறு வறுமை நோக்கி
யுற்றனர் குளனுமியாறு மொண் புன லாடல் செய்வான். (௭௦)

வேறு.

வந்தியா வருந்துடு மெனக் குதித்தலும் வனநீ
ருந்திடுந் துளிவிசும் பெழல் விசும்பினுக் கோடைக்

கந்தரஞ் சொரிவியப்ப தூஉம் வீழ்ந்திடல் கார்நின்
றந்தரத்திடை மழை சொரி வியப்பதூஉ மாகும் (௪௧)

செய்ய சுண்ணமுந் தேய்வையுஞ் செறிந்திடு மொருவர்
மெய்யினுற்றிட வொருவர் முன் வீசியும் விளங்கு
கையினுற்றிடு சிவிறி நீர் கனமெனச் சொரிந்துந்
துய்ய நீர் குடைந்தும் விளையாடுவார் சூழ்ந்து. (௪௨)

## வேறு.

அன்ன மென்னடைப் பூங்கோதை யரிவைய ரினியதூநீர்
முன்னுறு விருப்பின் மூழ்கி மூழ்கியங் கெழுதலோக்கிற்
றன்னுறு சருங்கொண்மூவிற் சுடர்விரித் தினிது காட்டு
மின்னினந் தோன்றி யாழ்ந்து மீளவுந் தோன்றல் போலும். (௪௩)

சிலைமத னனையனங் கோர்திற லினனொரு பூங்கோதை
முலைமிசைப் புனலைச் செங்கைமுகந்துகந் திறைத்தானீடு
கொலைமதத் தடக்கைவேழங் குளித்திட வமைத்தபாக
னலைபுனல் வாரிவாரி யதன்மிசை யிறைத்தல்போலும். (௪௪)

தாக்கணங் கனையளோர்மான் குளித்திடத் தன்பி னெய்தித்
தூக்கிடு மலர்மென் கூந்தற் சொருக்கினை யவிழ்த்தோர் காளை
தேக்குறு புனலின் மூழ்கிச் சேணிடை யெழுந்தம்மாது
நோக்கியங் கயலோர்ச் சீற நோக்கிமுன் னகைத்து நின்றான். (௪௫)

களித்தவ ளொருத்தி யோர்பாற் சலந்திடு மூடலோடு
குளித்திட வவடன் கேள்வன் குளிர்புன லிடைச்சேண்மூழ்கி
யொளித்தவந் தெழிற்றாள் பற்றி யுள்ளுற வீர்ப்பக்கண்ணீர்
துளித்திட வலறி முன்னர்த் தோன்றிடத் திகைத்து நின்றாள். (௪௬)

ஆழ்ந்திடு புனலினங்கோர் வலவனோ ரரிவை பின்னர்த்
தாழ்ந்தவ ளினியகால் கடன்கழுத் திடைத்தாளென்னச்
சூழ்ந்திட நிமிர்வுற் றந்தத்துடியிடை சீற்றநோக்கி
வீழ்ந்திட வெறிந்துநீரில் வீழுமுன் றடக்கையேற்றான். (௪௭)

பொற்றொடி யொருத்தி தெண்ணீர் புகுந்தொளித் திடுவனீவந்
தூற்றெனைப் பிடித்தியென்ன வுயர்வரை யனையதோளான்
மற்றனைக் குழாத்துட் காண்பான் வளைக்கைபற் றிடுவனென்றாங்
கற்புடன் பற்றிமூழ்கி யாண்மகன் பிடித்தே னென்றான். (௪௮)

விழிகொடு வேலைவென்ற மெல்லிய லொருத்தி கஞ்சத்
தெழிலுறு மரும்பொன்றாழத் திருத்தல்கண் டிதைக்கொய் கென்ன
வழிதரு மதவேளன்ன னொருமக னதுகொண்டெய்தி
மொழியுமிவ்வரும்பினோடு மூன்றெனக் கரத்தி லீந்தான். (௪௯)

நிறமுறு புனலி னின்று நெடுழில் வாவியூடு
நறைவிரி மலர்கொய்வாரு ணவிலொரு திறலோனங்கோர்
மறமலி வேற்கணுடன் வனமுலை தொடலுநோக்கி
யறனிதோ வென்றாள் கஞ்சத் தரும்பெனத் தொட்டேனென்றான். (௫௰)

சமரவேற் கண்ணினாளோர் தையல்வண் புனல்வாய்க் கொண்டாங்
குமிழ்தலு மதனைநேருற் றொருவன்றன்வா யேற்றுண்டா
னமிர்தமொ வனையதென்று ளொருவனங் கதனுக்கன்னாள்
குமுதமென் மலரின் றீந்தேன் கைக்குமோ குடித்தாலென்றாள். (௫௧)

மங்கைமற் றொருத்திபல்கால் மூழ்கலு முரியோன்வாரி
தங்குசெவ் வல்லிப்போது தனியொன்று கைக்கொண்டிந்தப்
பங்கய மலர்நின் கண்போற் பருத்ததைப் பார்த்திடென்று
னங்கவ ளனைய தெண்ணீ ரகன்களா யேறினாளால். (௫௨)

சேலனை கருங்கண் சேப்பச் செய்யவாய் விளர்ப்பக்கூந்தல்
பாலுற வவிழ்ந்துலாவ நிற்குமோர் பாவைதன்னை
மாலுறு வடன்காந்தன் வடிவிதென் னெனவோர் தைய
லேலநீர் தோய்ந்திட்டான்மற் றெவ்வண மிருப்பதென்ன. (௫௩)

ஓதுறு புலவியாளோ ரொண்ணுதல் புனைமெல்லாடை
சீதநீர் நனைந்துமேனி தெரிதலு மணாளற்கூவி
வாதனந்தந்தி டென்றான் மனமிரங்கியதோவென்று
றுதமென் படமென்றான் பின்னானு மெண்ணினனீ தென்றான் (௫௪)

நன்னுறு மிவரிவ்வாறு நாடியிவ் வொருவராக
வண்ணநீள் கரையிலேறி மறுதுகில் புனைந்து சாந்துந்
தன்னுறு மலர்ப்பூந்தாருந் தழைகதிர்க் கலனுந்தாங்கி
யுண்டமிழ் வெய்தித்தேற லுண்பதற் கொருப்பட்டாரால். (௫௫)

கன்னிகை யொருத்தி யீரத் துகிலளோர் காதலோனை
மன்னனீ கலையென்றாணீ மான்கொலென் றெடுத்தீந் திட்டான்
அன்னவள் கலவையென்று டுகில்புனைந் தனையே யென்று
னன்னவள் கலனீ யென்று ளனையனீ நல்லனென்றான். (௫௬)

கஞ்சன்வானில் வில்லுங் கணையும் போகமு முன்கொண்டு
மஞ்சினஞ் சூழத் தோன்று மதியெழி னோக்கிச்சேடி
வஞ்சியர் பளிங்கிற் பொன்னின் வகுத்திடு வள்ளந்தன்னில்
விஞ்சுதேன் வாக்கிநல்க மென்கனி வாய்வைத்துண்டார். (௫௭)

மின்னிடை யொருத்தியுண்டு மிகுந்திடு நறவுட்டோன்றுந்
தன்னெழிற் றனத்தை யிந்தச் சலசமென் முகைபூவாத

தென்னென வொருத்தி யெய்தி யிருவர்த முகமுநோக்கி
யின்னவை மலருங்கொல்லோ விருமதி முன்னமொன்றாள். (௫௮)

தேறன்மிக் கருந்தி ஞளோர் தெரிவைகஞ் சனத்தினூடு
கூறுதன் படிவநோக்கிக் கோற்றொடி யெனைப்போலென்னல்
காறுநன் கிருந்தா யின்று கண்முகம் வாய்மற்றெல்லா
மாறுபட் டிருந்தி யென்னே மதுநுகர்ந் தனையோவென்றாள். (௫௯)

குடித்தவ ளொருத்தி வேரிக் கூழிசியின் மதியை நோக்கிப்
படித்திமுன் னெனையின்றீண்டுப் பதுங்கிடில் விடுவேனென்
றெடுத்தலைத் திடக்கையிட்டாள் காண்கில ளோதிவாளேக்கி
விடுத்ததிக் குழிசியென்ன வெகுண்டிதைத் துடைத்திட்டாளால். (௬0)

நீடியமைய லாளோர் நேரிழை தனது தாயை
யாடியுநோக்கியாளிங் கென்செய்தே னலக்க ணெய்த
வீடுறு மிதனிலென்னை யடைத்தவ ரியார்கொலென்றாள்
கூடிமற் றவளை நீங்காக் கொழுநன்பார்த் தெனையுமென்றான். (௬௧)

மட்டள விளாதுகொண்டு மாதவ மியற்றுமேலோர்
திட்டையி லிருப்பதென்ன விருந்தன ளிகழ்வோர் தையல்
கட்டுபூங் கோதையோர்மின் கணவனுந்தானுமவ்வரு
மிட்டமுஞ் சினமுமற்று மெடுத்தெடுத் திசைத்தாண் மன்றே. (௬௨)

வரிகளோச் சிடவோடாது வள்ளமொய்த் திடலுமுன்னு
மரிவையங் கொருத்தி யின்ன தளிகட்கோ வெனக்கோ வென்னப்
பரிவுறு சேடி யுண்மின் பகுத்திரு விருமென்று
ளிருதிறத் தவர்க்கும் வேண்டா வென்றெடுத் துகுத்துநக்காள். (௬௩)

ஒருமக னூடத்தன்பி னின்றிடு முரிய வொன்றாங்
கருகுறு மொருத்திக் கிதை யருந்தெனத் தாறுண்டெஞ்சு
முருகினை நீட்டவாத மொய்குழல் கணவன்சீற
விருவரு மின்னஞர்க ளிருவருஞ் சமரி னின்றார். (௬௪)

ஆரமு தனையதீம்பா லடிசிலுந் தயிர்விராய
மூரலு மிழுதின் சோறு மூவகைக் கனியுந்தூய
நீருநீ டருந்துவார்க ளிகழுமியா ழிசைப் பார்மற்றை
யோர்தரு மிசைமுன் சோரவொருவர் மேலொருவர் வீழ்வார் (௬௫)

வின்னுத லொருத்தி சூத மென்கனி யருந்தென்றீயத்
தன்னுரி யவனீள் கொவ்வைத் தண்கனி தருகென் றோனோர்
மின்னிடை யிளநீர் மன்னவேண்டுங்கொ லெனவோர் வில்லோ
னென்னதினிருக்கும் பாலோ வின்சுவைப் புனலோ வென்றான். (௬௬)

பன்னிடு மிருதோராறிற் படிந்திடு வசந்தமென்ப
துன்னிடு மதுவென்றோர் பேருற்றவந் துவந்தெவர்க்குமின்ப
மிந்நிலத் தெய்துவிக்கு மென்றிடி வினையகாலத்
தன்னதை யருந்தினோர்கள் களிப்பினுக் களவுண்டாமோ. (௬௭)

மருவுமிவ் வேனிறன்னின் மாதவ மெய்தலோர்ந்து
நிருபனு மகிழ்ச்சியெய்தி நீணில வேந்தரியாரும்
வருகென முடங்கல் போக்கி யவர்கடம் வரவுநோக்கித்
திருவுறு நகரமெங்குஞ் சிறப்புமேற் சிறப்புசெய்து. (௬௮)

புகல்விடைக் கொடிமுன்னேற்றிப் பொருந்துமி னைந்துநாளுந்
திகழுறு மூர்திமீதுந் தேரினும் பவனிபோந்து
தகவுறு தீர்த்த நல்கித் தனிமுதல் மருதவாண
னகமகிழ் வெய்தச்செய்து சொரிந்தன னம்பொன்மாரி. (௬௯)

விரவுறு மறுநாள் வேந்தன் விளங்குபொற் கோயிலெய்தி
யரனெதிர் பணியுங்காலை யரசநின் பவங்களியாவு
மொருவின நீயுன்னூருற் றுலகையாண் டிருபதுன்றைன்பின்
பரபத மெய்துகென்னப் பகர்ந்தன னரன்விசும் பாக்கால். (௭௦)

அம்மொழி செவியினெய்த வகங்களி கூர்ந்துமன்னன்
கைமதவரைத்தோல் போர்த்த கடவுட னருளையெண்ணிச்
செம்மைநீ டன்பிற்போற்றி விடைகொடு சேனையோடும்
வெம்முர ணகற்றுங்காவல் வியனகர யோத்தியுற்றான். (௭௧)

பொலன்குவ டனைய திண்டோட் புகலுறு மாந்தாதாமுன்
கலிங்கநாட் டிறையைக்கொன்ற கடும்பழி தொலைத்தெம்மீச
னிலங்கருள் பெற்ற வாறீ தினியெழில் வசுமானெய்தி
வலங்கொடு தனதுநாடு மருவிய காதைசொல்வாம். (௭௨)

மாந்தாதாச் சருக்கம் முற்றும்.

---

௨

சிவமயம்.

# வசுமன்னவச்சருக்கம்.

திரைமான மில்வளையுஞ் செழுந்துகிரு மெறிகடல்சூழ்
தரைமானுண் முகநிகருந் தண்பொழில்சூழ் கச்சியினு
றுரைமாணி கருமினைய வுலகுபுரந் தருளுவதில்
வரைமானும் புயமுடையான் வசுமானென் றொருவேந்தன். (௧)

### வேறு.

திருவளர் காசிக்கேகித் திகழ்கயாச் சிராத்தஞ்செய்யக்
கருதியங்குற் றனந்தக் காரியமுடித்துத் தன்னூர்
மருவுமுன் மருவலார்கள் வலிகொடு மருவியந்தப்
பெருநகர் தனைக்கொண் டார்கள் பெட்பொடு காலநோக்கி. (௨)

அத்திறம் வருவான்கேளா வராமணி யிழந்தாங்கொல்கி
நித்திய ஞானானந்த நிருமலற் குரிமையுற்ற
முத்தனை யுயர்சாபாலி முனிவனை யடைந்துபோற்றிக்
கைத்தல மலரிரண்டுங் கலந்தொரு முகையாச்செய்து. (௩)

ஆதிதன் பொருள்கொண்டேனோ வந்தணர் பொருள்கொண்டேனோ
மாதவர் பொருள்கொண்டேனோ வலிமையி னேழையோர்க
ளேதமுற் றிடச்செய்தேனோ வெனதெழி னகருநாடும்
பேதுறு தெவ்வ ரெய்திக் கவர்ந்ததென் பெரியோ யென்றான். (௪)

முற்பிறப் பிடைநீ செல்வ முதிர்ந்தவன் புகல்பல் பண்டம்
விற்பவன் வணிக னொன்றாய் விளங்கெழின் மனையின் பாங்கர்ப்
பொற்புறு மனையி னோனோ பூசுர னானுநின்பாற்
சொற்பெறு தண்டலாதி வேண்டவ தொடர்ந்துகொள்வான். (௫)

கொண்டவை திங்கட் கோர்காற் கூட்டியங் கவற்றிற்கெண்ணிற்
கண்டிடு பொருள்மற்றீவான் கணக்கினி லீதறீட்டி
மண்டிய வரவுதீட்டா திருந்தனை வருடமைம்பான்
விண்டிடு வனசத்தாரான் விளிந்தனன் காலமெய்தி. (௬)

அன்னவன் மனையும் வீந்தா ளவற்குநா லைந்துமைந்தர்
பன்னிடு மிளமை யுற்றோர் பற்றிநீ யவர்கடம்மை
மன்னவ னவையின் முன்னர் வரவிலாக் கணக்குக்காட்டித்
துன்னிடு மவர்வீடாதி தொகுபொரு ளியாவுங்கொண்டாய். (௭)

ஆதலா லினது நாட்டைக் கவர்ந்தனரமரா ரிந்நா
ளோதுசில் பொருள்கண் முன்னி யொளிர்மதிச் சடையினோற்குங்
கோதில் சீரடியார் கட்குங் கொடுத்தனை யதனாலிந்தப்
பூதலங் காவல்செய்தாய் புரவலனாகத்தோன்றி. (௮)

புரவிநன் மகமிப்போது புரிந்தனை யாயினுன்றன்
றிருநகரெய்துமென்னச் செப்பினன் முனிவன் வேந்தன்
றெரிதரு புடவியின்றி நிதியின்றிச் செய்வதெவ்வா
றிருநிதி யுளதே லியார்க்கு மெண்ணிய முடியுமென்றான். (௯)

பொருவில்சீர் முனிவன் வாவி புண்டரீ கமலப்போது
மரிவையர் முகமும் வேருங் கறிவுரு துழலுஞ்செல்வத்
திருவிடை மருதினெய்தித் திகழ்பரி மகத்தின்பேறு
தருவலம் வரினுன் வையஞ் சார்ந்திடு மின்றே யென்றான். (௧௦)

வேந்தன்மிக் குவகையெய்தி விடைகொடு நடத்தின்வாளை
பாய்ந்துசெவ் விளநீர் சிந்தும் பகரிடை மருதின்மேவித்
தோய்ந்துதண் பொன்னியீசன் றுணையடி பணிந்துபோற்றி
வாய்ந்திட வலனுங்குற்றான் மனத்தினும் வலனுற்றானல். (௧௧)

அவ்விடை மருதின்கண்ணே தானிருந் தமைச்சர் தம்மைத்
தெவ்வர்மேல் விடுத்தானன்னோர் சென்றவர் தமைப்போர் தன்னில்
வெவ்வழற் படையால் வென்று மேவுதன் றடையன்றிக்
கவ்வைசெய் தவர்தந்நாடும் பற்றினர் கடிதுவந்தார். (௧௨)

குரிசிலுண் மகிழ்ந் தமைச்சர் கொண்டிடு தெவ்வர்நாட்டை
வருசிலை மேருவாக்கு மருதவாணனுக்கு நல்கித்
துரிசறு தனுவிற்செங்கை தொடர்விழா நடாத்திப்பின்னர்
முரசதிர் தானைசூழ முதுநகர்க்காஞ்சியுற்றான் (௧௩)

சத்திமு னிவ்வூரொன்னத் தவம்புரி காஞ்சிவேந்த
னித்தனி வலஞ்செய் தீச னருளுந்தன் னெழில்கொளுடுஞ்
சித்தமின் புறக்கொண்டெய்து திறனிஃ துறந்தைமன்னன்
மித்திரற் கொன்றபாவம் விலக்கிய கதைமேற்சொல்வாம். (௧௪)

வசுமன்னவச் சருக்கம் முற்றும்.

---

உ

சிவமயம்.

# அஞ்சத்துவசச்சருக்கம்.

நஞ்சத்துணைவேல் விழிமடவார் நயந்துமட றீட்டெழில் வடிவான்
கஞ்சத்துவளை முத்தளிக்குங் கழனித் தென் காவிரிநாடன்
வெஞ்சத் துருக்கட் கரியனையான் மிருகல்வியினு னொருவளவ
னஞ்சத்துவச னெனும்பெய ரானன்னு னுறையூ ருறையூராம். (௧)

வனைபொற் கழலான வன்றனக்கு மறையோனொருவன் மித்திரன்மற்
றனையோன் பெயருமித்திரனேயாகு மரசன் கலைகளினுற்
கனைவெண்டிரை நீர்க்கங்கையின்மான்மியமோர்ந்தொருநாட்கண்போன்று
தனையா தரவினுற் பிரியாமறையோன் றன்னோ டிதுகூறும் (௨)

நித்தன் மகிழு மெழிற்காசி நிகழுங்கங்கைப் புனல்படியச்
சித்தமுடையேன் பிறர்நாட்டிற் சேறலெனக்குத் தகவன்று
மெய்த்தகிளைஞ நீயாண்டு மேவிப்படிந்தப் பலன்றன்னைத்
தத்தமளித்தி யெனப்புகன்றான் றனிமா மறையோனதையுணர்ந்தே. (௩)

மனைவிசிறியா ளுற்றதுணை மற்றுவேறின் றெனவுரைத்தான்
புனைவேற் றடக்கைச் செம்பிய னீபோதிவா ளாவவ ளெளியேற்
கனையா மியான்மற் றவ்வனிதைக் கனைதன்னொடு தாதையுமாகு
நினையல்வேறு புறநின்று காப்பனென்று நேர்ந்துரைத்தான். (௪)

அந்தணாள னெதிரிசை வுற்றள வினிதிகள் பெற்றேகிச்
சந்தமனைவிக கரசுரைத்த தகவுந் தானேதியது முரைத்
திந்துநுதலாய் சிலபகலி லியானிங் கணைவேனிரங்கலெனச்
செந்தண் சாலிமுதலியன வாங்கிக்கொடுத்துச் செலலுற்றான். (௫)

அந்தமறையோன் சென்றவுட னரசனகர் காவலரை யழைத்
திந்தமறுகில் வளர்மறை யோர்க்கிடையூ றென்றுமணுகாது
முந்துதனிலும் பதின்மடங்கு முயன்று காப்பீ ரெனவுரைத்துச்
சிந்தைமகிழத் துகிலுதவி விடுத்தானவருஞ் சென்றனரால். (௬)

நாமவடிவேற் புரவலனு நணுகிப்பாங்கன் மனைப்புலத்தி
னேமமுழுதுந் தளித்தகற்பி னெழிலார் மயிலைமதி மயக்குஞ்
சாமரூபிகளா விடையூறின்றிக் காத்துப் புலர்காலைத்
தாமமணிப்பொற் றசும்பினொளிர் தன்மாளிகை கயுற்றினி திருக்கும். (௭)

கங்கைபடிந்து புனல்கொண்டு கடுகநடந்து சிலநாளிற்
பொங்குகடலிற் பகல்குளிக்கும் போதினொருதன கரணைந்து
திங்கட் கதிர்வெண் குடைவேந்தைச் சென்றுகாலை காண்டுமெனத்
தங்குமனையுற் றில்லினொடு மகிழ்வுற்றிருந்தான் சதுர்மறையோன். (௮)

என்றுமடைந்து காப்பதுபோலின வண்டறையுந் தார்வேந்த
னன்றுயிரவின் மனைப்புறத்தி லடைந்தா னகத்தினொரு காளை
துன்றுமுரை சண்மெல்லெனத் தன்றலங்கு செவியிற் புகுந்திடலுங்
கன்றுமனத் தன்மானத்த னின்றாங் கினையகருதிடுமால். (௯)

திரைப்பாற்கங்கை படிவதற்குச் சென்றான் வந்தானெ னிலதற்குத்
தரைப்பாலதுவோ நெடுந்தூரஞ் சார்தலரிதித் துணைக்கதழ்வில்
விரைப்பூங் குழலாள் கற்புடையாள் விரும்பாள் பிறனையாயிடினுங்
கரைப்பார் கரைக்கப் புகுந்தனரோற் கல்லுங்கரையு மெனுமுலகம். (௧௦)

காவல் பலவுந் திசழ்கடையுங் கடந்து சிறிதும் பயமின்றி
மேவித்தனிவா ழிளங்குயிலை விகாரப்படுத்தும் விடனிவனைத்

தூவள் வடிவாட் கிரையாகக் கொடுக்கவேண்டு மெனத்துணிந்து
பாவுசுவரின் மீதேறிக் குதித்துப் பையவுட் புகுந்தான். (௧௧)

வேறு.

மன்னுவேதியனைக் கண்டான்வழிவந்த துயரான்மேனி
துன்னுவேற்று மையினுனுந் தோற்றுமவ் வழியினுனு
மின்னமொன் றுணராதோடு மென்றியா தொன்றுங்கேளான்
பின்னுறச் சென்றன்னான் மேற்பிறங்குவா ளெறிந்தான் மன்னோ. (௧௨)

வீழ்ந்தனன் பனவன் பார்மேன் மின்னிடை மடந்தைகண்டாள்
சூழ்ந்திடு மணிப்பசும்பொற் றொடிக்கர நெரித்துவாய்விட்
டாழ்ந்திடு கங்கையாடி யணைபல மிதுவோவென்று
ளோய்ந்திடு புறத்தோர் கேட்ப வேங்கினுண் முறையோவென்றாள். (௧௩)

காவட னொருவனென்றன் கண்மணி யனையகாந்தன்
சிரமறத் துணித்தானையோ தெரிக்குமிந் நகரந்தன்னிற்
புரவல னிலையோமற்றும் புண்ணியமிலையோவென்று
மருள்கொடு விழிநீர்சோர விழுந்தனள் மணாளன்மீது. (௧௪)

தழுவின ளெளியேனிங்குத் தனியுறக் கங்கையென்னுஞ்
செழுநதி யாடப்பன்னுள் சென்றனை யின்றுவந்தாய்
வழிவரு துயர்தீர்முன்னர் மறித்துமிப் போதுமெங்கு
நழுவினை மெல்லவையா நானினித் தனியிதொன்ல் (௧௫)

புனைபுகழ்க் கங்கையாடிப் போந்தனை யிந்நாளோகல்
கனைகட லிடைத்தோய்தற் கோகவி னுறுதலங்களெய்தித்
தனிமுத வினைக்காண்டற்கோ சார்ந்திடி லிவற்றிற்கிடாரும்
மனைவியர் தம்மோடேகும் வழக்கநீ யறிந்திலாயோ. (௧௬)

தெரியர மகளிர்தம்மைச் சேர்ந்திடற் கென்னைவஞ்சித்
திருவிசும் பணைவுற்றாயோ வெனையுனக் களித்தவென்றன்
குரவாாண் டிருப்பதாலெங் கொம்பனுள் பிழையென்செய்தாள்
மருவலென் னிவனை யீண்டு வந்தெனி லியாதுசொல்வாய். (௧எ)

என்னவெண் ணகைப்பூங் கோதை யிரங்கலு மிறைவனோர்ந்து
தன்னுள நடுங்கிவீழ்ந்தான் றனைமிசைப் புரண்டா னேங்கிப்
பின்னரு மெழுந்தானந்தோ பிறங்குகண் ணருவிசோர
வின்னுயிர் விடுத்தான் றன்னை யெடுத்தணைத் திளையசொல்வான். (௧அ)

வேறு.

வித்தகநீ தண்குண நிதியே வேதியர்தங் குலமணியே விணையினேற்கு
மித்திரனு யிருந்தனைநீயா னுனதுதலை துணிக்கும் வெய்ய பாவிச்

சத்துரு வாயிருந்திட் டேனெனைப் போல மறுவேந்தர் தரணிமீதன்
சித்தமறிந்திட வுளரோ வென்செய்தே னென்செய்தேன் சிறியனேனே.

முந்துதினக் கிசைத்தபடி யநுதினமும் மனைப்புறத்தின் முயன்றுகங்குல்
வந்தினிது காத்திருந்து சென்றிடுவே னவ்வாறு வந்தேனின்றுஞ்
சந்தமுறு மனையகத்துன்மென்மொழிகேட்டிங் கெவனோசார்ந்தானென்று
சிந்தையுறு வெகுளியினு லியாரொன்று திவ்வாறு செய்தேனையா. (௨௦)

பொன்னுலகி லியானுமென்றன் மரபினரும் புகுந்திடுவான் பொருவில்
கங்கை, தன்னிலுறப் படிந்தனைய பலன்றனைநீ தருதியெனிற் சார்ந்துவந்
தீண், டென்னையறி யாதகத்திற் புகுந்திருந்தென் கைவாளா லிறந்திட்டி
யாரும், வெந்நரகிற் புகப்புரிந்தாய் நீயுமின்று வஞ்சனைதான் விளைத்திட்
டாயால். (௨௧)

என்றரசன் புலம்பலுமவ் வேந்திழைநீ டிரங்கலும் பாங்கிருப்போர்கேளா
மன்றதெரு மரலினுட னிறும்பூதுங் கொடுகெதழ்வின் வந்துசூழ்ந்து
பொன்றுமறை யோன்றனையு மாதினையுங் குரிசிலையும் பொருந்தநோக்கி
வென்றிவடி வேலவனைப் புவிபுரப்போ யெவனிந்த விளைவென்றூர்கள்.()

வண்ணமதிக்குடைவேந்தன்கங்கைதனக்கந்தணன்செல்வகையுந்தான்வந்
தெண்ணுதலைக் காத்ததுவு மன்றகத்தி னுற்றதுவு முலவுந்தன்னெஞ்
சென்னியதூ முடித்ததுவு மொன்றொழியா தெடுத்திசைத் தானியாது
சொல்வார், திண்ணமுறு மறையோரும் பிறர்களுமோர்ந் திதுதெய்வச்
செயலேயென்றூர். (௨௩)

அனையமறைக் குலத்தினுறுமுறவினர்பின்மடந்தைதனை யன்பிற்றேற்றிக்
கனைகடலிற் கதிர்பிறந்த பின்பிறந்தான் றனதுடலைக் கனலின்மாலை
புனைவித்துப் பிறவுமுள கடன்களுஞ் செய்வித்தனர்கள் புகலும்வேந்தன்
றனையுனையா னினிப்பிரியே னெனப்பிரமகத்தி வந்துதழீய தன்றே. (௨௪)

வேறு.

நின்றிடு மெதிரோ நகைத்திடுங் குறுகுநீபழிதாவென வுரைக்கும்
வன்றனித்தடக்கை பிடித்திடு மிழுக்கு மடித்திதழெயிற்றினலதுக்குஞ்
சென்றிடுந் திரும்பு மருகினி லிருக்குஞ் சென்னியுண்ணடுங்கிவெய் துயிர்
த்துக், குன்றுறழ் புயங்கண் மெலிந்துவெம்பணிவாய் கொண்டிடு தேரை
நேரானன். (௨௫)

ஆனினமருந்தத் திருவைகொய் தளித்தானுனுடு விளைநில னுநீ
தானமெண் ணிலவத் தணர்தமக் கீந்தா னென்றினுந் தாழ்வுறு தநிந்து

தேனுறு வனசத் தொடையினோர் பலவாந் செய்வதீர்த்தங்களிற் படிந்து
மானுறு கரத்தான் றனைப் பலதலத்தின் வணங்கிடிற் போமிஃதென்றார். ()

கொற்றவ னதனுக் கிசைந்திரதாதி குழுவுறு தானையினோடுந்
தெற்றென வெழுந்து திரிசிராப்பரவு சிரகிரி யிடத்துநன் களிக்கு
முற்றுசீர்த் தீர்த்தம் படிந்துதாயான தாதையை முறைமை யின்வணங்கி
மற்றுள தலத்து மத்திறம் புரிந்து மருவினு னிடைமரு தெல்லை. (உஎ)

வாருண தீர்த்தக் கரையினுற் றிடுங்கால் வயங்குமாதவர் பலரீண்டிச்
சீருறு மிதனிற் படியிலுன்னடுக்கந் தீர்ந்திடு மென்றன ரனைய
தாரணி புயத்தா னதனிடை மூழ்கிச் சாற்றுமாங் கிலங்கிடு பரம
னேருறு பதங்கண் டிறைஞ்சினுனிறைஞ்சியெழுமுனந் தீர்ந்ததந்நடுக்கம்.

சிறிதுள மகிழ்வுற் றங்குநின் றேகிச் சிறந்தமாதவ ரொடும்பூசத், துறை யினுமுயர்காருண்ணியத்தடத்துந்தோய்ந்துதன்னியதிகண்முடித்து,மறை யவர் தமக்கு நிதிபல வுதவி மருதநன் னிழல் வாழ்முக்க, ணிறைவனை யெதிர்கண டிறைஞ்சினு னெழுந்தாங்கி லங்கு பொற்கோயிலுட் புகுந் தான் (உக)

புகுந்திடு பொழுதினெடிய கோபுரத்தின் புறத்திடைநின்றதன்னவன்பாற் றிகழ்ந்தவன் பிரமகத்தி வல்லிருணோர்செலுங்கொலோசோதிதன்முன்னர் மிகுந்திடு பொறைதீர்ந்தவன் றனையொத்து வேந்தனுள்ளடைந்துதண்ணி தழி, யுகந்த செஞ்சடிலக் கரும்பினை விழியாலுண்டு பேரின்ப முற்றன னல். (௩0)

அண்ணலே தனியே னறிவிலா திழைத்த வடுபழி தீர்த்தெனை யாண்ட
புண்ணியமலையே புகழருட் கடலே புனிதநீ சரணமுண்டகத்தின்
கண்ணுறுமுனிவற்கண்ணினும்வாக்கைக்கண்ணுறு கனலியா யுணர்ந்தோ
ரெண்ணிடத் திருக்கு மிடைமரு திருக்கு மிருக்குமன்னுதனேசரணம். ௩க

வில்லிடுங் கயிலை வரைதனை யெடுத்த விறலுடை யிலங்கையர் பெருமான்
வல்லுட னெரிந்து வாய்தொறு மிரத்தம் வார்ந்தரற்றிட மலர்ப்பதத்தோர்
மெல்விர னுதியான் மெல்லென வழுத்து வித்தகத் தலைவநீ சரணஞ்
சொல்லுறு முமையாள் புரிதவ நோக்கித் தோன்றிய சோதிநீசரணம். (௩௨

சலந்தரனுடலந் தடிந்திடக் கணத்தோர் தாளினிற் சமைத்த சக்கரத்தை
வலம்புரித் தடக்கை மால்விழியனைய மலரடி புனைந்திட நோக்கித்
துலங்கிடு மவனுக் குகந்தினிதளித்த சுடர்மதிச் சடிலனே சரண
மிலங்குமிற் கொடிசென் றிரவிதேர்தடுக்குமிடைமருதிறைவனே சரணம்.

எனவிரு கரமுஞ்சிரமிசைக் குவித்தாங் கிதைய்நெக்குருகநின்றேத்திக்
கனமுறு வரங்கள் பெற்றகன்றனைய கவின்பதியிடைச்சில் வைக
லினமுற விருந்துபின்பு தனன் கருற்றிரு நிலம் புரந்திருந்ததன் பின்
புனிதவெண்கயிலை மருவிவீற்றிருந்தான் புகழ்மரு திறைவனின்னருளால்.

அஞ்சத்துவச்சருக்க முற்றும்.

---

உ

சிவமயம்.

# தேவவிரதச் சருக்கம்.

வேறு.

அவமதிக் குழுக் குறும்பெனு மடவிரன் கெறிந்து
சிவமெனும் பயிர் வளர்த்திடு செழுமனப் புனத்தீர்
தவனனுக்கெனும் பிரமகைவர்த்தனக் தன்னிற்
புவனமுய்ந்திடப் புகல்கதை நனியினிப் புகல்வாம். (௧)

மேவு முப்பதிற் றிரண்டிரட்டிய கலைவிரிவும்
யாவவெண்ணமு முணர்ந்திடு முணர்ச்சியுமிமையாத்
தேவர்தம்முட னசுரர்க்கு முறவுறு திறனும்
பாவைபாகன் கணிகை யிசைத்திடலு நீள்பரிவும். (௨)

எவர்களா லுந்துன் புறுமையு மறிந்தவை யிசையு
டவரிடத்திலுற் றுரைப்பது மருந்தவ வலியும்
புவன மெங்குமுற் றொரு நொடிப் போதில் வந்திடலு
நவிலு மிபாவையு மெய்திய நாரத முனிவன் (௩)

தாமரைத்தலை யுறைந்திடு சதுர்முகக் கடவுள்
மாமலர்ப் பதஞ் சென் றெதிரன் பொடும் வணங்கி
யேமவில்வரைச் சிலையினனினிதுறை தலங்க
ளாமவற்றின் முன்னலகில் வுரைத்தனை யையா. (௪)

அன்னவற்றினு ளுயர்தல மெத்துணை யவைக
ளின்னதின்னதென் றுணர வின்றெனக் கிவணறைதி
யென்னவோதின னேதிமத் திருப்பவ னிசைந்து
பன்னுமத்தலம் புகலுதுங் கேளெனப் பகரும். (௫)

பூட்டி டெண்ணிலாப் பிறவிசெய் புண்ணியவசத்தா
லொட்டமூன்றினன் கதையினைக் கேட்கவுண் ணுடுங்

கேட்டமாணவ னூற்றொருதலை முறைகிளக்கும்
வீட்டினுற்றிடச் செயுமிடை விளங்கு தன்னுடனே. (௬)

ஆயதன்மையாஞ் சிவகதையா னுனக்கறைய
நீயுகந்துளங் கேட்பதி னீடினியானுந்
தூயனுகினேன் சுருட்டுவெண் டிரைக்கடல் சூழ
மேயபாரிடைச் சிவத்தல மெண்ணில விளங்கும். (௭)

எண்ண வற்றுளேழா யிரத்தீரிரு நூறு
நண்ணு மேன்மையன் னவற்றுளாயிரத் திருநான்காண்
டண்ண லெய்திடுதூறவற் றறுபத்தெட் டவற்று
ளொண்மை மேவுநாலாறவற் றுயர்ச்சியோ ரெட்டாம். (௮)

பேசிடன் னவைகைலை நீடருணையாம் பிறங்கல்
காசி காளத்திகூடல் வண்புலீச் சரங்கமலை
வாசமார் பொழிலிடை மருதவிடை மருது
மாசில் பூண்முலை யுமையவண் மணமெனத் திகழும். (௯)

ஆதியிற்பர னுமையவட் கனுதியா மனைய
மாதலத்தினைக் காட்டுவான் கைலைமால் வரைநின்
றுதரத்தொடு போந்தன னதன்முனவ் வசலம்
போதலுற்றவ ணிருந்தது புகழ்மரு நாகி. (௧௦)

வாசநீடுமம் மருதினை மணிவிழி நோக்கிற்
றேசிலங்கிடு கயிலையின் றெரிசனப் பலனு
மாசையால் வலமியற்றினு மிறைஞ்சி னுமதனைப்
பூசைசெய்யினு மம்மலைக் கியற்றலே போலாம். (௧௧)

சிறக்குமவ்விடை மருதினிற் பிறக்குதல் செயினு
மிறக்கினுங் கணமிருக்கினு மெதிர்படிந் திடினு
நெறிக்கணேருற நோக்கினு நினைக்கினு மதனை
மறக்கொடும்பவ மகன்றிடு மருவுநீ டின்பம். (௧௨)

சாற்று மத்தலத்திறையவன் றந்தைதாய் குரவர்க்
காற்று வெவ்வினைத்துரோகமு மகலுமோர் வளவன்
மாற்றில் சீரொருதென்னவன் மற்றொரு வேந்த
னேற்ற பாதகப் பிரமகத்திகளு மாங்கிரிந்த. (௧௩)

அன்னவண்பதி மருவுதீர்த்தங்களோ ரளவு
துன்னிடாவவை யாவையுஞ்சுரநதி பொருவு
மன்னுபுண்ணிய மனுவொரு மேருவின் வளரு
மெண்ணபாதக மியற்றினு மிலங்கிடாதம்ம. (௧௪)

அத்தலந்தனில் விபண்டக முனிவரனளவில்
சுத்தமாதவர் சூழ்ந்திடச் சூழிருநான்கா
யுய்த்திடுஞ் சதுர்யுகமினி துறைந்தனன் றவத்திற்
சத்தியோர் புறந்தனிலுறு தாணுவைப்பணிந்து. (கரு)

சொன்னமாதவ விபண்டகன் சோதிதாளடைந்த
பின்னெடும் பகலகன்றபின் னேகியப்பேரூர்
மன்னுமீசனைப் பூசைசெய்தெழிற் சுருமதியி
னன்னவொய்திடு முயர்விழா நடாத்தினோநாமும். (கசா)

வேறு.

அதிகவளந் தருமனைய விடைமருதி லெமைப்போல்வா ரளவிலாத
விதிகளுமன் னவர்களைத் தஞ்சுதராகப்பெற்ற ருளச்சுதரு மேவி [ற்றூர்
மதிதரித்த செஞ்சடையோன் றனைப் பணிந்து தாம்வேண்டும் வரங்கள்பெ
முதியனவாமவையனைத்துமெண்ணிறந்தவாயுடையோர்மொழியவேண்டும்.

வேறு.

நீடுமெச்சுவ மேதமென் றொருவல நிகழுங்
கூடியங்கதில் வலஞ்செயில் விழிபெறுங் குருடன்
வாடன்மேவுறு குட்டமும் வறுமையுங் கயமு
மோமெற்றுள துன்பமு மலகையு மோடும். (கஎ)

புவனமேத்திடை மருதுறை யிறையவன் பொருளைக்
கவர்தலுற்றிடி னோணுக் கடைஞராய் நூறு
பவமடைந்துபின் னூறுருநாயினுற் பவித்துத்
துவளலுற்றுமேற் புழுவதாம் பிறவியிற் றொடர்வார். (கஅ)

முந்திவ்வாறொரு மறையவன் முதல்வனாலயத்து
நந்துதீப நெய்கவர்ந்து மேற்புழுவதாய் நண்ணிச்
சுந்தரம்பெறு பூசநீர்தோய்ந்த வன்பதந்தோய்ந்
தந்தவானுல கடைந்தன னமரர்கள் போற்ற. (உ0)

மேவுபூசமு மித்தகை வியனுடைத் தென்றன்
பூவினன்றனை நாரதன்போற்றி மற்றன்னோன்
யாவனுங்கவன் சரிதைகளியாவு மின்றெனக்குத்
தாழ்விலா வகைசாற்று கென்றன்விதி சாற்றும். (உக)

இயங்குமாதவன் சோலைவெள் ளிணர்த்துக டோய்ந்து
தயங்குமிந்துவிற் றோன்றிடச் சரோருகங்குவிந்து
பயங்குலாவு சேதாம்பல்கள் பகலின்வாய் திறக்கு
நயங்கொள் சண்பகவதியெனத் திகழுமோர் நகரம். (உஉ)

கிளக்குமத் திருநகரினிற் கிளர்மறை யொலியுந்
துளக்குமொன் மனைத்தவசமுந் துதைந்துவிண் முகட்டை
யளக்கும் வேதியர் வீதிகள்பலவுள வவற்றோர்
வளக்கொள் வீதியில் வினதனென்றுள னொருமறையோன். (உக)

சொற்றிடத் தனிவேதியன் றனக்கொரு துணைவி
மற்றவட்குறு மியற்பெயர் மாலினியென்ப
வெற்றிவேலை நீடிதுசத்தி யிலையெனவேலை
சுற்றுமாநிலஞ் சொலவுறுதுணை மதவிழியாள். (உச)

திருவின்மிக்கவள் வனப்பினி லிரதியிற் சிலைவேண்
மருவுசிற்றிடை யிரதியுநாணுமம் மடந்தை
பொருவின் முற்றிழை யொடுநகை முகத்தொடும்போந்து
தெருவினுற்றிடு மடிக்கடி திகழ்கடை நிற்கும். (உரு)

சேர்வையாநுதல் வசிகரதிலகத்தி னுனும்
போர்வையா மலர்க்கூந்தலினுனுமேற் பூட்டும்
வார்வைகாமர் வெம்முலைத் துணையானு நீள்வாட்கண்
பார்வையானு மாதவனையுங் கைவசப்படுத்தும். (உசா)

அடுத்த காமுகர் மகிழ்வுற வணிபெறு தனங்கள்
கொடுத்து வாங்கிடு வாணிகம் புரிந்திடுங் கூடித்
தடுத்தகாதல னிகைசந்து தன்மொழி வழிசரிப்பத்
தொடுத்தமந்திர மருந்துகளிசைத்தனள் சூழ்ந்து. (உஎ)

அந்தவாணுதல் வயிற்றினின் றவதரித்த வன்றோன்
முந்துரைத்திடு மறையவ னனையவன் முளைத்து
நந்தவில்லதோர் பிறையென நாடொறும் வளர்ந்தான்
மைந்தன்வஞ்சகன் றந்தையான் மறைபயின் றிடுமால். (உஅ)

வேறு.

தேவவிரதனவனும மொரு நாளுரைத்தல் சிந்தையினின்
மேவுற்றிலது கண்டுதனி வெகுண்டான் முதையவன்றன்னைத்
தாவில்கம்பத்திடைப் பாசந்தன்னாற் பந்தித்துற நிறுத்திப்
போவதானன் புறநாட்டிற் பொருந்துங் கயவர்கணங்களொடும். (உகூ)

அங்கணிலகுபதி தொறுஞ்சென்றங் கங்கிசைந்த களவியற்றித்
திங்கட்பிறை நீள்வனைத்தலையிற் றெரிவதெனத் தண்போரேறிச்
சங்கமிருந்த பிறைக்கதிரிற்றரளஞ் சொரியும்வயற் பொன்னித்
துங்கவள நாடணைந்த தனிற்றுலங்கு மருதூரிடைப் புகுந்தான். (௩0)

அந்நாளி ல்தும்விழாவதனு லந்நாட்டி லகுமனிதரொடும்
பொன்னுட் டிறையுஞ் சுரர்குலமும் பூதகணமும் புடைசூழ
மின்னார்சடையோன் பவனிவரும் வியப்புநோக்கி யவனெதிரே
துன்னுநின்ருன் றண்புடைசூழ் சோரமூடர் தூர்த்தரொடும். (௯௧)

கண்டான் கதிர்செய்மணி முடியுங்கவினர் மகரகுண்டலமு
மெண்டானிசையாக் கனகவிலை யெய்துந்தரள மணிவடமுந்
தண்டாவயிரக் கங்கணமுந் தயங்குமணிப் பொற்கவசமுமே
லுண்டாமெவையும் பணிவனமாறேங்கு மகுடமுதற்பணியும் (௯௨)

இந்தப்பணிமாத்திரங் கொடுநாமேகல் பெரிதன்றின்னுமுறு
மெந்தப்பணியுங் கொளல்வேண்டு மிதற்காலயத்தி னதிகாரங்
குந்தத்தடக்கைப் புரவலன்பாற் கோடல்வேண்டு மெனத்தனைச்சூ
ழந்தப்பெரியோருடன் சூழ்ந்தானவரு மதுதானெறியென்ருர். (௯௩)

வேறு.

கிட்டினரசன்றனை யிவ்வாலயத்திற் கிளர்தரு மெவர்களுந்தங்கட், கிட்டமாம்படியே நடத்துகின்றனர்க ளெனக்கதன் விசாரணையுதவிற், றிட்டமாவியற்றும் பூசையும் விழாவுந் திருப்பணிபலவுநான் செய்வேன், மட்டவிழலங்கன் மன்னவென் றுரைத்தான் மன்னனு மிசைந்தது கொடுத்தான்.

அன்னவனிடைநின் றாலயத்தடைந்தா னணிகிளராலயமதனின்
முன்னுறு மெவருமன்னவனரசன் மொழிப்படி யணைந்தவாறுணர்ந்து
துன்னினர்சூழத் தன்வரவவர்க்குச் சொல்லினன் கேட்பனகேட்டான்
றன்னுரை கடவாதடக்கினன்சிலரைச்சிலர்தமைத்தழுவினன்மொழியால்.

வேறு.

சந்தமுறுமறுகிடத்தோர்மனையினிடைக்குடிபுகுந்தான்றனிப்பொற்கோயில்
வந்திறையோன் பரிசனமுந்தனையகலாத் துணைவர்களு மருங்கினீடச்
சிந்தைதனிற்கரவடமுங் கரமதனிற்செபவடமுந் திகழநாளு
நந்தலிறன் னதிகாரமங்கொரு மண்டபத்திருந்து நடத்துகிற்பான். (௯௪)

சிலபகலினிதியிருக்கு மிடத்திறெனு பணியிடமுந் தேர்ந்தான் றேர்வுற்
றிலகுமவையாவு மொருநிசியினிடைக்க வர்ந்தேகற்கிலக்கம் வாயா
தலகுபெறு பதநோக்கித் தனக்கயலேனக்கிடு பதத்தினமருநாளில்
வலமருங்கி னூழ்வினையாற் பிளவையெறு மொருவிரண மருவிற்றம்ம. ()

ஆயதனிலீயணுகா தாலயத்துளிருந்திடும்போ தருகார்தீப
நேயமதிலொரு துளிதொட்டதன் மீதுதடவினன்மே னிசிவந்துற்ற
தேயதனின் மனைக்குறுங்கா னெறிதனிலோர் பணிநீண்டிற்றேகலுற்ருன்
காய்ழற்கட் பிறையெயிற்றுக் கிங்கரர்பின்னங்கு நின்றுகாலன்றன்னூர், ()

தூண்டுசுடர் நெய்யதனிற் றுளிகவர்ந்து மருவுசிவத் துரோகந்தன்னு
லாண்டிருபத் தெண்கோடி நரகிடத்தும் வீழ்ந்தாற்றியவனிமீது
மீண்டிழிஞருயுதித்து நூறுபவ நூறுபவம் வெய்யநாயாய்ச்
சேண்டிகழ் சீரிடைமருதிற் பின்புமலப்புழுவாகிச் செனனஞ்செய்தான்.()

ஆங்கனைய வடிவுகொடு கிடந்திடுநாட் பூசவிழாவணைந்ததந்நா
ளோங்குபுகழ்ப் பொன்னிபடிந் தொருமறையோ னகர்க்கணைய வொதுங்
குங்காலை, நீங்கரிய நெருக்கதனிலொருவர் மிசையொருவர் விழுநிகழ்ச்சி
நோக்கிப், பாங்குசிறி தொதுங்கினன்மற் றொதுங்கலுமப் புழுவின்மிசை
ப்பதம்வைத்தானால். (௪0)

பொன்னிதனிற் பூசநாட்படி யீரப்பதம்படலாற் புழுவினுக்கை [கண்
தன்னைவிடுத்திமை யோர்தமுருவணைந்து புடையிரண்டுஞ்சமர் செய்வாட்
மின்னிடைப் பொன்னரமகளிர்துணைக்கவரி யிரட்டவெழில் விமானமேறி
மன்னுசுரர் கணத்தினொடுமௌவில்பெருமகிழ்ச்சியொடும் வாழுற்றான்.()

வேறு.

இந்தவேதியன் முன்செய்த தீமையு மியமனூருற்
றந்தவெந்நரக மெங்குமலைந்ததும் பின்னுமீண்டு
வந்ததும்வாழுற்ற வளமையுமுணர்ந்தாயன்றே
நந்தகனென வோர்மைந்த னவிலவன்கதைமேற் சொல்வாம். (௪௨)

தேவவிரதச்சருக்கம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# நந்தகச் சருக்கம்.

இழுமென்வெற் பருவிதன்னோ டிழிந்திடு முத்தும் பொன்னும்
பொழிமதக்களிற்றின் கோடும்புணரிவால் வளையுமூர்ந்து
வழிமடை மறிக்க நோக்கிமள்ளர்தங் காலிற்றள்ளுங்
கழனிசூழ் விதேகநாட்டிற் காபிலமென்னவோரூர் (க)

அந்தவண்பதியில் வாழ்வோனந் தணனொருவன் றூர்த்த
னந்தகனென்னும் பேராளுந்தக முடையானோர்ந்த
பைந்தொடிய னங்கிருேர்கள் பாலர்கள் சிலனைமாய்த்து
முந்தவர் பணிகள்கொண்டான் முற்பவந்தனிலும் வெய்யான். (உ)

அன்னவண் பணிகளீந்திட் டன்னமென் னடைப்பூங்கோதைப்
பொன்னனா ளவர்தம்மைப் புதுமணம் புரிந்தானம்ம

மன்னுமொவ் வொருவராக மற்றவன் மனைவியோளைக்
கொன்னுறு பகட்டினூர்திக் கூற்றுவன் கொண்டு சென்றான். (௩)

பிறர்மனை கற்பைமாய்த்தோர் பிறைநுதலாளைக் கொன்றோ
ரிறையவர்க் கிடரிழைத்தோ ரியல்சிவத் துரோகஞ்செய்தோ
ரறைதருமிவர்கண் மன்றலெத்துணை யாற்றினாலு
முறையுட னாற்றவாற்ற முடிவரம் மகளிரொல்லாம். (௪)

அவனுமிப்பவ மெலாமுன் னிழைத்தவனாதலாலக்
குவிமுலை மாதரொல்லாங் கூற்றினார் புகுந்தார்வல்லை
தவறுமிச் செய்கைநோக்கித் தளர்ந்திடு மன்னன் பின்னர்
நவிலுறேன் வதுவைமீது நாயெனத் திரிதலுற்றான். (௫)

திரிதருகாலை ஞாங்கர் தெரித்திடு துவசரீன்ற
வரிமதவேற் கணாளோர் மாதினைநெறியினோக்கி
யரிவைநீ யெங்குற்றா யென்றாதியிற் பழகினான்போல்
விரிசில கதைகளோதி மெல்லெனத் தொடிக்கை தொட்டான். (௬)

தொட்டலுஞ் சிறிது நாணந்தோன்றிட வொதுங்கினான்சற்
றொட்டினனாங்கு மெல்லவுயர் மறைக்குலத்தோ னீயான்
மட்டுவிற் பவரிற்றோன்று மடந்தையா விசைவன்றென்னக்
கட்டுரைத் திட்டாளந்தக் காரிகையவனை நோக்கா. (௭)

கோற்றொடி மாதிவ்வாறு கூறலுமனையோன் கேளாச்
சாற்றிடு நளினஞ்சேற்றிற் சனித்ததாற் குறைவேதேனு
மேற்றதோ நலனும்பொற்பு மிசைந்திடு பொருள்களெங்குத்
தோற்றிலென் னுயிரோயென்று தொடர்ந்திடு மாசைபூட்டி. (௮)

நம்புறுமவடன்னோடு நடந்துதன் மனையினுற்றாங்
கம்பலுற்றிடச் சேர்ந்தின்ப மார்ந்தினி திருந்தான் சின்னாள்
பம்பிடு வசைக்குமியார்க்கும் பயந்திடானிருக்குங்காலை
வம்புறு மலர்ப்பூங்கோதை பயந்தனண் மகவொன்றாங்கு. (௯)

சொல்லிடு மதலையீன்ற தொடர்பினிற் றோடமென்னு
மல்லனோயுற்றாள் பின்ன ரதுநிப மாகப்பற்றி
வல்லதன் றமர்கடேடி வந்துகண் டிழுத்துக் கொண்டு
செல்லுமா றென்னச்சென்றார் தென்றிசைக் காலதூதர் (௧௦)

ஏற்றவளிறந்த பின்னையிவடன்னைக் கொல்லவந்த
கூற்றுவனிதுவே யென்றக் குழவியை யுடலிரண்டு
கீற்றுறக் காலைப்பற்றிக் கிழித்துநீர் கடுகவோடு
மாற்றிடைத் தூவியிட்டா னல்லிடையனைய பாவி (௧௧)

கொன்றெறிந்த வன்பிணியில் லங்குறுகிடான் றுயரமெய்தி
யொன்றுநா மெண்ணத்தெய்வ மொன்றினை யெண்ணிற்றென்னுத்
தென்றிசை நோக்கிச்சென்றான் சென்றிடில் விடுமோபாவங்
கன்றிமின் மத்தநோவுங் கவனமும் நோவுஞ்சூழ்ந்த. (கஉ)

அந்தவெம் பிணிகளோர் பாலலைத்திட வலைவுற்றாங்கு
முந்துறுகு வடுங்காடு மொழிசில நாடுநீங்கித்
தந்திவெண் மருப்பும் பொன்னுந் தளாமுங் காந்தட்போது
முந்துநீர்ப் பொன்னிநாடுற் றுளிரிடை மருதுசேர்ந்தான். (கங)

சேர்ந்தொரு வீதிதன்னிற் கிடந்தனன் றெரித்தநோயா
லார்ந்திடத் தினந்தைப்பூச மாதலினங்கோர் பார்ப்பா
னீர்ந்துறைப் பொன்னியாடிச் செல்கின்றா னிவனைக்கண்டு
சார்ந்தரு கிரக்கமெய்தி யெடுத்தனன் றடக்கைதன்னால். (கச)

இன்னிசைப் பூசநீர் தோய்ந்தீர மார்தடக்கை யின்னான்
றன்னுடற் பிணிகளோடு சார்ந்திடு மிவன்றன்பாவ
மென்னவோ திடுநண்பஞ்சி னிராசிகட்கிலகும் வெய்ய
வன்னியா யிருந்ததாங்கே மற்றினி யுரைப்பதென்னே. (கரு)

தாங்கிய பிணிகளியாவுஞ் சரிதலுமுணர்வு தன்னோ
டோங்கிய மகிழ்வும் பொற்பு முற்றெழுந் திருந்தானன்று
னீங்கிவண் கிடந்தாய்முன்னை ரெந்தவூர் யார்நீயென்றா
னுங்கவற் கெடுத்துச்சொன்னா னடுத்ததன் செயற்கைமுற்றும். (கசு)

அம்மறையவனுஞ் சூழுற்றவரு மவ்வுரையைக் கேட்டு
விம்மிதமடைந்து பூசமேன்மை யீதென்று சென்றா
ரிம்மறையவனும் பொன்னிக் கேகிநீர் படிந்தேநூர்ந்த
செம்மலை வணங்கலுற்றான் றிகழ்கரு மலையென்றேந்தி. (கஎ)

பின்னருஞ் சிலநாளந்தப்பெரும்பதி யிடந்திலின்ப
மன்னுறவிருந்துமீது மருதநன் னிழல்வைகும்
பொன்னலர் கடுக்கைவேணிப் புண்ணியனருளானீடு
நன்னர்செய் வெள்ளிவெற்பினண்ணி வீற்றிருப்பதானான். (கஅ)

இத்தகையவரும் பூசத்திலங்கெழிற் பொன்னிதோய்ந்தோர்
ரத்தமுங்காலுமேற்பட் டரனருளடைந்தா ரென்னிற்
பத்தியிற் படருமாறு படர்ந்துமூழ்கினர்களிட்ட
சித்திபெற் றிடுமொன்னத் தெரித்திட வேண்டுங்கொல்லோ. (கசு)

என்றிருக் கிறைவன்கூற நாரதனிலங்கவ் வூர்க்குச்
சென்றிடு திறனுஞ்சென்று செய்திடு திறனுமூழ்கிந்

துன்றிடு பயனுநன்கு துலங்கிடச் சாற்றுகென்று
னன்றிசைக் குதுங்கேளென்ன நவின்றிடுங் கலைமான்கேள்வன். (உ0)

நந்தகச்சருக்கம் முற்றிற்று.

---

உ
சிவமயம்.

# பூசமகிமைச்சருக்கம்.

ஆதிநாளினி லுரோமச னிடைமரு தமர்ந்த
சோதிநாயகன் மனமகிழ் தூய்விழா புரிதற்
கியாதுநா ளெனத்தேடி மற்றிது வெனநாட்டு
மாதிடத்தினை யுடையது மன்னுதைப் பூசம். (க)

மருவுசித்திரை முதலிய மதிதொறு மினிய
திருவிழாவுற நடந்திடு மத்திறந் திகழாவ்
வொருவரி யாவரு மின்புறவு ளுற்றுவித்தனர்கள்
விரவுமன்னவற் றுயர்ந்தது மேவுதைப் பூசம். (உ)

நத்தனுதியாங் கடவுளர் கணங்களு நவிலுஞ்
சித்தர்மாதவர் பூதர்கந்தருவருந் திணைக்கண்
மொய்த்த மாதவர் குலங்களுமுது புகழ்ப்பூச
மெத்தினத்துறு மெனத்தின மெண்ண லுற்றிருப்பார். (ங)

அந்தநாளுயர் தீர்த்தநல் கந்தநாளாக
முந்தைமற்றதற் கொருபதாய் மொழிந்திடுதினத்தி
னந்தவில் விடைக்கொடி யுயர்த்தெழில் விழாநடக்குஞ்
சந்தநீடு மவ்விழா நிகர்தரா தலத்தின்றும். (ச)

பதியினெங்கணு மெழில்புரிந் தியாவரும் பலவாம்
விதமுறுங்கலன் புனைந்துறுகிளை யொடுமேவிக்
குதுகலத்துடன் றிரிவர்கள் குலமனையாவும்
புதுமணம் புரிந்திடுமனைபோ லினிதிலங்கும். (ரு)

ஏகநாயகன் மறுகிடைப் பவனியுற் றெய்து
மோதைகேட்கு முன்மைந்தரு மகளிருமோது
வாகுநீண் மனையவரவர் செய்தொழின் மறந்து
மோகமெய்தி மற்றெய்து வரவன்றிரு முன்னர். (சு)

வென்றிமால் விடையாதிய வூர்திகண்மீது
துன்றுமியாவரு மகிழ்வுறநிலாத் தொடங்குங்

கன்றுமானுறுங் கரனெழிலவ யவங்களின்மு
னொன்றுகண்டவர் கண்ணுறார் பெயர்த்துவேறொன்று. (எ)

மின்னுறுங் கருமுகிலொலித்திடு வதும்வேலை
முன்னுறோதையும் பல்லியமுழக்கினு ளடங்கும்
துன்னலந்தன்பர்கள் போற்றிடு துதியினு ளடங்கு
மன்னபேரொலிய நகரவென்பது ளடங்கும். (அ)

மண்டபத்தின் மீதினுமெழின் மாளிகைமீதுங்
கொண்டன்மேவு கோபுரத்தினு மரத்தினுங்குலவு
வண்டலத்தினு மசைவற நிற்பர்கள் மகிழ்வா
லண்டர்நாயகன் திருவெழிநோக்குறு மவர்கள். (கூ)

அரக்கர்வானவர் மானுடரசுரர்க ளியக்கர்
பெருத்தமெய் யுடைப்பூதர்கள் பிறரிவர்மகளிர்
வருக்கமியாவரும் விரவினர் மறுகிடைமிடைவார்
நெருக்கினு தலரிடித்திட நிற்பர்கணிருபர். (௧0)

அவ்வெழிற் றிருவிழாவினுக்கே கிடுமெறினர்
திவ்வியந்தரு போனகஞ்செழு மறையவர்க்கும்
ஈவ்வியங்கை யானடியர்க்கு நல்கிமேற்பஞ்ச
கவ்வியம்புறத் தகத்தினுங் கலந்திடச்செய்து. (௧௧)

நல்கியாத்திரா தானமு நான்மறையவர்தஞ்
சொல்லுறும் விடையேற்றுமேற் சுற்றமுமனையுஞ்
செல்வமைந்தருந் துணைவருந் தொடர்ந்திடச் சிவன்முன்
புல்லுநெஞ்சொடு மகிழ்வொடும் போந்திடவேண்டும். (௧௨)

போனபின்னரத் தலத்துறை புண்ணிய தீர்த்த
மானவற்றெலாம் படிந்தெழுந் தங்ஙன முதவுந்
தானமுங் கொடுத்ததற்கு மேற்றனி மருதிடத்து
ஞானமூர்த்தியைப் பணிந்திட வேண்டுமு னனுங்கி. (௧௩)

பணிந்து பொன்னொடு துகில்களும் பணிகளுமினிய
மணங்குலாவுறு வில்வமு மலர்களும் பிறவு
மிணங்கு மன்பொடு தத்தமக்கியைந் தனவுதவி
யணங்கு பாகனைப் பூசனையாற்றிட வேண்டும். (௧௪)

சிதவிடைக் கொடியேற்று நாண்முற் றசதினமு
மிதமளித்திடு பொன்னி தோய்ந்திடை மருதிடத்து

மதிதரித்தவற் பணிந்தெதிர் மௌனமாய் வலம்வந்
துதவல்வேண்டு மெய்யன்பர் கட்கோதனம் பிறவும். (கரு)

அனுதினம் புகழறிஞர் பாலத்தல புராணம்
வினவியன் னவர்க்கிருநிதி வீசிட வேண்டும்
புனிதனன்புறு கூவிளத் தருமுதற் புனல்விட்
டினிதுசூழ்ந்தெதிர் போற்றியென் றிறைஞ்சிடல் வேண்டும். (கசு)

பன்னுபூசநா ளாண்டுறை தீர்த்தங்கள் பலவு
முன்னர் மூழ்கிமேற் பொன்னியின் மூழ்கியந்தணர்க்குச்
சொன்னதானமு மளித்துமேற் றாய்விடை மீது
மன்னுமேக நாயகன்றனை வணங்கிடல் வேண்டும். (கஎ)

பத்துவைகலு முபவசித்திருந்து மேற்படு நா
ளத்தனன்பர் சூழிருந்தன மருந்திடல் வேண்டு
மித்திறத்து பவசித்திடற்க சந்தரா மென்னிற்
றுய்த்திடத் தகும்பால் பழந்தூயநுண் பிண்டி. (கஅ)

புகலுமித்தகை நோற்றிடிற் புவிமிசை யவர்க
ளகமதிற்குறித் தவையெலா மொல்லையி னடைந்து
சுகமுறப்பல நாளிருந்ததற்கு மேற்றூய
திகழ்மதிச் சடைப்பரன் பதம்பெறுவது திண்ணம். (கக)

ஏகவாரமுன் போர்பல னெய்துவ ரளவில்
வாகுமைந்தர் வேண்டினோ ருவர்வரைந்திடல் வேண்டு
மீகைவேண்டினோர் துயிலுடனென் னெய்மூழ் கிடுதல்
பாகுவெள்ளிலை விடுத்திடில் விரைவினிற் பலிக்கும். (உ0)

மன்னுதம்பதிக் கேகுநாண் மருதநாய கன்றன்
முன்னருற்ற நுமதிபெறச் சென்றுமுற் குலத்தோர்க்
கன்னநல்கியவ் விடைமரு தண்ணலுக் கிசையப்
பன்னுமர்ப்பிதஞ் செய்திடிற் பூரண பலனே. (உக)

இந்தவா றன்றித்தத்தமக் கிசைந்தவா றெய்திச்
சந்தநீள் விழாநோக்கினோர் தாமுமேற் சூழ்ந்த
பந்த பாசமும் பிணிகளும் பற்றறத் தொலைந்து
நந்துநீ ளிடையின் புறுநணுகுவர் கயிலை. (உஉ)

இத்தலக் கதைபடிப்பவர் கேட்பவ ரெவர்க்கும்
பத்துநூறு கன்னிகையரு மனைகளும் பசுவுந்

தத்தஞ்செய்திடு பலன்களுஞ் சகத்திர வருடங்
துய்த்தலின்றி மாதவம் புரிபலன்களுந் துன்னும். (௨௩)

என்னநான் முகனிசைத்தலு நாரத னிறைவ
துன்னியானு மத்தலத் தெழிற் பொன்னிநீர் தோய்ந்து
மன்னுமீசனைப் பணிந்து சில்வரங்களு மடைந்தே
னின்ன மான்மிய மறிகிலேனின்று நன்கறிந்தேன். (௨௪)

இலங்கு பூசமு மணிமையினைப்பிடு திறத்தா
னலங்கொ ளந்நகர்க் கெய்துகேளுமே யென்றிறைஞ்சிச்
சலங்கொடாமரை மேலினுன் விடைகொடு சார்ந்தான்
புலன்க ளைந்தையும் வென்றிடு புனிதர்களுடனும். (௨௫)

வேறு.

தண்ணருந் தவர் தம்மொடு
நண்ணி யந்நகர் நாரதன்
விண்ணி னோங்கிசை மெய்விழாக்
கண்ணி னோக்கிக் களித்தனன். (௨௬)

பொன்னி மாநதிப் பூசநீர்
தன்னி னும்புறஞ் சார்ந்திடு
தென்னி சைந்திடு தீர்த்தமும்
துன்னி யின்புறத் தோய்ந்தனன். (௨௭)

மேய வச்சுவ மேதமாந்
தூய நீள்வலஞ் சூழ்ந்தனன்
சேயி னத்தன் றிருப்பத
மேயு மன்பொடி றைஞ்சினன். (௨௮)

திறத்து றுந்துதி செய்தனன்
குறித்திடும் வரங் கொண்டனன்
செறித்தி டோகைதினை னத்தனன்
புறத்தி னெய்துழிப் போயினன். (௨௯)

வேறு.

இணங்கிடெழிற் பூசமான்மிய மிஃதாமிதுகாறு மினிதுநீடு
வணங்குலவு பிரமகைவருத்தனத்திலுளைத் தனவாமன்னுமிது
குணங்குலவு மற்றுமுள புராணங்கள் புகல்காதை கூறவெண்ணி
யுணங்கிய மீனுயிர்மருவியு ருத்திராகிய கதையீண் டோதுவாமால். (௩௰)

பூசமகிமைச் சருக்கம் முற்றிற்று.

---

சிவமயம்.

# உணங்கன் மீனுயிர்பெற்ற சருக்கம்.

உருத்திர புவனந்தன்னி லோதிடு மலகிலாத
வுருத்திர ருளர்மற்றந்த வுருத்திரர் தம்மிற்கோடி
யுருத்திரர் செயலொன்று லங்கொருபுடை யிருந்தார்தங்க
ளுருத்திர நோக்கியெண்ணு றொருவரோ டொருவர்சொல்வார் (௧)

பரமனை நிகர்வோ நாமப்பரனும் வேறல்லனம்மி
லொருவனே யாகுமென்ன வுரைத்தன ரஃதோர்ந்தீசன்
மருவுமற்ற வனைநோக்கி மதித்திடா தெம்மைநீவீர்
கருதிய திறத்தான் மீனாய்க் கடலினுற்றலைக வென்றான். (௨)

வாசமென் கடுக்கைசூடு மறைமுத லினையகூற
மாசறுமவருமஞ்சி வணங்கிநின் றேத்தியெங்க
ளீசனே மதவுண்டோர் களியானையு மதித்திடாமற்
பேசுமாறென்ன வீங்குபேசினோ மதமேற் கொண்டு (௩)

கருணைசெய் தெளியவெம்மைக் காத்தியென் றிரந்தாரீசன்
றிருவிடை மருதினீவிர் தெரித்ததாமென்று சென்றான்
பான்மொழிப் படிமற்றன்னோர் பரவையிற் சிறுமீனாகித்
திரிதரலுற்றார் சென்று திகழொருகுழுவாய் மன்னோ. (௪)

சிலபகல் சென்றபின்னர் சிவபரனருளால் வேலை
யலைதரு கோடிமீனு மாங்கொரு திமிலனேகி
யிலகொரு வலையிற்பற்றி யெடுத்துநன் குணக்கியோலை
பொலிதருபாயினூடு பொதிந்தொரு பொதிசெய் திட்டான். (௫)

சாற்றிடு மதனையங்கோர் சிறுமகன் றாதையில்லான்
போற்றிடு சத்திமுத்தத் திருப்பவன்போந்து பொன்னிந்
தேற்றி யங்கிடுமோ ரேற்றினேற்றி மற்றதனைக்கொண்டு
தோற்றுதற் போல்வார்தம்பின் றொடர்ந்தனன் சென்றான்மன்னோ. (௬)

தெரித்திடு மொருநாள் சாய்ந்து திகழுவான் பிறையும்வாழைக்
குருத்துமோர் கதலிபோலக் குலவிடை மருதினெய்தி
மருத்தடங் கண்ணிமார் கள்மருவு மாலையத்தின் றென்பாள்
லுருத்திர தீர்த்த வாவிக்கொரு புடைதள்ளி யாங்கு. (௭)

உடனணைந் தவர்களோடு முறங்கின னவர்களியாருங்
கடன்மிசை யிரவிதோன்றுங் காலைமுன் னெழுந்துசென்றார்
திடமிலனான வந்தச் சிறியனும் விழித்தான் பார்த்தான்
குடவயிறோடி நின்றுகூவினு னழுது மீண்டான். (அ)

ஆங்கெதிர் கண்டோர்தம்மை யழைத்தன னெவருநேரார்
நீங்கினின் றினியென்செய்வா னெடிதுளமருளுங் காலை
யோங்கு ருத்திரர்க்குமுன் னுணாைத்திடு முறையினாலே
வாங்குவின் மேருவாகரு மருத்தாயகன் மற்றெய்தும். (கூ)

வேறு

பின்னலொன்றினிற் சுற்றியமகுடமும் பெரிதுந்
துன்னுறப் புனைநீறு மேற்றுவள முந்நூலும்
பன்னுசூல வெம்படையு மோர்வெண் பொடிப்பையும்
மன்னவந் தெதிர்நின்றனன் வயங்குகோ வணத்தான். (க0)

தனியனாகிநீ யழுவதென் சாற்றுக வென்று
னனையன் சத்திமுத்தத் துறுபரதவ னடியே
னெனைவிடுத்தன ரேகினரொன் றுடனணைந்தோ
ரினைய மீன்பொதி யேற்றுவார்க் காணென் வேறென்றான். (கக)

கொன்றையா னடிதேறுடன் குறுகிநின் னூருக்
கின்றுநாளை நின்னன்னையைக் கொணர்ந்து மீளிதனை
மன்றகோடி கண்ணுறப் பொதிவாய் திறவிப்போ
தென்றிசைத் தனனை யவன்றிறந்தன னிசைந்து. (கஉ)

அகிலகாரணன் றிருவிளையாடலி யாரறிவார்
புகலுமீனெலா முயிர்கொடு பொதியினின் றெழுந்து
தருமவ்வாவியிற் பாய்ந்தொரு கணத்திடைத் தம்மை
நிகரிலாச் சலசரங்களாய் நிலவியாங்குடனே. (கங)

முண்டநாட் டமீரிருபுய முதலிய வடிவங்
கொண்டு ருத்திரராகி யோர்வாவியிற் கோடி
யெண்டெழுஞ் சுடராதவ னெழுதல்போ லெழுந்தாங்
கண்டர் போற்றிட விமானமுற்றர னுலகடைந்த. (கச)

நீடு புண்ணியஞ் செய்திடு நீர்மைய ரேனுங்
கேடு வந்திடுங் கால மெய்திடின் மதிகெடுவர்
நாடு வெம்பவ மலகில நவில்பவ ரேனும்
பீடு பெற்றிடுங் காலமேற் பெறுவர் நன்மதியே. (கரு)

திரைத்தடங் கடற்கயல்க ளாய்த்திரிந் துலர்ந்தாங்கு
விரித்திடுந் தனிவாவி யாய்விளங்கு தன்னிடஞ்சே
ருருத்திரப் பெயரினர்க்கு முன்னுரு வுதவியதாற்
றெரித்திடன்னவர் பெயர்கொடு திகழுமத் தீர்த்தம். (கசு)

அன்ன தீர்த்தத்தினருகினி லமர்ந்திடு மீசன்
மன்னு நல்லுயிர் போயின வுணங்கலாமீன்கள்
துன்னு மாவியுமுருவமுந் துலங்கிடும் வண்ணம்
நன்னர்செய் தாலினுன்ம நாயகனென நவில்வர். (கஎ)

ஈசனூர்தமை மதித்திடாது ருத்திர ரிசைத்த
காசினூற்கடன் மீனமாய்க் கவினிடை மருதற்
ருசிலாததம் வடிவுபெற் றிலங்கிய தறைந்தேம்
பேசுவா மினித்தமனிய வளவனீள் பெருமை. (கஅ)

உணங்கல் மீனுயிர்பெற்ற சருக்கம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

## பொன்னுருவச் சோழன் சருக்கம்.

---

திறந்திடப்பொதி மீனெலா முயிர்பெறச் சென்ற
தறிந்துமீன் விலைச் சிறுமகனச் சமும்வியப்பும்
பிறந்த நெஞ்சினன் செஞ்சடைப்பிரானை முன்னேக்கி
யறைந்திடப்படு விஞ்சையோ வையநீ செய்தாய். (க)

பாமுறுஞ் சுமையில்லையேற் பரித்திடு மீனைய
வெருது துள்ளுமாவிதாகியா னென்செய்வே னென்றுன்
மருதவாணனிங் கிலகுமிட்டிகை யெலாம் வாரி
யுருவுறப் பொதியடக்கிநீ வரிந்திடென் றுரைத்தான். (உ)

வள்ளல் சொற்படி கற்களைவாரிமுன் முறியா
வுள்ளுறப் பொதிந்தடக்கினு னேதுமெம் பிரானை
மெள்ளவை நெடுத்தேற்றலும் விமலனுங் கூடித்
துள்ளுறுநெரு தேற்றியூர் துன்னிடே கென்றுன். (ந)

அனையனேகலு மீசனு மாலயத் தடைந்தா
னினைதலுற் றவன்றுனு மெழிற் பதியடைந்து
வினையினெய்தியம் மனைக்கிடை மருதிடை யுற்ற
தனையுரைத்தனன் கேட்குமுன் னனையவ ளார்ந்து. (௪)

இறைவன் மாளிகை யடைவுறு வெதிர்முறை யிட்டா
ளறைகழற் றனியபையன் மற்றவடனை யழைத்துன்
குறையெவன் புகலஞ்சலை யென்றனன் குலவு
சிறுவனோடு மற்றனையளு மிறைஞ்சினர் தெரிப்பார். (௫)

கூடுதண்புகழ்க் காவல் கூறிடை மருதி
னீடுசெஞ்சடை யொருதவ னேர்ந்துறு பொதியின்
வாடன்மீனெலா முயிர்பெற வாவியின் விடுத்து
மாடுதுன்னு செங்கலிற் பொதிவாய்ந்திடச் செய்து. (௬)

வரவிடுத்தன னிற்றைநா ளென்றனர் மன்னன்
விரவுவிம்மிதத் துடனந்த வியன்பொதி தன்னை
மருவிநோக்குவ மென்றவண் வந்துநோக்குற்று
னிருநிதிப் பொதியாகி நீடிலங்கிய தன்றே. (௭)

செங்கலியாவையும் பசும்பொனாய்த் திகழ்வது நோக்கி
யங்கமேவுறு விதிர்ப்பின னான்றிரு விளையாட்
டிங்கிதென் றறிந்தவர்களுக்கிது மருதிறையோ
னுங்களுக் கருணிதியமே கொண்மினென் றுரைத்தான். (௮)

ஆடையாதிய வரிசைகள் பின்னரு மளித்துப்
பாடல்வண்டு சூழிதழியும் பணியும்வெண் மதியுஞ்
சூடுமெம்மரு தீசனைத் தொழுவனின் றென்னத்
தேடுபொன் னெழின்மக வொடுஞ்சென் றனன் மருதூர். (௯)

அனகனம்புயச் செய்யதாள் பணிந்து நின்றைய
தனியனே னருட்டாதை மூதாதை யாதியர்க
ளுனதருட் கிசைத்தொண்ட ராயுறைத லுற்றதனு
லெனையு நின்னடிக்கடிமையா யிசைத்திட வேண்டும். (௧௦)

ஞாலமீதிலென் மரபின்னு நடத்திலங்கு தற்கோர்
காலிலாமையா லறம்பல வியற்றியுங் காணு
தேலவோர் நிதிமகவு செய்திவன் வளர்க்கின்றேன்
கோலுமன்னதற் கருளுதியாவி நீ கொடுத்து. (௧௧)

என்றிரந்தனன் மற்றதற் கிடைமரு திறையோ
னென்றுமோதிடா திருத்தல்கண் டுணங்கன் மீனினத்திற்
கின்றுநல்கினை யுயிரினிதெனது பொன் மதலை
யொன்றிடும்படி யருள்கிலை யெனக்கசி வுற்றான். (௧௨)

இதழிவேணிய னருள்செயும் வளவனின் னீகை
மதலைபெற் றிடும்படி யுயிர்வழங்குது முனக்கீண

டேவிடாதென வளவனுஞ் சிறிதுள முகந்து
மதிதரித்தவ மீதுநின்மன மெனப் புகன்றான். (௧௩)

சென்னியுண் மகிழ்ந்திட வுயர்தேவர் தங்கணங்கண்
பன்னுகற்பகச் செழுந்துணர் மலர்மழை சொரியச்
சன்னிதித்தலை மருவிய தமனிய மதலைக்
கென்னை யாண்டிடம் மருதிறையவ னுயிர்ந்தான். (௧௪)

ஈசனுருயி ரளித்தலு மிலங்குமம் மதலை
தேசுலாவுபொற் சோழனுய்த் திகழ்ந்தினி தெழுந்தாங்
காசிலாலையஞ் சூழ்ந்தர னடிமல ரிறைஞ்சி
மாசிலா மறைமொழி கொடுவழுத்தி முன்னின்றான். (௧௫)

முன்னிறைஞ்சி நின்றருமறை முழக்கிடுந் தனிப்பொற்
சென்னி சென்னிமே லெம்பிரான் றிருப்பதம்வைத்திட்
டுன்னுமஞ் செழுத்தடை வுந்தன் னுண்மையு முரைத்துப்
மன்னுமை வகைபாசத்தி னியல்பையும் பகர்ந்தான். (௧௬)

பகர்ந்துசோதியா யிலங்கலும் பரவுபொற் சோழன்
றிகழ்ந்திடத் தனிச்சோதியுட் புகுந்தனன் றெரிந்தோர்
மகிழ்ந்துவாழ்த்தின ரிமைப்பிலோர் மலர்மழை சொரிந்தார்
சகந்தனிற் பணிந்தெழுந்து நின்றரசன் முன்சாற்றும். (௧௭)

வித்திலாமலே விளைந்திடச் செய்திடும் விமலா
கத்தனேனினை யன்றியோர் துணையிறி தறியே
னித்தராதலத் தென்வழி யிலங்கிடற் கினுமோர்
புத்திரன்றர வேண்டுநீ யருள்கெனப் புகன்றான். (௧௮)

வயவரிக் கொடியா யொருமக வளிக்குதுநீ
நயனுறும்படி நமதுபொற் கோயிலி னன்கு
செயவுறுந் திருப்பணி யெலாஞ்செயப் புகுகென்ன
வியனுறுந் திகிரிப்படை விடையவனி சைத்தான். (௧௯)

யாவர்கண்ணினு மெவற்றினும் மிருந்தினி திலங்குந்
தேவதேவநீ யத்திறஞ் செயுத வினையே
லேவுதற் கெளிதா மெனக்கென்ற னன்வளவன்
பாவைபங்கனோர் நந்தனனுத வினன்பரிந்து. (௨௰)

அந்தநந்தனன் வெண்ணகைச் செய்யவா யணிநீ
டிந்துவாணுதற் கொம்பனு ளெழில்வயிற் றுதித்து
நந்தவில்லதோர் பிறையென நாடொறும் வளர்ந்து
வந்துமாமரு திறையவன் மலரடி பணிந்தான். (௨௧)

பரவிநிற்கு மப்புதல்வனை நோக்கி யெம்பரம
னரசர்தம் பிரான்வருகென வழைத்து நற்கோயின்
மருவுகாவிரி சேணுற வடபுறத் தொதுக்கித்
திருவுறும் பணிபல குயிற்றிடெனத் தெரித்தான். (உஉ)

தெரித்தமாற்றமு மனையவன் றிருவடி மலரும்
விரிதலெழுந்திடு மகிழ்ச்சியு மனத்துற மீண்டு
பரித்திடும் புகழ்தந்தை முன்பகர்தலு மவனு
முரித்திறேறினன் பரமன் முன்னுரைத்ததுந் தனக்கு. (உ௩)

காவன்மன்னவ னிசைத்ததுங் கேட்டனன் களிகூர்ந்
தேவிபெண்ணில் பெம்பூதங்க டம்மையோ ரிரவின்
மாவியற்புகழ்ப் பொன்னியை வடபுறத் தொதுக்கித்
தாவின்மிக்கநீர் கொண்டிடக் கொள்ளிடஞ் சமைத்தான். (உச)

அற்பினோடியர் சிற்பநூலறிந்தவர் தமைக்கூஉய்ப்
பொற்பின் மேம்படு துகிலொடு பூண்களு முதவி
விற்பொலிந்திட நகரநீர் விதித்திடு மென்றான்
முற்பணிந்து சென்றன ரவர் பணிசெய முயன்று. (உரு)

நெடியவீதிகள் காவணநிகழ் சிறுவீதி
கொடிகொண் மாளிகை மணிமதில் கோபுரநெற்றி
படிபயின்றிடு மண்டபம் பாடல்செய் சாலை
நடநவின்றிடு மரங்கொடு நகைநிலா முற்றம். (உசா)

தருமசாலைகள் சாளர முதலிய சமைத்துப்
பரயனாலயத் தமைதிருப் பணிகளும் வகுத்தார்
மருமலர்த் தொடைமன்னவர்க் கிறைவனும் மகிழ்ந்து
திருமலிந்திடு நகர்க்குறு சாந்திமுன் செய்து. (உஎ)

முறையினிற் குடியேற்றினன் முதலவன் றனக்கு
நிறைவிதிப்படி பூசையு நித்திய விழாவு
மறுவில் பக்கமுற்றிடலொடு மதியுறு விழாவும்
நறுமையுற்றதைப் பூசநாள் விழாவதூஉ நடாத்தி. (உஅ)

முன்னிறைஞ்சிநின் றேத்தினன் முக்கணு னின்று
மன்னவுன் பணியாவையுங் கொண்டன மகிழ்வுற்
றென்னுனக்கினி நாந்தரத் தருவர மென்று
னன்ன மன்னனின் னடித்துணையருள் கெனவுரைத்தான். (உகூ)

இன்னுநீ சிலபகல் புவியிடத்து வாழ்ந்திடுதி
பின்னரீர்க்குதும் பதமெனப் பின்னரவ்வகையே

தன்னடிக்கண் வைத்தன னவனுட னவன்றந்தை
யென்னு மன்னவன் றன்னையு மிடைமருதீசன். (௩௦)

கனகச்செம்பிய னிருபர்தங் காவலனிவர்கள்
சனகனும் புரவலனிவர் தங்களை யணங்கி
யனகனொரு முனிவனை யடுத்திடு ருமலி
பனகவேணிய னருள்பெறு காதைமேற் பகர்வாம். (௩௧)

பொன்னுநவச் சோழன் சருக்கம் முற்றிற்று.

உ

சிவமயம்.

# சுணங்கன் கதிபெற்ற சருக்கம்.

முன்புறு சென்மத்திடை நரனாகி முக்கண்ணு
னின்புறு கோயிற்கண் ணதிகார மாற்றுங்கால்
வம்புறு வெவ்வினை செய்திறனாலே மறுமைக்கட்
டுன்புறு வெம்பவமெண்ணில வெய்தித்தோன் றேர்நாய். (௧)

சங்கமறைத் திடுவேலை யுடுத்ததரை மீதி
லெங்குமலைந்து வருநாளெழி லிடைமரு தெய்தித்
திங்கண் முடித்தோனடி பணியங்கோர் சிவயோகி
தங்குமடத்துறு முன்பு கிடந்தது தளர்வோடும். (௨)

கண்டு பெருந்தவ னெஞ்சமிரங்கிக் கடைதோறு
மண்டி யிரந்தெதிர் கொண்டடையும் பலியதுதன்னி
லுண்டு மிகுந்தது செங்கையினல் குவனுணவுற்றுத்
தண்டரு மத்தலை யேயுறுமோர்புடை சாராதால். (௩)

மாதவனல்கிய பிச்சை நுகர்ந்த வலியாலே
போதுறு காவிரி கங்கையிலங்கு புகழ்காசிக்
கோதறு வென்றிக்கதிர் மணிவேற்கைக் குலமன்னன்
காதலியாக வுதித்தது மாதோ கவினீடி. (௪)

அத்தனி வாணுதன் மின்னென முன்னுறுமறிவோடு
நித்தமு முன்மதியென வளருற்று நிகழ்செய்தி
முத்த மதிக்குடை மன்னவனேக்கி முறைநோக்கிச்
சித்தமகிழ்ந் ததவுற்றான் மணமுறை சென்னிக்கு. (௫)

மடமயிலன்னா ளணைமிசை யுற்றவள வன்றன்
னுடனுட லோரிருவகை யொன்றுயிரென வுறைசெய்யப்
படைமதவேளு மிரதியுமென்னப் பயில் காலை
யிடைமருதீசனை வழிபடவோர் நாளென்னுற்று. (௬)

காந்தன தனுமதிபெற்றோர் சிவிகையிற் கன்னியர்கணமோடு
நாந்தகமொளிர்தர வேந்தியவீரரு நணுகினர் புடைசூழ
வாய்ந்திடு தூரியமேங்க விரட்டுறவன் கவரிக்குலமுன்
னேந்திடுசீருறு காஞ்சியினின் றுங்கெழுந்தனள் செலவுற்றாள். (௭)

புகழிடைமாமருதெல்லை யணைந்திசை பொன்னியி னினிதாடித்
திசமுறுநியதி முடித்தனள் கால்கொடு சென்றனண்மடமெய்தி
மகிழ்வொடு முனிவரனேருற நோக்கிவணங்கி னனையிங்கு
மிகுபுகழ் மாதவவோர்ந்தனையோ வெனவின வினளெதிர்நின்றாள். (௮)

வேறு

முனிவனோர்ந்திலன் மயிலனாய் மொழிந்திடு நீயே
யுனையறிந்திடும் படியென வுரைத்தன னனைய
சினவுவேற் கண்ணியாள் முனர்நின் பலிச்சேட
மினிதருந் தியிம்மடத் தெதிர்கிடந்த தாயென்றாள். (௯)

அதுசெவித் தலத்துணை தலுமுனி வரனுகம
பதறிவீழ்ந்திலிக் கலைகளென் பயிறவ மென்றே
திதிகொள் சாதனையென் கொலோதேர் பலிச்சேட
முதவவுண்ட நாய்கொடும் பவமுற்றிடு னென்று. (௧௦)

நனைகொள் கொன்றையஞ் சடையினு னவில்பலியடிசில்
வினைசெய் வெம்பவ மறுத்திடுமென்றன மிசைந்தே
னனையகட்டினை மிச்சையென் றறிந்திலனையோ
வெனையிவன் கெடுத்திடுவதற் கிசைந்ததோ வென்றான். (௧௧)

என்றநாளுடன் கோயில்புக் கிடைமரு திறையோன்
மன்றலந்துணைச் சரோருகமலர்ப் பதம்பணிந்து
மின்றயங் கிடைத்தடமுலை விளங்கொரு புறத்தோய்
துன்றுமன்பர்தங் களைகணுஞ் சோதியே சரணம். (௧௨)

அவனிநீர் தழலநிலம் விண்ணுதவன் மதியம்
நவிலுமன் னுயிரென வொளிர்நாயக சரணம்
பவநிரஞ்சன நிராமய பராபர விமல
வுவமையில் புகழிடை மருதிறை சிவசரணம். (௧௩)

ஏற்றிடும் பலியருந்தினர் தமக்குமே லெய்துந்
தோற்றமுண்டு கொலென்றன னிலையெனச் சொல்லி

மாற்றில் சோதியாய் விளங்கினான் பரனதின்மாதும்
போற்றுமா முனிவரனும் புக்கிலங் கினர்புகழ்ந்து. (க௪)

முந்துநோக்கிடு மன்னவர் முன்னவ னருளைச்
சிந்தைகொண்டனர் நின்றனர் சிந்தினர் விழிநீர்
கந்தமென்மலர் சொரிந்தனர் கண்ணிமைத் திடாதோ
ரந்தரத்திடை யெழுந்தன நாதமோ ரைந்தும். (க௫)

போற்றுமா தவனுதவிய பிச்சையூண் புசித்திட்
டாற்றலா லொருசுனாங்கன் மேலணங் கெனத்தோற்றி
யேற்றினூர்தி தாளடைந்த வாறிசைத் தனமீது
சாற்றுவாந் திரியம்பக முனிவரன் சரிதம். (க௬)

சுனாங்கன் கதிபெற்ற சருக்கம் முற்றிற்று.



உ

சிவமயம்.

# திரியம்பகச் சருக்கம்.



மருவியகவின் மென்கொங்கை யணைக்குநுண் மருங்குலோங்கு
பொருவில் சீர்மணிப்பூணீர் புகழ்க்கலை நீதியொண்க
ணருளுறு முகவன்கல்வி யமைந்தநெஞ் சுதவிச்செங்கைத்
தருமமாதி னிதுவாழுந் தண்புனற் பொன்னிநாட்டில். (௧)

பாங்குறு நகரமொன்றிற் பனவர்தங் குலத்திற்றோன்றி
யோங்கிடு மொருவன்போலு முயர்திரி யம்பகன்மற்
றுங்கவனுமமன்று னருமறை முதனூல் யாவுந்
தாங்கிடு மனத்தன்சோதி தாளிணைக் கன்புபூண்டோன். (௨)

குலனுடனருளுஞ் செய்வங் கொள்கையு மேன்மைதானுங்
கலைபயி றெறிவிறேறுநீங் களங்கறு பதங்களுன்கு
நிலன்மலை நிறைகோல்பூவி னிலவுறு குணனுமன்பு
முலகிய லறிவும்வல்ல வொருகுரவனைக் கண்டேத்தி. (௩)

நணியுறு தாகமுற்றோர் நறியநீர் நாடுமாறுந்
துனிதரு பிணியினுழ்ந்தோர் மருத்துவற் றுருவுமாறுந்
தனிமுதிர் வெயிலிற் சார்ந்தோர் தண்ணிழறேடுமாறு
மெனவினை யகற்றியின்ப மீந்திடு குரவற்றேடி. (௪)

வேறு.

அனைய னின்னருடாங் கினனவனடிப் பிரியா
வினையுமுப் பொருளிராசியு நிகழ்ச்சியாய்த் திடுங்கான்
மனமதிற் றெளிவுறுமையிற் செம்மைமுன் வணங்கி
யினமுமுண்டு கொலென்றன னுண்டென வுரைத்தான். (௫)

சணமுறும்படி யின்றுமுன் னென்றலுங் கருத்தின்
மனையை மைந்தரை மனைவியை மற்றுளபொருளை
வினையிழைத்திடு மலகைகண்டக ரலபோல் வெறுத்துப்
புனிதமெய்த்தி யிக்குரவனே பொருளெனக் குறித்து. (௬)

நடக்குநாளிடைப் புகன்றிடு நற்றவ னருளா
லடுத்த பஞ்சினிற்றழ லெனவகத்தின் மெய்ஞ்ஞான
மடுத்ததங்கனம் வயங்குநான் மாதவனுள்ளத்
திடத்தின்மேவு சிற்பரத்தினிற் றொடர்ந்தமை சேர்ந்தான். (௭)

ஆதுமத்திறந் தெளிந்தினிமை யலிவ்வுடல் விட்
டேகுமென்றயல் பிரிந்திடா னிருந்தழி யனையோன்
றேசமுற்றது புனலெனத் தருவதென் றதற்குப்
போகலுற்றனன் மருங்கொரு போதுறு வாவி. (௮)

சென்று நீர்கொடு திரும்பிடச் சிறுவரைதாழ்ப்ப
மனற மற்றதன முன்பு முன்னிசைத்ததே வாய்மை
யெனறிநம் பொருணிலத்திடை யிலங்கிட வெழுதி
மின்றயங்கு வேணியன்பத மடைந்தனன யேலோன். (௯)

மாதவத்தினோன் புவியிடை வரைந்தவன் கவிதை
யோதுமோர் சழைக்கூத்தி யாங்கியல்பின் வந்துற்றாள்
காதினோலையில் வரைந்தணிந் தனளதைக் கலைத்துப்
போதல்செய்தனள் சிறிதயல் பொருந்துறு குடிசை. (௧௰)

வந்து நோக்கினன் மாதவனிலைமையும் வயங்கு
முந்து மண்டலத் தெழுதிய தழிவுறுமுறையுஞ்
சந்த முற்றகைப் புனலொடு விழிவிடு சலமுஞ்
சிந்த மற்றவனடி மிசைவீழ்ந்தனன் றிகைத்து. (௧௧)

விழுந்துமண் மிசைப்புரண்டனன் கலுழ்ந்தனன் மெல்ல
வெழுந்துபின் னுளந்தெளிந்தன னென்செய்வான் மறைநூன்
மொழிந்த வாறுமேற் செய்கடன் முழுவதுஞ்செய்தா
னழிந்திடவ் வெழுத்தின்ன தென்றறிந்திடற் காய்ந்தான். (௧௨)

துன்றினார் சொலாலனைய மெல்லியலெதிர் தொடர்ந்து
வென்றிமாதவன் செலும்பொழு தாங்குமே வற்றோர்
சென்றியாரென வினவினன் றெரிவைநான் சென்று
நின்றுளே னுண்மை தீட்டினனென்றன ணோர்ந்து. (௧௩)

அந்தவாசகங் கேட்டலுமிக மகிழ்ந்தவனை
நந்துமத்தின முதற்குரு வெனத்தனி நயந்து
சிந்தையுட்கொடு பிரிவிலனாகியே திரிவான்
கந்தவார் குழலனைய வாணுதலுளங் களிப்ப. (௧௪)

இன்னணந் திரிபவனவ ளாடிடு மிடத்திற்
பன்னுமந்திர வலியினாற் பணைகளும் வடமு
முன்னர்ப் பூணிடுந்தம்மிலே பறைகளு முழங்கும்
பொன்னளிப்பர் கண்டவர்மிகப் பூவையு மருள்வாள். (௧௫)

விரவுகாளைய னிவன்வரு விருப்பினை யறிவா
னரிவையே வலின்வைவர்க ளடிப்பர்கள வற்றைக்
குரவனுற்று தண்டனை யெனக்கொடு மகிழ்ந்திருந்து
முருவினிற்றழும் புறுமைகண் டவர் வியப்புறுவார். (௧௬)

செழியவேதிய ரிவனையோர் தினஞ்சிலர் வெளியின்
விழியினேக்கிநீ கூத்தியோ டயின்றனை மிகவென்
றிழிவுபேசவுஞ் சலிப்பிலனெறம் பெறுயிரமேற்
கழுதையும் பரந்திடுமெனக் கட்டுரைத் தகன்றான். (௧௭)

சுற்றுநாள் பலமுயலினுந் தொடங்கு மெவ்வினையும்
பற்றுநாள் பலனெய்தி னன்றேவெதிர் பலிக்கு
முற்றுசீர்த் திரியம்பக முனிவற்கித் துணைநா
ளிற்றதத் தனிக்குரு வருளெய்து தற்கம்ம. (௧௮)

கூடுமோர் பகலடைந்ததோர் கொற்றவ னவைமு
னீடுறுங் கழைவடத்தின் மீதிலங்க நின்றனையா
ளாடும்போதுநீர் தருகென வம்பொனீர்க் கலச
நீடுறுங்கரத் துற்றது நெல்லியங் கனிபோல். (௧௯)

நச்சுவாள் விழிப்பிறைநுதல் கரத்தினீர் நணுக
வச்சமுற்றுள மிரங்கின னிறங்கின ளனைய
விச்சைவேதிய னருகுறமே வியன்ன வன்று
ளுச்சியுற்றிடப் பணித்தன ளோலையை யுதவி. (௨௦)

மன்னிநீ வருவிருப்புநின் மகிமையுஞ் சிறிது
முன்னமோர்ந்தில வானாவுறு மூடரினிருந்தே
னென்ன வோதினும் பெண்ணறி விழிசகைத தன்றே
தூன்னுமென பெரும்பிழை பொறுத்தருள்கெனச் சொன்னாள். (௨௧)

அத்தபோதன னவளையுங் குருமொழி யதையு
முப்த்திறைஞ்சியவ் வெழுத்தினை நோக்கமுன் னுரைத்த
சத்தமேபுக லுண்மைமற் றன்னதைத் தழுவு
சித்தமேசிவ மெனத்தொகுத் திருந்தது தெரிந்தான். (௨௨)

அனையதன் பொருணுட்ப முந்திட்பமு மறிந்து
நினைவின் மேற்படக் குருபரனருளினை நினைந்து
தனைமறந்துநின் றுணர்ந்தச் சலதியிற் படிந்து
வனைதலுற்றிடு மோவியத் துறைந்தனன் மாதோ. (௨௩)

அந்தவாணுதலே வலினவளை விட்டகலுற்
றந்தண்மா மலரிதழி வாளரவம் வாழ்வேணி
யந்தமில்லரன் றனையுமை யவளுடனிலகு
மந்தமார் பலபதிகள் சென்றிறைஞ்சின னதன்பின். (௨௪)

வினையகற்று தைப்பூச நாள்வியன் விழாவிழைந்து
தனையிலங்கிடப் பூசனைதான் புரிந்திடுப
வனைநல் வெண்பொடி பூசகாதியை யிடைமருதி
னினிதிறைஞ்சவேள் பூசனண்ணுதவ னியன்றான். (௨௫)

மாலிலோங்கிய சிகரிகண் மதிமருங்கண்டு
சால்புமேவிடு மத்தலந் தனிமைமிரு கண்டு
சீலமைந்தனுக் கருளியைத திறங்கொள கற்கண்டு
பாலெனுஞ் சொலாளிடத்தனைப் பணிந்தனன் கண்டு. (௨௬)

உள்ளநெக் குருகுற்றிடத் துதித்துநின் றுசந்து
வள்ளவார் குழைப்பணை முலையுமை யெதிர்வணங்கிப்
பள்ளமுற்றிடு தீர்த்தங்கள் பலவினும் படிந்து
தெள்ளெழிற் றடந்தேர் முதற்சிறப்பெ லாநோக்கி. (௨௭)

விரவுபூசநாள் பொன்னியிற் படிந்திட மேவிக்
கருதுமால் விடைமேல்வரு கண்ணுத லிறையோ
னருதபற்றினன் வருதலுமவன்றனைப் பலர்கள்
சுருதிவாணர்கள் குழாங்கொடு சூழ்ந்தனர் புகல்வார். (௨௮)

வேணுநாடகிக் கடிமையாய்க் கழுதைகண் மேய்த்தும்
பூணிடுஞ்சுமை சுமந்துமாங் குழன்றநீ புகுந்து
மாணுறும் புகழ்ப்பூச நீராடவு மருகந்
தாணுவின் பதம்பணி யவுந்தகா தொழியென றுரைத்தார். (௨௯)

நிறைபெருந்தவ முனியவனென்னிலை மருகிடத்தி
னுறையுமீசனே யறிவனென்றிசைத்தன னுனக்கின்
றறைவனே யவனென்றன னுரைகேளீர் பெருமா
மறைதனுற்றிடச் செய்துபின் கேண்மென வகுத்தான். (௩0)

இகழ்ந்திடப்படு கூத்தியோ டயின்ற பாவொங்கு
மகழ்ந்திடுமென மொந்தலைந்த விவ்வந்தணன் பூச
முகந்துமுழ்கவு நின்னடியவர்கள் பாலுறவுந்
தகுநகொலோ விடைமரு துறைசங் கராவென்றார். (௩௧)

அண்ணறன் னடிக்கன்பு செய்பாவமு மறவொன்
றெண்ணினால் கண்மற்றிசைப்பது சரதமே யிறையோ
னுண்மை மாதவரிடத்துள முருகிடு மன்றே
வண்ணவானிளங்கன் றினுக்கிரங்கு தன்மான. (௩௨)

ஏற்றின் மீதெழிற் பொன்னியந் துறையுறையிறைவ
னாற்றல்சாலிவ னெனக்குமெய் யன்பனா நீவிர்
சாற்றுமன்னவை தகுந்தகுந்தகுமென வுரைத்தான்
போற்றுமியாவருங் கேட்பவிண் பொருந்திய மொழியால். (௩௩)

பூதலத் திடையோல மிட்டித்திறம் விதித்த
போதி லெம்பிரானருளினைக் கருதியப்புனித
மாதவத்திரியம் பகன் வருகென வழைத்துப்
பாதபங்கய முதவினன் பரமனி டருளால். (௩௪)

எண்ணுமீதலத் தொலியையு மெதிர்முனிவரனைக்
கண்ணுருமையு நோக்கினர் கலைமறை வல்லோ
ருண்ணடுங் கினரிரங்கின ருருகிநீர் சொரிந்தார்
விண்ணுளோர் மலர்சொரிந்தன ரியாவரும் வியந்தார். (௩௫)

அந்தரத்திடை முழங்கின வைவகை யொலியுஞ்
சந்தமாலயன் புரந்தான் றயங்குபா ரிடங்கண்
முந்துநின்றான் கருணையை முனனினர் துதித்சா
ரிந்தமான்மிய மெங்ஙனுண்டிசை பெறுந்தவத்தீர். (௩௭)
என்றுசூதமா முனிவரனிசைத்தலு மெதிரோ
துன்றுமாதவச் சவுனகராதியோர் துதிசெய்
தின்றுகாறு மோர்ந்திலம் புகலித்தல மகிமை
யொன்று மிப்பொழு துணர்ந்தன மோங்குநின் னருளால். (௩௮)
எடுத்தவாகமையின பயனினி தெய்தின மின்னுங்
கடுத்ததும்பிய மிடற்றனைக் கருதுமத் தலத்தி
லடுத்திறைஞ்சி டப்பெரிது மிங்காதர முடையோர்
தொடுத்திடின் னதறகொரு நெறிபுகல்கெனச் சொன்னார். (௩௯)
சொல்லிடன்னவை நோக்கிமேற் சூதனீர்விறைதன்
மல்லன்மானமிய மத்தல மருவிவீ ரனனிற்
செல்லுறுந வார்க்கியநெறி தேடிய வெராக்கு
நல்லதெண்ணினீ ரெண்ணியனை நாமுமித்திறமென. (௪0)
மாதவத்தினீர் வருகென வுரைத்தனன் மகிழ்வுற்
றேருதுமத்தலத் தொழவுறு விருப்பெனு முயர்தேர்
மீதிலேறினர் மாதவரியாவரும விளமபு
சூதனுயினன் சூதனுமுனி வரன் றலங்க. (௪௧)
கங்கையாதிய தீர்த்தஙகள் படிந்தனர் கலந்து
செங்கையான் றிகழ்தலங்களிற் சென்றினி தனையோன்
பங்கயத் துணையடிகளிற் பணிந்தனர் படர்ந்து
திங்களூர் பொழிலிடை மருதெனும் பதிசேர்ந்தார். (௪௨)
சேர்ந்துகாவிரி முதலிய தீர்த்தங்க டோய்ந்து
கூர்ந்திடந் நகர்வளன் முனிகூறிய வவற்றி
னூர்ந்திடா யிரமடங்கு கண்டதிசய மிகவுற்
றேந்து நல்லெழின் மணிதிகழாலய மெய்தி. (௪௩)
பனைமுலைக் கொடிபுரிதவப் பயனெனத் தோன்றி
டிணையில் சோதியைக்கண்டு முன்னிறைஞ்சின ரொழுந்து
தணிவிலன் பினின்றேற்றியத் தனிமுத லருள்பெற்
றணையிலானந்த வாரிவீழ்ந் தழுந்திமேன் மிதந்து. (௪௪)
சருதிடேக நாயகன்றனை யாண்டிடு களிற்றை
மருதவாணனைக் கயிலையென் றிசைத்திடு மருதைக்
குரவவார்குழற் பெருநலயாமுலைக் கொடியைப்
பரவலுற்றனர் சென்று சென்றவரடி பணிந்து. (௪௫)
சுற்றுமூவல னெய்திவே லிறையையுந் தொழுது
மற்றுமாங்குள தேவர் கடம்மையும் வணங்கிப்
பெற்றுமன்னவர் திருவருள் பின்னுமத் தலத்தே
யுற்றிடுந் தவம்புரிந்து நீடுளமகிழ்ந் திருந்தார். (௪௬)

திரியம்பகச் சருக்கம் முற்றிற்று.

——————